# இருபத்தொன்றாவது கருத்தரங்கு

# ஆய்வுக் கோவை

## தொகுதி-4

பதிப்பர்

டாக்டர் ச. அகத்தியலிங்கம்

டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி

டாக்டர் செ. வை. சண்முகம்

டாக்டர் சு. சக்திவேல்



இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்
அண்ணாமலைநகர்

1989

# இருபத்தொன்றாவது கருத்தரங்கு
# ஆய்வுக் கோவை

தொகுதி-4

பதிப்பர்

டாக்டர் ச. அகத்தியலிங்கம்

டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி

டாக்டர் செ. வை. சண்முகம்

டாக்டர் சு. சக்திவேல்

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்

அண்ணாமலைநகர்

1989

பதிப்பு: ஜூன், 1989



விலை:

| | |
|---|---|
| முதல் தொகுதி | ரூ 125/- |
| இரண்டாம் தொகுதி | ரூ 30/- |
| மூன்றாம் தொகுதி | ரூ 105/- |
| நான்காம் தொகுதி | ரூ 25/- |

கிடைக்குமிடங்கள்:

1) பாரி நிலையம்
59, பிராட்வே
சென்னை-500001

2) மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு,
மதுரை - 625 001

3) செயலாளர்
இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்,
மொழியியல் துறை,
அண்ணாமலைநகர் - 608 002

அச்சிட்டோர்:
ஸ்ரீ விநாயகா பிரஸ்,
சிதம்பரம்.



மூதறிஞர், செம்மல்

டாக்டர். வ. சுப. மாணிக்கம்

(1917—1989)

(தலைவர், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரிய மன்றம் 1981—1989 அவர்களுக்குக்)

# காணிக்கை

# முன்னுரை

தில்லை என எல்லையிலாப் புகழ்பெற்ற சிதம்பரத்திற்கே அணியாகத் திகழ்வது அண்ணாமலைப் பல்கலைக்கழகம். இப் பல்கலைக் கழகம் 'தமிழ் வளர்க்கும் பல்கலைக்கழகம்' என்று அடைபெற்று வழங்குவதிலிருந்து அதற்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு இனிது விளங்கும்.

இப்பல்கலைக் கழகம் பெருங்கொடை வள்ளல் அமரர் அண்ணாமலை அரசரால் நிறுவப்பட்டுப் பின்னர் டாக்டர் எம்.ஏ. முத்தையா செட்டியார் அவர்களாலும் இன்று டாக்டர் எம்.ஏ.எம் இராமசாமி அவர்களாலும் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

இந்தப் பல்கலைக் கழகத்துக்குப் பெருமை சேர்க்கும் வகையில் இங்கு பணியாற்றிய பெரும் தமிழ்ப் பேராசிரியர்கள் பலர் பலவகையாலும் தமிழுக்குப் பெருந்தொண்டு புரிந்துள்ளார்கள். எனவே இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் 21–ஆவது கருத்தரங்க மாநாடு இங்கு நடைபெறுவது மிகவும் பொருத்தமே. இம்மன்றத்தின் மூன்றாவது மாநாடு நடைபெற்றதும் ஆய்வுக்கோவை முதன் முதலாக நூல்வடிவில் அச்சிடப் பெற்று வெளியிடப்பட்டதும் ஆகிய பெருமைகளும் உடையது. இரண்டாவது முறையாக 1989–ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 2,3 ஆகிய இருதினங்கள் சிறப்பானமுறையில் இங்குநடைபெறவுள்ளது. இக்கருத்தரங்கில் படிப்பதற்காகப் பேராளர்கள் எழுதியுள்ள ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பே இவ்வாய்வுக் கோவையாகும்.

இவ்வாண்டும் இவ்வாய்வுக் கோவை நான்கு தொகுதிகளாக வெளிவந்துள்ளது. முதல் தொகுதியில் இலக்கியம் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும், இரண்டாம் தொகுதியில் இலக்கணம், மொழியியல் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும், மூன்றாம் தொகுதியில் நாட்டுப்புறவியல், வரலாறு, தொல்லியல், மானிட வியல், அறிவியல் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும் நான்காம் தொகு தியில் படைப்பிலக்கியங்களும் இடம் பெற்றுள்ளன.

இவ்வாய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளும் படைப்பிலக்கியங்களாகிய பாடல்களும், சிறுகதை, நாடகங்களும் வளர்தமிழின் பல்வேறு கூறுகளைக் காட்டுவனவாகவும் தமிழிய லோடு இணைந்த பல்துறை ஆய்வினைக் காட்டுவனவாகவும் அமைந்துள்ளன. அனைத்துத் துறைகளைப் பற்றியும் அறிஞர் பெருமக்களாலும் ஆய்வாளர்களாலும் எழுதப்பெற்ற ஆய்வுக் கட்டுரைகள் இவ்வாய்வுக்கோவைத் தொகுதிகளை அலங்கரிக் கின்றன. தமிழியல் ஆய்வுப் போக்கினை வெளிப்படுத்தும் வகை யில் நூற்றுக்கணக்கான ஆய்வுக் கட்டுரைகள் ஒவ்வொரு ஆண்டு ஆய்வுக்கோவையிலும் இடம்பெற்று வருவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

இவ்வாய்வுக் கோவையினைச் சிறப்பான முறையில் உரு வாக்கும் முயற்சியில் உறுதுணையாக இருந்தோர் பலர். அவர் களில் அச்சுப்பிழை திருத்தியுதவிய புலவர் இரா. கணபதி அவர் கள் குறிப்பிடத் தக்கவர். ஆய்வுக் கோவையின் இரண்டாம் தொகுதியினைத் திருத்தும் பணியில் ஈடுபட்ட அண்ணாமலைப் பல் கலைக்கழக மொழியியல்துறை ஆய்வாளர் திரு ம. சிவசண்முகம் குறிப்பிடத் தகுந்தவர். மூன்றாம் தொகுதி அச்சுப்பிழை திருத் தத்தையும் பிற பணிகளையும் செவ்வனே செய்த மொழியியல்

துறை ஆய்வாளர் திரு. ஆ. கோ. நடராசன் பாராட்டுக்குரியவர். இவ்வாய்வுக் கோவையின் நான்காம் தொகுதியைக் குறித்த காலத்தில் சிறப்பான முறையில் அச்சேற்றித் தந்துள்ள பெருமை சிதம்பரம் ஸ்ரீ விநாயகா அச்சகத்தாரைச் சாரும். இவர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றியை உரித்தாக்குவதில் பெருமகிழ்வெய்துகிறோம்.

அண்ணாமலை நகர்
20—5—1989

ச. அகத்தியலிங்கம்
தா. ஏ. ஞானமூர்த்தி
செ. வை. சண்முகம்
சு. சக்திவேல்

# உள்ளுறை

வரிசை
எண் பக்கம்

# இரயில் விடு தூது

*சி. அரங்கசாமி*

அ. ப. ஆ. கலை பண்பாட்டுக் கல்லூரி, பழனி

குறிப்பு:

தலைவன் தலைவியைச் சந்திக்கத் துடிக்கிறான்; ஆனால் கடமை அவனைத் தடுத்து நிறுத்துகிறது; தலைவியைச் சந்தித்துப் பேசி நீண்ட காலம் சென்றதால் அவளின் இளமை நினைவு நெஞ்சில் நீங்கா இடம்பெறுகின்றது. அதுபோழ்து கோயம்புத்தூரிலிருந்து தூத்துக்குடிக்குச் செல்லும் துரித இரயில் பேரிரைச்சலோடு புறப்படுகிறது. தலைவன் மனமும் விரைந்து செயல்படுகிறது. உடனே தலைவிக்குத் தலைவன் அந்த இரயிலையே தூது விடுகிறான். ஒவ்வொரு நிலையத்தின் இடப்பெயராய்வும் சிறப்பும் இங்கே இடம் பெறுவதைக் காணலாம்.

விநாயகர் காப்பு:

பொங்கும்பெருஞ் செல்லப் புகழரங்கன் தூதுமொழி
எங்கும் ரயிலே எடுத்துரையாய்—மங்களமாய்ப்
பஞ்சமலர் தூவியாம் பாதம் பணிந்தேத்தக்
கஞ்சமலர்க் குஞ்சரமே காப்பு.

நூல்:

1. பூமாதின் பேர்விளங்கப் புண்ணியச் சீரிலங்கக்
கூவாய் ரயிலேநீ குப்குப்குப் பென்னும்

2. புகைகக்கி மாணவர்போல் போகுமிடம் நோக்கிச்
சிகையலங் காரம்போல் சித்தரித்துச் செல்வையோ?

3. கோவை நகர்விடுத்துப் பொள் (ளா) (ஆ) ச்சிப் போகவிட்டு
நாவை அடக்கி நடந்தாய் உடுமலையும்!

4. யானும் உனைக்கண் டுரைத்தேனே தூதுமொழி
நீயும் பழநியில் நின்றென்னைக் கண்டதுபோல்

5. போயும் உரைப்பாய் பொல்லாத நூது (த்) (க்) குடி
காயும் கணவரைக் கண்டேன் கனிமொழி

6. பாயும் படுக்கையாம் பம்பரம்போல் சுற்றிநிதம்
தோய்ந்தும் துவண்டும் தொடர்மொழி விண்டுரைத்தார்

7. ஆய்ந்துயாம் பார்க்க அவர்மொழி யாரறிவார்?
சாய்ந்தாடும் பொம்மைபோல் சற்றும் பிசகாமல்

8. காதல் மொழியாளைக் காண விழைந்தவர்தான்
போதல் விரும்பிப் புகழ்பரப்பும் ஆபீசில்

9. ஐயா! விடுமுறை எப்போது என்பாராம்?
போய்யா உனக்கென்றும் பொல்லாத விடுமுறை?

10. தீபாவளி பொங்கல் இடைப்பருவம் தேர்வென்றும்
கோபமாய் மாணவர் கூக்குரல் இட்டபோழ்தும்

11. தாபமாய் லீவுகள் தந்தோம்யாம் போதாதோ?
சோகமாய் யானும் சுடர்க்கொடி காண்டற்கு

12. வேகமாய் எழுதி விடுமுறை கேட்பல்யான்!
ஆகமம் சாத்திரம் ஆராய்ச்சி என்றென்றும்

13. தேகம் இளைக்கத் திருத்தவம் வாரியார்பின்
தேடி அலைந்திட்டுத் தேர்வெழுதும் மாணவர்க்கும்

14. ஓடி உழைத்திட உன்னுவாய் என்றெங்கள்
பாசறையின் மூத்த பெருந்தலைவர் கூறுவரே!

15. ஆதலால் என்றன் அழகாம் ரயிலே! உனைப்
போதல் விடுத்தேன்நீ போய்வா விரைந்தே!

16 தொடர்போல் பெட்டி கொடுத்தும் விடுத்தும்
இடர்வராதே ஏற்றி இறக்கி இயக்குவாய்!

17. ஒட்டர்வாழ் சத்திரம் ஓடிநீ போனதும்
கிட்டா நறுநாற்றம் வீசும் தயிரையும்

18. திண்டுக்கல் வாழைத் திராட்சைப் பழங்கள்
கொடைரோட்டில் வேண்டும் கனிவகை யாவும்

19. அடைவோடு பெற்றே அடைவாய் மதுரை!
விடைபெறும் காதலர் வீறுமொழி கேட்பை!

20. நடைபயில் அன்னார் நடக்குங்கால் காணின்நீ
அன்னநடை கற்கப்போய் உள்ளநடை விட்டதையும்

21. என்னநடை இஃதோ? இளமையூஞ்சல் ஆடுவதேன்?
பின்னலிலும் போலி புகுந்தாடப் போனதுவோ?

22. கன்னலிலும் போலிக் கசிந்துருகக் காண்பைநீ?
என்ன தமிழோ எவரெவரோ பேசிநம்

23. கன்னல் மொழியைக் கசக்கிடப் பார்க்கின்றார்
சங்கமே வைத்து மொழிவளர்த்த மண்ணிலே

24. சங்கடமாய் வேற்றவர் சான்றுமொழி கேட்டு
விருதுநகர் சென்று விரும்புபிரி யாணி

25. சிறிதே அயின்றுநீ சீக்கிரம் செல்வாய்!
வறிதே பொழுதை விருதையில் போக்காய்!

26. பெருந்தலைவர் காமராசர் பேரும்நீ கேட்டே
திரும்பாமல் சாத்தூர் சடுதியில் செல்வாய்!

27. இருக்கன் குடிவாழ் எழில்மாரி ஆத்தாள்
திருக்கணம் வாங்கித் தினம்தினம் செல்க!

28. மருக்கொழுந்தும் பிச்சியும் மல்லிகை மொட்டும்
சிறுபிஞ்சு வெள்ளரி சேர்த்துநீ வாங்கிக்

29. குறுகநடந்து சிறுகையை நீட்டும்
சிறுவர்க் களிக்கச் சிறிதேனும் கொண்டுசெல்!

30. கோவில்மா நன்னகர் கோவில்பட்டி போனதும்
தாவில்நற் கொள்கையர் தாயாதி யோர்கண்டு

31. நாவில் முழங்கும் நற்றமிழ் பேர்அரங்கன்
கோவில் நகராம் பழநியில் கண்டனம்;

32. தென்பாண்டி நாட்டுத் துறைமுக நன்னகர்
மறைமிழ் பேசும் மடவாளின் தூதாகச்

33. சென்றனம் என்றேநீ செப்பியே செல்லுக!
வாஞ்சிநாதன் ஆஸ்துரை வென்ற மணியாச்சி

34. பாஞ்சைப் பதியும் கயத்தாறு சோழபுரம்
நெல்லை நகரும் நெருங்கும் இளசையும் (எட்டையபுரம்)

35. அல்லலின்றித் தூத்துக் குடிக்கும் அலுப்பின்றிச்
செல்லல் விடுத்தேன்; சினமின்றிச் செல்வாய்!

36. இழுத்தும் திணித்தும் இறக்கிநீ ஏற்றி
அழுத்தும் செயல்கள் அனைத்தும் வாழ்வில்

37. பழுத்த கிழவரும் பாங்குடன் பேச
முழுக்கக் கேட்டேன் முதுதமிழ் கூறும்

38. அகப்பொருள்யாவும் அடுக்கும் ரயிலே!
புறப்பொருள் தோற்றப் போனவர் சீக்கிரம்

39. பொங்கலாம் நன்னாளில் மங்கலம் பொங்கிட
எங்கனும் தங்கிட எல்லாம் மகிழ்ந்திட

40. சங்கே முழங்கென்று செந்தமிழ் ஆர்த்திட
வங்கக் கடலோரம் வாழ்ந்திடும் இல்லாள்பால்

41. சங்கத் தமிழேநீ சாற்றியே தூதுரைத்துத்
தங்காது வருக! தனியே புகைகக்கி

42. இங்கிதமாய் உன்னை 'ரயிலே! புகைவண்டி!
தொட்டிழுத்துச் செல்லும் தொடர்வண்டி' என்பாரே!

43. மட்டில்லாக் காதல் மடவாரும் மற்றோரும்
ஒட்டி உறவாடி உன்பொருத்தம் காண்பாரே!

44. கட்டி அணைத்தவர் காதல் மணிமொழியை
எட்டியே கேட்கும் இளைஞரும் உண்டுகொல்!

45. தட்டிப் பறிக்குந் திருடரும் ஏறுவர்!
தொட்டிழுத் தோடிடும் தொடைநடுங்கிக் காதலர்க்கும்

46. பட்டிதொட்டி காட்டிப் பறந்துநீ செல்வையோ!
"யாதுமூரே யாவரும்கேளிர்" எனுமொழி

47. ஊதி முழக்குவாய் ஒவ்வொரு ஊரிலும்!
பச்சையைக் கண்டால் பறந்தோடிச் செல்வை!

48. சிவப்பு விளக்கால் சினந்துநீ நிற்பை!
புவனமா துன்னையும் பொற்புடன் தாங்கக்காண்!

49. கவனமாய்ச் சென்று கணப்போதும் தற்காத்தும்
யவ்வன ராணியாம் அன்புடை இல்லாள்பால்

50. கோதிலா நீயும் குணக்குன்றாம் எந்நிலை
தீதிலா வாறு திகழ்ந்துரை! யானுந்தான்

51. காதல் மொழியாளைக் கண்டுரைக்க வல்லனேல்
சாதல் முடிவெடுத்தேன் சாற்றிவை! இந்நாளில்

52. கொஞ்சி மகிழ்ந்தால் கூதல் பறக்குமென்பார்
கெஞ்சி நெருங்கின் கிளுகிளுப்பும் ஆகுமன்றோ?

53. குன்றாம் மலையேறிக் கொள்ளிடத்தில் பாய்ந்துமுழ்கி
நன்றாய்க் குளிக்க நனிவிருப்பம் கொண்டவரும்

54. என்றோ எனாதென் இனிய ரயிலேநீ
இன்னே வரவுரை இன்று!

வாழ்த்து

வேதமுதல்வாழி! விழுப்பொருள் தாம்வாழி!
சீத அருள்வாழி! செகம்வாழி! ஆதிமுதல்
யாவும் அருள்வழங்கி அன்றாடம் காத்துவரும்
கோவைதான் வாழிய கூறு!

# கொக்கு

கன்னல்,

தெற்கு நரசிம்மபுரம், கரூர்

மாடுகட்டி ஏரோட்டும் உழவர் வாழும்
மண்மணக்கும் காணியாளன் பட்டி என்னும்
பாடுபடும் உழைப்பாளர் வாழும் சிற்றூர்
பாழ்நினைவு ஊறாத நெஞ்சங் கொண்டோர்
கேடுசெய்ய நினைப்பார்க்கும் நன்மை செய்யும்
கிளர்இளைஞர் தமிழுக்குப் பணிகள் செய்து
பாடுபுகழ் பெற்றார்கள்! பெறுகின் றார்கள்!
பாவையரும் உரிமையுடன் வாழ்கின் றார்கள்!

வேப்பமரம் மேய்ப்போரின் ஓய்வு இல்லம்!
வேர்வையினைத் தென்றலேதான் முகர்ந்து பார்க்கும்!
பூப்படைந்த செந்தமிழோ சிந்து பாடும்!
புரிந்துகொண்ட செம்போத்து சொல்லிப் பார்க்கும்!
மூப்படையா இளையமகன் தூக்கம் ஓடும்!
மூச்சிரைக்கச் சூறாவளி கூத்தே யாடும்!
தோப்புக்குள் பாடுங்குயில் கண்ண டிக்கும்
துணைதேடும் சேவலதைச் சிறகால் மூடும்!

உழைக்காமல் உண்கின்ற மாந்தன் கள்ளன்!
உரிமைக்குப் போராடான் மானம் இல்லான்!
பிழைசெய்து பொருள்தேடும் வாழ்க்கை ஓர்நாள்
பெயர்கெட்டுத் துயர்தழுவச் சாம்ப லாகும்!
கழைக்கூத்து தாழ்க்கையிலே மக்கள் கண்ட
கருத்துக்குப் பஞ்சமில்லை இளைஞர் எல்லாம்
பிழைப்பென்றே கருதாமல் உலக நேயம்
பெறவேண்டும் எனஉழைத்தார்! பெருமை பெற்றார்!

அருளப்பன் என்கின்ற *ஈனில் காப்போன்
அரசாங்கப் பணிபெற்றே அவ்வூர் வந்தான்!
கருவிழியில் தமிழ்த்தேக்கி சிரிப்பால் வானின்
கவிதையினை நினைவூட்டும் முல்லை என்னும்
அரும்பின்தாய் பின்தொடர வாழ்ந்தான், அங்கே!
அன்புடையார் வரவேற்றுத் தழுவிக் கொண்டார்!
கரும்புவயல் புகுந்திட்ட யானை யைப்போல்
காலத்தை அருளப்பன் தின்று தீர்த்தான்!

அங்காடி நாய்போன்ற தன்மை கொண்டோன்!
அணங்குநிலாச் சிரிப்பையவன் குப்பை என்பான்!
பங்காளி எல்லோர்க்கும் மதுவை ஈவான்!
பரிசாகப் பட்டாடைப் பணமும் நல்கி
பங்காக மனைவியரைத் துய்க்கப் பார்ப்பான்!
பணங்கொழுத்த திமிரினிலே நினைவைத் தேய்ப்பான்!
தங்கையரைப் பார்க்கையிலும் காமம் கொள்வான்!
தமிழ்வாழ்வின் கறைபோன்றான் தன்ன லத்தான்;

முல்லையினை மலமறைக்கப் பயன்ப டுத்தும்
மூடர்களைப் போல்முல்லை பெற்றோர் கூடி
கல்லனுக்கு மணமுடித்தார்! கபடில் லாதார்!
கயமைக்குக் கால்முளைத்து நடப்ப தைப்போல்
தொல்லைதரும் அருளப்பன் கொடுமை செய்தான்!
தூயமுல்லை தடைபோட்டாள் துயரூர் நோக்கி!
எல்லையிலாக் கொடுமைகளை அணிந்து கொண்டாள்!
ஏமாற்றம் கைநீட்டி நின்றதங்கே!

அருளப்பன் முல்லையினை அடிப்பான் "போடி,
அப்பனிடம் நகைவாங்கி வாடி!" என்பான்.
இருள்வந்தால் நான்குதொடை ஒத்தி கைக்கே
ஏக்கமுற்றுப் பல்லிளிப்பான்! தேனாய் வாழ்வான்!
அருள்வளர்க்கும் நோக்கமின்றி பகலில்கூட
ஆடையினை அவிழ்க்கவேண்டித் துன்பம் செய்வான்!
தெருமகளை வீட்டுக்குள் அழைத்து வந்தே,
திருமகளைக் கண்ணீரில் மிதக்க வைப்பான்!

சாக்கடையை மணந்துகொண்ட முல்லை இந்து
சாத்திரத்தால் கணவனுக்கே அடிமை யானாள்!
தாக்குதலுக் கெதிர்தாக்கும் உரிமை பெற்ற
தமிழ்ப்பெண்ணாய் அவளில்லை! அதனால் பாய்ந்தான்!
தேக்குந்தேன் முல்லையினைத் தழுவிக் கொண்டே
தேய்ந்தநிலா நீஎன்பான்! சீச்சீ என்பான்!
பூக்கூடை கண்ணீரில் மிதக்கும் போதே
பூவாடை உரிந்திடுவான்! வெட்க மில்லான்!

ஈனில்லம் செல்கையிலே தாழ்ப்பாள் போட்டே
இவன்செல்வான்! இடையிடையே திரும்பி வந்து
"நானில்லா வேளையிலே எவன்டி வந்தான்?
நடுப்பகலில் தேவடியாத் தனமா" என்பான்!
கூனில்லா வெண்ணிலவு போன்ற முல்லை
குலைநடுங்க கண்ணீரில் மிதப்பாள்! ஓர்நாள்
"தேனில்லை உனையொப்ப மதிக்கா விட்டால்
திரும்படா" எனச்சொன்னாள்! அவன்கொ தித்தான்!

கதிர்விழித்தான்! காலையிலே கயவன் கூடக்
கண்விழித்தான்! முல்லையினைப் பிடித்தி முத்து
விதிமீறிப் பேசுவதற்கே எவன்டி சொன்னான்!
விலாவுக்குள் இருப்பவன்யார்? எனைஎ திர்த்தாய்!
நிதிவாங்கி வாடிஎன்றான்! நிலவோ தேய்ந்தாள்!
நீள்நிதியும் பெண்ணுடலும் உணவாய்க் கொண்டோன்
சதிசெய்தான்! நெருப்பின்பசி தீர்த்து வைத்தான்!
சாய்ந்தநிலா நீரானாள்! குனிந்த தாண்மை!

கண்ணீரில் அருளப்பன் மிதந்து நின்றான்!
"காற்றுத்தீ இல்லாளைப் பொசுக்"கிற் றென்றான்!
எண்ணத்தில் உயர்ந்தவர்கள் ஊமை யானார்!
இழிசெயலைக் கண்டிக்க மறந்தே போனார்!
கிண்ணத்து விருந்துக்கும் கைகள் ஊட்டும்
கிளர்தொகைக்கும் பணிந்தார்கள் காவல் மாந்தர்!
தன்னலமே பொதுத்தொண்டு என்று வாழும்
தடியர்களே தலைவரென்றால் அறம்சா காதா?

முல்லையினைப் பெற்றவர்கள் ஓடி வந்தார்!
முத்தமிழைப் பெற்றதனால் கதறி நின்றார்!
"அல்லசெயல் செய்வதற்கா இந்த நாட்டின்
அருங்கல்வி நிலையங்கள் பயிற்சி நல்கும்!
கல்விகற்ற இலட்சணமா? பொருள்பொ திந்த
கடவுள்இந்து மதம்காட்டும் நெறிகள் தானா?
சொல்லுங்கள்" எனக்கண்ணீர் கடலாய் நின்றார்!
சுற்றிநின்றார்! கொடுமைஎன்றார்! அவலமானார்!

*மணவிலையைப் பெறும்வழக்கம் இந்த மண்ணில்
மறையாதா? எனப்பெண்டிர் முணுமு ணுத்தார்!
இனம்வாழத் துடிக்கின்றார்! வீட்டுக் குள்ளே
இருப்பவரைக் காப்பாற்ற மறுக்கின் றாரே!
தினம்கற்கும் கல்வியிலே செய்தித் தாளில்
தேடிவரும் நூல்களிலே பெண்ணு யர்வை
மனங்கொள்ளும் வகையினிலே விளக்க வேண்டும்!
மதங்கூறும் பெண்ணிழிவைத் தகர்க்க வேண்டும்!

பெண்களெல்லாம் மனவலிமை பெறுதல் வேண்டும்!
பிறப்பினிலே ஆணுக்கு நிகராம் என்ற
எண்ணங்கள் நெஞ்சத்தில் உதிக்க வேண்டும்!
எப்போதும் உலகநலம் தேட வேண்டும்!
கண்களைப்போல் துணைவன்நலம் பேண வேண்டும்!
கண்வளைக்கும் உடல்நலத்தைக் காக்க வேண்டும்!
பண்ணோடு சேர்ந்தொலிக்கும் இயலைப் போல
பங்காற்றும் திறன்பெற்றே வாழ வேண்டும்!

# வளர்க! வாழ்க!!

அ. ஆறுமுகம்.
அரசு கலைக் கல்லூரி, அரியலூர்

பூவிரிக்கும் காவிரித்தாய் மடியில் நல்ல
பொலிவோடு பொழிலிடத்தை யமைத்துக் கொண்டே
சாவிரிக்குங் காலனையுஞ் சாய்த்தே நாளும்
தமிழ்பரப்புந் தொண்டாலே தலைமை பெற்றே
பாவிரிக்கும் பாவலரைக் கூட்டிச் சங்கப்
பான்மையிலே புலவர்குழு படைத்த சான்றோர்
நாவிரிக்கும் அடங்காத கி. ஆ. பெ. வி.
நற்றமிழர் நலம்பெருக! நாளும் வாழ்க!

சீர்பெருகுந் திருச்சிநகர் தன்னில் தோன்றி
சிறப்புடனே வாணிகத்தை நடத்தி என்றும்
பேர்பெருகத் தமிழ்கற்றுத் தமிழ்வ ளர்க்கும்
பெரியோராய் வளர்ந்துபெரும் பண்பை எல்லாம்
ஊர்பெருகப் பரப்பிடுநல் லுழைப்பில் வாழ்வில்
உயர்ந்தவரே கி.ஆ.பெ. விசுவ நாதம்
பார்புகழப் பல்துறையின் வளர்ச்சிக் கென்றே
பாடுபடும் காவலரே! பல்கி வாழ்க!!

மலைக்கோட்டை விஞ்சுகின்ற மாண்பைப் பெற்றீர்!
மருத்துவத்தில் தமிழ்மரபை மதிக்கச் செய்தீர்!
தலைக்கேடாம் இந்திமொழி ஆதிக் கத்தைத்
தடுப்பதற்குத் தலைவர்களைக் கூடச் செய்தீர்!
சிலைக்கோட்டைச் சென்னையிலே தமிழ்மா நாட்டைத்
திறம்படவே நடத்துதற்குத் துணையாய் நின்றே
அலையோரந் துயில்கின்ற அறிஞர் அண்ணா
ஆர்வமுடன் பாராட்ட அமைத்தீர் வாழ்க!

தொண்ணூறாம் ஆண்டினிலுந் தொண்டில் சற்றுந்
தொய்வின்றித் தொடர்கின்ற வலிமை கண்டீர்!
கண்மூடிப் பழக்கமதை யெதிர்த்த மானக்
காவலராம் பெரியார்பா ராட்டைப் பெற்றீர்!
எண்மூடும் வணிகத்தில் நேர்மை காட்டி
எல்லோரும் பின்பற்றும் இலக்கில் நின்றீர்!
தண்ணூறுந் தமிழ்த்தொண்டால் தரணி மீதில்
தலைமையுடன் பல்லாண்டு வளர்க! வாழ்க!

தஞ்சையிலே தமிழுக்கோர் கழகங் கண்டே
தமிழ்ப்பண்பை வளர்ப்பதற்குத் துணையாய் நின்றீர்!
அஞ்சாமல் வானொலியென் றொலிக்க வேண்டி
அறப்போரை நடத்தியதில் வெற்றி கண்டீர்!
நெஞ்சமுடன் சொல்செயலும் ஒன்றாய்ச் சேர்ந்த
நிறையொழுக்கப் பண்பாலும் முதன்மை பெற்றீர்!
கொஞ்சுமொழிக் குடும்பத்தின் குடிமைக் காத்துக்
குறள்நெறியைப் பரப்பிவருங் கோவே! வாழ்க!

தமிழர்நா டெனுமேட்டைத் தவழ விட்டீர்!
தவறாது காலத்தில் கடமை செய்தீர்!
அமுதொத்த சொற்பொழிவு தேனைப் பாய்ச்சி
அனைவர்க்கும் வழிகாட்டும் விளக்கம் ஆனீர்!
எமதென்றே முத்தமிழ்க்குச் செய்த தொண்டால்
ஏற்புடைய வித்தகராம் பட்டம் பெற்றீர்!
தமிழவேள் கி.ஆ.பெ. விசுவ நாதம்
தமிழெனவே தரணியினில் தழைத்து வாழ்க!

'மும்மணிகள்' 'நான்மணிகள்' 'ஐந்து செல்வம்'
முறையாக 'அறிவுக்கு உணவை'த் தந்தே
செம்மையுற 'வானொலியில்' 'தமிழ்ச் செல்வத்தை'ச்
சேர்த்தளித்துத் 'தமிழ் மருந்தைச் சேரவூட்டி
இம்மையினில் இனிதுரைக்கும் முப்பால் கொண்ட
ஈடில்லாப் 'புதைபொருளை' எடுத்துத் தந்தே
தமிழ்மொழியாய்த் தமிழ்வளர்க்குங் கி,ஆ பெ. வி,
தழைத்திடுக! தலைமையுடன் வளர்க! வாழ்க!

வளநகராந் திருச்சிதனில் தமிழ்ச் சங்கத்தை
வளர்த்துவருந் நாயாவீர்! மக்கள் மன்றம்
இளமையினர் கல்வியுடன் இணைந்து வாழ
எற்றவகை செய்ததனால் தந்தை யாவீர்!
தளராதே எதிர்ப்படக்கித் திரும ணத்தைத்
தமிழ்வழியில் நடத்திதமிழ்த் தாயின் வாழ்வே
உளமாரத் தம்வாழ்வாய்க் கொண்ட பாங்கால்
உற்றபுகழ் மகனாவீர்! உயர்ந்தே வாழ்க!

சொல்லுவதைச் செயல்படுத்திக் குருவாய் ஆவீர்!
சோர்வகற்று மாற்றலினால் வீர ராவீர்!
வெல்லுவகை சொற்பெருக்கால் வல்ல ராவீர்!
வேண்டுவதை முடிக்குமுளத் திண்ண ராவீர்!
நல்லவரும் நண்பர்களும் சூழ்ந்து நிற்க
நடுவுயர்ந்த நாணயத்தால் தலைவ ராவீர்!
எல்லவரு மெம்மவரென் றேற்றும் பாங்கால்
இவ்வையம் பாராட்டும் இறைமை யாவீர்!

சித்தர்களின் வழிவந்த சித்தர் என்றே
சிறந்தோர்கள் பாராட்டும் சீர்மை பெற்றீர்!
முத்தனைய நூற்றாண்டு மூன்றைக் காணும்
முறைமையினால் மூத்தவராய் முந்தப் பெற்றீர்!
தத்துவமாய் இயற்கையுடன் இயைந்த வாழ்வைத்
தமதாக்கிக் கொண்டதனால் இளமை பெற்றீர்!
வித்தகராய் விழிப்புணர்வில் வெற்றி பெற்றே
விளங்குதமிழ்க் காவலரே வளர்க! வாழ்க!

தம்வழியில் குடும்பத்தை நடத்தித் தூய்மை
தனைக்காக்கும் காவல்வழி காட்டி யாவீர்
சிம்மமெனக் கொடுமைகண்டால் சீறும் பாங்கில்
சிறுமதிய ரஞ்சும்பண் பாள ராவீர்!
செம்மைமிகு தமிழாலே யொருமை காணும்
சீர்மையினால் பொதுமைமிகு தொண்ட ராவீர்!
அம்மையொடு அப்பனுமாய்த் திகழுஞ் சான்றீர்!
அந்தமிழ்போல் அகிலத்தில் வளர்க! வாழ்க!

படித்தேனாய்ப் பாவேந்தர் கவிதை துய்த்தப்
பான்மையினால் புலவர்குழு கூட்டந் தன்னில்
துடிப்புடனே சேர்த்தவரை யானை மீது
தோன்றவைத்துத் தஞ்சையிலே வலமாய் வந்தீர்!
படிப்பாளர் பண்பாளர் கி.ஆ பெ.வி.
பல்லாண்டு பல்வளமும் பல்கி வாழ்க!
முடிசூடி முத்தமிழின் தொண்டால் என்றும்
முன்னேற்றப் பாதையினில் வளர்க! வாழ்க!

மொழிப்போரில் உயிர்நீத்தோர் ஈகங் கண்டே
முன்னின்று திங்கள்தொறும் இருபத் தாறில்
விழிப்புடனே உணவின்றி உரையும் இன்றி
விடாதிருக்கும் நோன்பினிலே வெற்றி கண்டீர்!
பழியேது மில்லாமல் பிறருக் காகப்
பாடுபடும் பண்பாலே பலரும் ஏற்கும்
வழியானீர்! அரசியலும் வணங்கி நிற்கும்
வாழ்வானீர்! என்றென்றும் வளர்க! வாழ்க!

மாற்றங்கள் பலகண்ட திருச்சி தன்னில்
மாறாத கொள்கையுடன் வளர்ந்தீர்! வாழ்க!
ஏற்றங்கள் தமிழுக்குக் கிடைக்க வேண்டி
இருநான்கோர் பத்தகவை வந்துற் றாலும்
தோற்றத்தில் மாறாது தொடர்ந்து தொண்டைத்
துணிவாற்றிச் செய்கின்றீர்! வளர்க! வாழ்க!
கூற்றுவனின் குதிப்படக்கிப் பன்னூ றாண்டு
கொள்கைவிசுவ நாதமலர் குலவி வாழ்க!

இறப்பதற்குமுன் றனக்கே யிரங்கற் பாவை
இயற்றிவைத்தார் இசைக்கவிஞர் கண்ண தாசன்
இறப்பதற்கு முன்னேநல் லடக்கத்துக் காய்
இடந்தேர்ந்து திட்டமுடன் அமைத்துள் ளீர்கள்
அறநெறியில் தொண்டாற்றும் உங்கள் வாழ்வின்
அகவையென்றும் ஆல்போலப் பெருகி வாழ்க!
சிறப்புறவே திருச்சிதந்த விசுவ நாதச்
செம்மலவர் செழிப்புறவே வளர்க! வாழ்க!

# கண்ணீர் ஓவியம்

மு. ஆல்பென்ஸ் நதானியெல்
பேராசிரியர் பயோனியர் குமாரசாமிக் கல்லூரி
நாகர் கோயில்

கடவுள் வாழ்த்து

1. புயலாம் கடலாம் வாழ்க்கையிலே
   கண்ணீர்ப் பயணம் தொடர்கையிலே
   கவலையில் வீழ்ந்து மடியாமல்
   துணையாய் வருவாய் இயேசையா

2. படகை நானே ஓட்டியதால்
   பாதை மாறிச் சென்றிட்டேன்
   படகை நீயே ஓட்டிடுவாய்
   பாலன் என்னைக் காத்திடுவாய்

தாய் தந்த துயரம்

1. பத்துமாதம் சுமந்திருந்தாள் அன்னை — இளம்
   பாலகனாய் ஈன்றெடுத்தாள் என்னை
   எத்தனையோ துன்பங்கள் வந்தும் — தினம்
   இறையவனைத் தலைபணிந்தாள் அன்றும்
   அத்துயரின் நிறையெல்லாம் மாற்றி — உனை
   அரியணையில் ஏற்றிடுவேன் என்றேன்
   இத்தனையும் செயலாக்க உன்னால் — இனி
   இயலாதே என்றோடிச் சென்றாள்.

2. அன்பாலே அரவணைத்தாள் என்னை — மன
   அடக்கத்தை வளர்த்துவிட்டாள் அன்னை
   அன்னத்தால் ஆளாக்கிப் பின்னும் — எனை
   அன்பாலே பிணைத்திட்டாள் வாழ்வில்

அன்றைக்கு அவளோடு வாழ்ந்தே — மனம்
அலைபாயும் துயரினையும் கொன்றேன்
என்வாழ்வில் உனைமறவேன் என்றேன் — எனை
உயர்வடைய வாழ்த்துரைத்துச் சென்றாள்.

3. தன்மார்பில் அணைத்துநிதம் என்னில் — தமிழ்த்
தாயன்பைச் சுரந்திருந்தாள் அன்னை
என்துன்பம் தெரியாமல் வாழ — வழி
இதயத்தில் எனக்கூட்டி வைத்தாள்
அன்பாலே ஆராட்டி உன்னை — கவி
அயர்வின்றி மகிழ்விப்பேன் என்றேன்
பொன்னிமைகள் கதவடைத்துச் சென்றாள் — புவி
வாழ்வெல்லாம் துயர்தந்து நின்றாள்

## அருள்வாய்! இறைவா!!

1. தமிழ்வாழ யாம்வாழ
அருளைத் தருக! — இறைவா
அருளைத் தருக!

2. அமிழ்தான என்னோடும்
அன்பான பொன்மக்கள்
எல்லோரும் இனிதாக
என்றென்றும் நலம்வாழ
அருளைத் தருக — இறைவா
அருளைத் தருக!

3. போரில்லா நிலைகாண
பொழுதோறும் அறமேவ
விடிவில்லா மக்கட்கும்
விடிவெள்ளி தான்காண
அருளைத் தருக — இறைவா
அருளைத் தருக!

## வெண்தாடி வேந்தருக்கு ஒரு கவிதாஞ்சலி

1. சாதி யில்லாத் தமிழகத்தில்
   சாதிச் சண்டை கண்டேங்கி
   பொங்கி எழுந்த தமிழ் மன்னன்
   பெரியார் நம்மைப் பிரிந்தாரே!

2. எட்டை விரிக்க ஒருசாதி
   என்ற முழக்கம் வீழ்ந்தொழிய
   போரை முழக்கிய தமிழன்தான்
   இன்று நம்மை மறந்தாரே!

3. நந்தன் கண்ட நந்தியுந்தான்
   விலகிய தன்று என்றிட்டான்!
   இன்று தடையேன் என்றுதினம்
   கேட்டவர் நம்மைப் பிரிந்தாரே!

4. தமிழன் உயர்வைத் தான்காண!
   பதவி வெறுத்தோன் இன்றெங்கோ
   ஓய்ந்து படுக்கச் சென்றுவிட்டான்
   ஓயாத் துயரில் அழவிட்டான்.

5. அத்தகு பெரியார் வழிநின்று
   அருமைக் கொள்கைச் செயல் படைப்போம்
   புத்தொளிர் தமிழகம் உருவாக்க
   புறப்படு தமிழா அவர்பாதை!

## காதல் மலர்

1. கண்ணிலே உதய மாகிக்
   கள்ளமாய் மனத்திலேறி
   கண்ணிமை நேரம் தன்னில்
   குருதியில் கலந்து; மக்கள்

2. எண்ணமாம் பொய்கை தன்னில்
   இன்பமாய் நீந்தி நீந்தி!
   வெண்ணிலா அமுதச் சாற்றில்
   விளைவதே தூய காதல்.

### காதலர் ஒன்றானால்

காதலர் இணைந்தா லங்கு
   கடலினும் இன்பம் இன்பம்!
காதலர் பிரிந்தா லிந்தக்
   ககனமே நெருப்புத் துண்டம்!
காதலுக் கிந்த வன்மை
   கடவுளே நீயா தந்தாய்?
காதலே உலகம் என்றால்
   கயமைகள் உண்டோ சொல்வாய்?

### புலம்பல்கள்

1. கையளவு இதயம் வைத்து
   கடலளவு எண்ணம் வைத்தான்
   கடலளவு எண்ணம் வைத்தோன்
   கண்ணீரில் நீந்தச் சொன்னான்

2. காலையில் பாடிடும் பறவைகளே! - என்
   கண்மணி துடைக்க வாரீரோ!
   மாலையில் வீசிடும் தென்றல் நீ - சில
   ஆறுதல் வார்த்தைகள் தாராயோ
   கூக்குரல் தினமும் போடுகிறேன் - இதைக்
   கேட்பார் ஒருவரும் இங்கிலையோ?

### சிந்தனை மொட்டுக்கள்

பேதை நெஞ்சம் உலகில்
   பேசிடும் வீரம் கோடி
வாங்கிடும் மூச்சு நின்றால்
   வார்த்தைகள் எல்லாம் வீணாம்.

## கல்வியின் பெருமை

கல்வி ஒரு விளக்கு ஒளியினிலே
ஆயிரந்தான் கொண்டாலும்

ஓரணுவும் குறையாத
உயர்வுடைத்தாம் கல்வி

செல்வம் ஒருவுழக்குப் பொருளதனில்
சிறிதளவு குறைந்தாலும்

குறையுழக்கு ஆகிடுமே
செல்வமது காணீர்

## வாழத்தான் ...... வாழ்வு

வாழ்க்கை என்பது போராட்டம்
வாழ்ந்து காட்டணும் தேராட்டம்
கடமைகள் நின்று தாலாட்டும்
காலங்கள் நம்மைப் பாராட்டும்

## என்ண அலைக்கு எண்ண வைத்தான்

1. சின்னக்கயல் நீந்திடத்தான்
சீர்பரந்த கடல் படைத்தான்

வண்ணஅலைக் கடல்தாண்ட
வலமாடும் கலம் வைத்தான்.

2. கலமென்னும் உடலதனில்
கரைமோதும் நினைவளித்தான்

நினைவென்னும் கடல்தாண்ட
கலமாக எண்ண வைத்தான்?

## தமிழுக்கோர் வேண்டுகோள்

நல்ல தமிழே!
என்னுள் வருகவே!

இன்பக் கவிதைகள்
அள்ளித் தருகவே!

## இயற்கையோடு ஒரு கேள்வி

1. கதிரவனை வரவேற்கக்
   காலையிலே பூத்தமலர்
   கதிரவனும் வருமுன்னே!
   கண்கலங்கி வாடுவதேன்?

2. பாடிவந்த வண்டுதானும்
   தேடிவைத்த மதுவதனை
   நாடியுண்டு சென்றவுடன்
   வாடியது மலருமிங்கே

# உலகை உய்விக்க வந்த பெரிஸ்த் ரோய்க்கா

இரா. இரகுபதி
பிசப் ஈபர் கல்லூரி, திருச்சி.

பெரிஸ்த் ரோய்க்கா
மானுடம் புதுக்க
மறுசீர மைப்பெனும்
விடியலை ஏந்திய
விடிவெள்ளி ஆம்
விடிவெள்ளி

பெரிஸ்த் ரோய்க்கா
அணுப்போ ரெனும்
புயலை மாற்றி
புவி இல்ல மதில்
அமைதித் தென்றல்
அழகாய்த் தவழ
இனிய மலர்களை
ஏந்திவந்த பூங்கொத்து-ஆம்
பூங்கொத்து

பெரிஸ்த் ரோய்க்கா
மூன்றாம் உலகமாம்
வளரும் மழலைகள்
வளமாய் வளர
காணக் கிடைத்திட்ட

காம தேனு-ஆம்
காம தேனு

பெரிஸ்த் ரோய்க்கா
வன்முறையற்ற
வலிய ஆயுதமில்லா
சொர்க்க பூமியை
மண்ணில் படைக்க
மாண்புற வந்திட்ட
ஒளியின் விழுதுகள்-ஆம்
ஒளியமைதியின் விழுதுகள்

பெரிஸ்த் ரோய்க்கா
கிளாஸ் ரைத்தெனும்
பகிரங்க முறையை
அதிகார வர்க்கம்
தன்னை உணர்ந்து
தானே திருந்தி
பத்தரை மாற்றாய் மாற்றிட வந்த
சமய சஞ்சீவி-ஆம்
சமய சஞ்சீவி

பெரிஸ்த் ரோய்க்கா
இப்புவியில் தோன்றிய
புதிய சூரியன்
பழமை இருளோட்ட
புரட்சிக் கதிர்களை
சுமந்து வந்த
புதிய சூரியன்-ஆம்
புதிய சூரியன்

பெரிஸ்த் ரோய்க்கா
ஓர் காலக் குழந்தை
எதேச்சகாரக் கம்சன்கள்
எங்கனும் மாய
சோவியத்தில் பிறந்திட்ட
சோசலிசக் குழந்தை-ஆம்
சோசலிசக் குழந்தை

பெரிஸ்த் ரோய்க்கா
ஓர் புதுமைக் கவிதை
மனித நேயங்கள்
மண்ணில் உயர்ந்திட
லெனினியம் படைத்திட்ட
ஓர் புதுமைக் கவிதை-ஆம்
ஓர் பொதுமைக் கவிதை

பெரிஸ்த் ரோய்க்கா
ஒரு ஜீவ ஊற்று
சோம்பல் கழிவுகளை
சுயநலக் குப்பைகளை
சுருட்டிக் கொண்டோடி
ஆற்றல் மின்சாரத்தை
அள்ளி வழங்கும்
ஜீவ ஊற்று-ஆம்
ஜீவ ஊற்று

பெரிஸ்த் ரோய்க்கா
ஓர் அமுத சுரபி
சுதந்திரத் தேனை
குறையாது வழங்கும்
அமுத சுரபி-ஆம்
அமுதசுரபி

பெரிஸ்த் ரோய்க்கா
ஓர் பகவத் கீதை
யுத்தக் கௌரவர்கள்

இப்புவிக்கு வராமல்
அமைதி அர்ச்சுனனுக்கு
சோவியத் கண்ணனருளிய
ஓர் பகவத் கீதை-ஆம்
ஓர் அமைதி கீதை

பெரிஸ்த் ரோய்க்கா
உலக மக்களே
ஒன்று படுங்கள்
இழந்து நிற்பதற்கு
யாது மில்லையெனும்
ஆன்ம நேயத்தை
அறைகூவல் விடும்
சன்மார்க்க சாசனம்-ஆம்
சமரச சன்மார்க்க-சாசனம்

பெரிஸ்த் ரோய்க்கா
காலனி யாதிக்கம்
நொறுங்கி வீழ
அக்டோபர் புரட்சி
அன்று எழுப்பிய
உலக எழுச்சியை
இன்னொரு முறை
இவ்வுலகம் காண
எழுந்து வந்த யுகப்புரட்சி
உலகம் உய்ய எழுந்து வந்த
யுகப்புரட்சி–ஆம்
யுகப் புரட்சி

# மனிதரைத் தேடுகிறேன்

கோவி. இராசகோபால்
தில்லிப் பல்கலைக்கழகம், தில்லி

காதல்

காலங்கள் மாறும்;
வாழ்வின் கோலங்கள் மாறும்;
காதல் தாளங்கள் மாறுவதில்லை
அதன்—
ஓலங்கள் ஓய்வதுமில்லை;
அதுவொரு—
கட்டற்ற காட்டாறு;
தேன் மொட்டவிழ்ந்த பூக்காடு.

காதல்—

அதுவொரு விபத்து
கண்கள்—
அவை—
காதல் புத்தகத்தின் முன்னுரைகள்.
பெண்கள்—
பெரும்பாலான கலைஞர்களை
உருவாக்குகிறார்கள்
அவர்களின்
ஒருசில கண்கள்—
கவிஞர்களை
உருவாக்குகின்றன.

அவர்களின்
பார்வை நாடகங்கள்
நம்நெஞ்சில் அரங்கேறும் போது—
நம்மில்
ஊமைகள் கூட
டெமாஸ்தனீஸ் ஆகிறோம்;
கோழைகள் கூடப்
போர்க்கொடி ஏந்துகிறோம்.
அவர்களின்
இந்த மௌன ராகங்களுக்கே
இத்தகைய மவுசு இருக்கிறது
ஆனால்
பின்னால் நாம் ஏனோ
மகுடிப் பாம்புகளாய்
மாறிப் போகிறோம்.
ஓ...
அவர்கள்—
இரட்டைக்குழல் துப்பாக்கிகள் போலும்!

அவர்களுக்கு—
வஞ்சி என்றபெயர்
வழங்கப்படுவது
நம்மை
வஞ்சிப்பதனால் போலும்!

## வீதியில் வீசப்பட்ட காசா?

ஓ! என்! காதலியே!
உன்
கண்ணெதிரே
பனைமரம் போல்
நான் நிற்கையிலே
வீதியில்
எதையோ
தொலைத்துவிட்டவள் போல்

எப்பொழுதும்
தலைகுனிந்தே
என்னைத் தேடுகின்றாயே!
நானென்ன
வீதியில் வீசப்பட்ட காசா?

### அரசியல்வாதிகள் பரிசுத்தமானவர்கள்

இன்றைய அரசியல்வாதிகள்
மிகவும்
பரிசுத்தமானவர்கள்
அவர்கள்
நாளுக்கோர் ஆடை
மாற்றுகிறார்கள்
அதனால்
அவர்கள்
பரிசுத்தமானவர்கள்

### வயிறுகளே எரிகின்றன!

எங்கள்—
ஏழைகள் வீட்டில்
இப்பொழுது எல்லாம்
அடுப்புகள் எரிவதில்லை!
வயிறுகளே எரிகின்றன.
எங்கள்—
கதவுகளில்லாத சன்னல்கள் வழியே
வாயுதேவன்
வாசம் செய்வதில்லை!
வறுமை தேவனே
வருவேன் என்கிறான்;
வாழ்வேன் என்கிறான்.

### பாவத்திற்குப் பரிகாரமா?

ஏ! சமுதாயமே!
அவனை

உயிரோடிருக்கையில்
உதாசீனப்படுத்திய நீ!
சவக்குழியில்
அவன்
சம்சாரம் செய்யும்போது
ஆண்டுதோறும்
அவனுக்குக் கும்பாபிசேகம்
செய்வது ஏன்?

அது
அவன் செய்த பாவத்திற்குப்
பரிகாரமா?
அல்லது
உனது பாவத்தின்
பிராயச்சித்தமா?

### மனிதரைத் தேடுகிறேன்

அங்கே...
ஒரு பழுத்த பழம்
பட்டப் பகலில்
விளக்கு கொண்டு
ஏதோ
ஆராய்ச்சி செய்கிறது!
"கண்ணைப் பிடுங்கும்
சூரிய ஒளியில்
விளக்கு கொண்டு
என்ன தேடுகிறீர்?"
என்றது ஒரு குரல்.
"மனிதரைத் தேடுகிறேன்"
என்றது அந்தக் கிழம்.

# சிக்கல் — தீர்வு

இரா. கஸ்தூரி
அண்ணா ஆதர்ச மகளிர் கல்லூரி, சென்னை.

இன்றைய சிக்கல் எளிதாய்த் தீர,
இன்வரம் வழங்கத் தமிழ்த்தாயே வருவாய்
இந்திய மக்கள் இன்பம் பெருக,
இளையவள் கவிதை படைக்கின் றேனே!

நாட்டுப்பற்று

இந்தியன் எங்குச் சென்றாலும், அவன்தான்
இணையிலாப் பெருமை பெற்றாலும், தாயாம்
இந்திய நாட்டின் குடிமக னென்றே
இம்மை வாழ்வு வாழ்தல் நலமே!

மாநில மொழியை உயிராய்க் கொண்டு
மாதவத் தாயினைப் போற்று வோமே!
மங்கலத் தமிழை விரும்பிக் கற்று
மன்பதை முழுவதும் பரப்பிடல் நன்றாம்!

கற்ற தமிழால் கலைகள் முழுதும்
கவினுறு நடையில் பெயர்த்திடு வோமே!
கவின்கலைச் சொற்கள் இன்றேல், நாமே
கன்னித் தமிழில் இயற்றிடு வோமே!

அனைத்து நாடும் அன்னை நாடே!
அகிலம் முழுதும் சிறக்கப் பாடு!

பாரத அன்னையின், வருத்தம் நீங்கப்
பாவைப் பெருமை சேர்த்தல் நலமே!

## பெண் — ஆண்

பாவை யென்று பாகாய் உருக்கி
பளிங்குச் சிலையாய், உருவாக்க லாமோ?
பல்லுயிரில் மேன்மை, பெண்ணி னமென்று
பண்பாய் நடத்தும் காலம் பொன்னாம்.

ஆணின் கல்வி அறுசுவை உணவே,
அரிவை கல்வி அமுதாம் உணவே
ஆன்ற அறிஞர் இதனை உணர்ந்தே
அறிவுக் கல்வி அழகே யென்றார்

பெண்டிர், பொன்னை வெறுத்து ஒதுக்கிப்
பொலிவு, பொறுமை புன்னகை அழகு.
போற்றி வாழும் நாளே நன்னாள்!
போற்றும் நாளும் வந்திடு மன்றோ!

அருங்கலை முழுதும், அரிவை அறிந்து,
ஆயும் அறிவியல் சாதனம் ஆய்ந்து
ஆய்வுக் கட்டுரை மேலும் எழுதி
ஆன்றோர் புகழும் நாளே நன்னாள்!

எல்லாத் துறையும் ஏந்திழைக் கென்றே
எவரும் ஒப்பும். நாள்தான் என்றோ?
எந்த நிலையும், தாழ்வில் லாதே,
எங்கையர் வாழும் நாளே, வாழ்நாள்!

அணில்தான் கடிக்கப், பழம்தான் இனிக்க,
ஆண்தான் ஒதுக்கப். பெண்தான் கசக்க,
அடிமைத் தன்மை அகற்றி வாழ,
ஆணித் தரமாய் வகுப்போம் தீர்ப்பு!

பெண்ணைக் காட்சிப் பொருளாய் ஆக்கல்,
பெண்மை இழிவென உணர்தல் வேண்டும்
விளம்பரப் பலகையில் பெண்ணை வரைவதை,
வியாபார மெனவே ஒதுக்கல் நன்றே!

பல்லறிவு பெற்று, உலக முணர்ந்த,
பருவ வயதில் திருமணம் செய்க!
குழந்தை மணமே குன்றிய நிலையெனக்,
குவலய மாந்தர் ஒதுக்கல் வேண்டும்.

மங்கல மென்ப மக்களே ஆதும்
மக்கள் தொகையே, அதிக மானால்,
மண்ணுலக மில்லை; மகிழ்ச்சி பொங்க
மனைக்கு ஒன்று பெறுதல் மாண்பாம்!

இயந்திர வாழ்வில் இருவரும் இணைந்தே,
இன்பம் விழைந்து பொருளைச் சேர்த்தே,
இன்பக் குழந்தையின், அன்பை யிழந்தே,
இன்றைய வாழ்வில் பெண்கள் வாழ.

ஆடவர், அன்பு அல்லிகள் வாழ்வில்
அழகு நிலவாய் இருப்பதே இல்லை!
அவரவர் போக்கில் ஆனந்த மாக,
ஆசை வாழ்க்கை வாழ்பவர் பலராம்!

பொருளின் தேவை உள்ளவர் மட்டும்,
பொருளை விழைந்து உழைத்தல் வேண்டும்
வேலை சென்று காலம் கழிக்கும்
வேடிக்கை வனிதை அகத்தில் அமர்ந்து.

வேண்டும் கடமைகள் செய்தல் வேண்டும்.
வேலியா யிருந்து வயதில் முதிர்ந்த,
பெற்றோர் தம்மைக் கண்ணி னிமையாய்,
பொற்புடன் காப்பதே, கடமை முதிர்வாம்!

முதியோர் காப்பகம், மூடப் பெற்று,
முதுமை வயதில், அன்பின் அணைப்பில்,
காரிகை துணையுடன் கலந்து வாழும்,
கண்கவர் குடும்பம் நடத்தல் சிறப்பாம்.

கண்ணாம் கணவன் இறந்த பின்பு,
கற்புக் கனலும் தணலில் வீழ்தல்,
காட்சிக் கொவ்வாக் காட்சி யென்று,
கடிதே விலக்கும் நல்வழி ஏற்போம்.

இளமைப் பருவம் கணவனை யிழந்தால்,
இனிதாய் மறுமணம் செய்து வைத்தல்,
அழகென, அறிவுப் பூர்வ நிலையை
அரிவை வாழ வகுத்தல் நன்றாம்!

அறிவியல் முறையில் ஆய்ந்து பார்த்தே
ஆண்மக விலையெனில் அழிப்பது நன்றோ?
ஆணும் பெண்ணும் சரிநிகர் என்பதே
ஆதி சிவனின் காட்சி யாகும்!

இந்திய நாட்டின் முதுகெலும் பாக
இந்திய மண்ணைக் காப்பதே கடனாய்
இம்மைப் பயனாய் இளைஞர் எண்ணி
இன்னுயிர் வழங்க இத்தலைமுறை வருவீர்!

பணியை நாடிப் பனியாய் உருகும்,
பணியே பனியாய், வாழ்வது நலமோ?
நம்பிக்கை யுடனே சுயதொழில் செய்து
நம்மை அண்டிய உறவுகாக் கலாமே!

வானம் நம்மைப் பொய்த்த போதும்
வகையாய்த் திட்டம் வகுத்திட் டால்,
கால்வாய் வழியே, மாநிலம் முழுவதும்,
கன்னல் நீரை, அனைவரும் பெறலாம்!

கிராம வாழ்வில் ஒளியேற்றி வைத்தால்,
கிணற்று நீரும் ஆற்று நீராகும்
கிராம வளமே நாட்டின் முதன்மை,
இராமரின் அயோத்தி உருவாக்க லாமே!

மரங்க ளின்றேல் மக்க ளில்லை,
மக்கள் வாழ்வில் மழையே யின்பம்
இன்பம் உயிரினம், இனிதாய்ப் பெறவே
இனிய மரங்களை இணைந்து வளர்ப்போம்!

சினையின் சேர்க்கை முதலாம்; முதல்
இணையின் பிணைப்பு வடிவாம்; வடிவின்
துணையின் இணைப்புக் குடும்பம்; குடும்ப
இணைப்பின் பலனோ, நலந்தரும் நன்னாடு.

நல்ல குடும்பம் நன்மக்களைத் தந்திடும்;
நல்ல மக்கள் நற்சான்றோர் சமூகம்;
நல்ல சமூகம் நன்னாடு படைத்திடும்;
நல்ல நாடு நல்லுலகு அமையுமே!

வாழ்க பாரதம்! மணித்திருநாடு!
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

# தமிழமுதம்

கா. காளிதாசன்
தியாகராசர் கல்லூரி, மதுரை.

அக்கம் பக்கம் யாருமில்லை
ஆக்கம் பெற்றதும் நம்மவர்தான்
எக்கணம் பேசினும் ஐயமில்லை
ஏக்கம் இல்லது தமிழ்வாழ்வே
செக்கர் வானில் செம்மையில்லை
செந்தமிழ் கண்ட செழுமைநோக்கில்
தக்கது செய்யின் பிழையில்லை
தன்னே ரில்லாத் தமிழென்சொல்

ஆக்கம் காணில் அழிவில்லை
அத்துணை பேரும் செப்புமொழி
தேக்கம் கண்டோர் சுட்டவில்லை
தேர்ந்த தோர்நற் சிந்தைவழி
நோக்கும் நிலையில் பொக்கமில்லை
நாமும் நடப்போம் அந்தவழி
தூக்கம் கொள்ளப் பிறக்கவில்லை
தூங்காத் தமிழன் அன்புவழி.

வேறு

யாயும் யாயும் வினவியதோர் மனிதநேயம்
யாதும் யாவரும் நமதென்றோர் இனப்பாங்கும்
பாயும் நீர்செல் புணைவழிப்பார் இல்வாழ்வும்
பாடு அறியும் பண்பிலன்பில் உயிர்நிலையும்

தோய்ந்த புலத்தால் தொன்றுதொட்டு நம்தமிழும்
தொடுத்து உணர்த்தும் தொல்நெறியே போற்றிநிற்போம்
தேயும் தெளிவில் மானிடமும் தேர்ந்துயர
ஏற்றம் செய்தமிழ்ச் சொல்லமுது பருகுவோமே

## காலச் சுழற்சி

அகிலம் மகிழக் காணும் காட்சி
ஆக்கம் அறிய அமையும் மாட்சி
இன்பம் தரவல் லுலகத் தோற்றம்
ஈனம் நீக்கி இன்பம் ஆற்றும்
உண்மை உணர்த்தும் உயர்ந்த மாற்றம்
ஊழ்வினைப் படிமுறை செய்யும் ஏற்றம்
எனினும் அதனைச் சுற்றும் சுழற்றும்
ஏதும் கூறாத காலச் சுழற்சி
ஐயம் அகற்ற சுட்டும் நிலையும்
ஒழுக்கம் அறிய விளங்கும் அமைப்பும்
ஓங்கிய வாழ்வினைத் தந்திடும் கருத்தும்
ஔவை போன்றோர் அளித்துச் சென்ற
கருத்துக் கனிகள் காலச் சுழற்சியே

—o—

தொடக்கம் தொட்டுத் தொடங்கி நிற்பது
தோற்றம் அறியா அளவில் தோன்றி
கருத்துக் கெட்டா மறைப் பொருளாய்
வினைநீங் கறிவில் உயர்ந்து விளங்கும்
இயக்கும் பொருளாம் இறையால் நாளும்
இயங்கி நிலையில் மாற்றம் எனவே
இன்பம் துன்பம் தோற்றம் அழிவு
நன்மை தீமை மடமை அறிவு
உண்மை பொய்மை உயர்வு தாழ்வு
எளிமை வளமை மயக்கம் தெளிவு
ஆக்கம் வீழ்ச்சி அயர்வென
சுழலும் சுழற்சி காலச் சுழற்சியே

## தென்றல்

''வஞ்சியுன்னை வளைத்துக் கொள்ள
வந்தேனே யானும் இன்று
மிஞ்சிபோட்டு உன்னை எந்தன்
மனையாக்கி மகிழ்வேன் மன்றில்
செஞ்சிமலை மகளே மானே
சேர்த்தென்னை அணைத்துக் கொஞ்சு
கொஞ்சுமொழி குழைத்துப் பேசி
குயில்போல இசைக்கும் கன்னி
பிஞ்சான வளர்ந்த வள்ளி
பிடித்தறியா இளந்தண் தென்றல்
நஞ்சுண்டான் புகழே பாடி
நெஞ்சமதில் நிறைந்த தேவி''.

## விதி மதி வாழ்வு

விதி செய்த தவறுமில்லை மதிசெய்த பிழையுமில்லை
விதிமதியும் சேர்ந்துசெய்த சதியென்று சொல்வோமே

பதிநாடி நின்றபோது சதியெனவே வந்ததது
பதியாசை கொண்டபோது சதியெனவே தோன்றுமது
நதிநோக்கிச் சென்றபோது திதியெனவே சொல்லுமது
கதிநோக்கிச் சென்றபோது கடமையெனச் சொல்லுமது
(விதிசெய்த)

மதிசெல்லும் வான்நோக்கின் நிலையானது காட்டிடுமே
மதிகொண்டு பூமிநோக்கின் நிலையாமை காட்டிடுமே
நிதிதந்து நீதிதரும் காலமதில் சூழவரும்
புதிதான புவிவாழ்வில் புரிந்துகொண்ட உண்மையிது
(விதி செய்த)

சேதியெல்லாம் சேர்த்தளிக்கும் சிந்தனையைத் தூண்டிவிடும்
ஆதியெல்லாம் அறிந்திடவே ஆறுதலாய் வந்துசேரும்·
(விதிசெய்த)

## வாழும் கவியவர் வாழ்ந்து காட்டிய கவியவர்

| | | | |
|---|---|---|---|
| அகம்புறம் | என்ற | அகம்மகிழ் | நெறியினை |
| ஆக்கச் | செறிவுடை | ஆன்ற | சிறப்பினை |
| இயன்ற | நடையில் | இயக்க | முறையினை |
| ஈறில் | பாங்குடை | மயக்க | நிலையினை |
| உணர்த்தும் | தனிப்பெரும் | உயர்பொருள் | வடிவினை |
| ஊக்கச் | சொற்பொருள் | ஊறும | ஊற்றினை |
| எல்லாக் | காலமும் | எழில்மிகும் | பேற்றினை |
| ஏக்கம் | நீக்கிடும் | ஏற்புடை | சிறப்பினை |
| ஐயம் | அகற்றிடும் | ஐக்கிய | முடிவினை |
| ஒழுக்கம் | வளர்ந்திட | உயர்ந்த | புகழினை |
| ஓங்கி | உயர்ந்திடு | நலம்தரும் | உயர்வினை |
| ஔவியம் | மொழியா | அன்பு | நெறியினை |
| கடமை | கண்ணியம் | கட்டெனும் | முறைதனை |
| காவலர் | போற்றிய | காவியக் | கவிஞர் |
| சாற்றிய | மலரெனும் | பாடல் | கொண்டு |
| தோற்றிய | தொடையாம் | இலக்கிய | வடிவில் |
| உப்புடைப் | பண்டம் | உணவா | வதுபோல் |
| செப்பிடும் | தனிமொழி | செந்தமிழ்ப் | பூங்கொடி |
| உணர்வுடைச் | சொற்களைச் | சீர்மிகு | மலராய் |
| வண்ண | யாப்பு | வார்ப்பாய் | விளங்கிட |
| தென்னவர் | போற்றிடும் | தண்டமிழ் | உயர்ந்த |
| வானவர் | வணங்கி | வாழ்த்திடும் | விதத்தில் |
| வளர்ந்து | விளங்கும் | வளப்பம் | நோக்கின் |
| கிளர்ந்த | கால | நிலைகளில் | பைந்தமிழ் |
| தளிர்த்தல் | குன்றிட | தண்டமை | வாடிட |
| மிளிர்தல் | செய்யா | மின்கார் | பெற்றிடாத் |
| தாவா | இனங்கள் | தவித்திடும் | நிலைபோல் |
| தார்நிலை | மாறிய | தாழ்நிலை | தன்னில் |
| வாடிய | நிலையில் | வளம்நலி | பொழுதில் |
| தேடிய | செல்வம் | நாடிய | வேளையில் |
| வந்துதான் | எதிரே | வளர்ந்தோங்(கு) | நிலைபோல் |
| சிந்து | கவியென | சீருடன் | கலந்திட |

தாங்கருஞ் சிறப்பின் ஓங்கு புகழுடை
தீங்கருஞ் செயலுடை அந்தணர் குலத்தில்
ஆண்ட புகழ்மிகு அரசரின் மாண்பிணைப்
பூண்ட எழில்மிகு எட்டைய புரத்தினில்
மன்பதை உய்ய விண்ணகம் உதவிய
தென்னக மருந்தெனத் தோன்றித் தமிழென்
மொழிக்கொடி பூத்து மணக்கத் தாங்கியே
வழிவழிச் சிறக்க நோக்குடன் வளர்ந்தே
புதுமை என்றும் புரட்சி என்றும்
புதுப்புது நெறிகள் புகன்றிடும் விதத்தில்
காப்பியச் செறிவும் செம்மையும் சேர்த்துக்
கவிதை யென்னும் கற்பனைக் கணைகளை
இளமை யென்னும் களிமிகு காலத்தில்
குளுமை வாசனைக் குழம்பெனக் குவித்து
நின்றார் என்பதை அறியும் நமக்கு
வென்றார் எல்லாம் வாய்விளைச் சொல்லால்
வாழ்ந்தார் வறுமை வாழ்வினை வாட்ட
பைந்தமிழ்ப் பற்றினால் கடையெழு புரவலர்
கண்டும் அறிந்தும் செய்த செயல்போல்
நாவின் சுவைதனைச் செவிதனில் பெற்ற
நாவலர் பாரதி செந்தமிழ் நாட்டினில்
வானகம் சென்றும் தேனின் சுவையென
மண்ணகம் இதனில் மாந்தர் இடையே
தண்டமிழ்ச் சுவையாய்த் தோன்றி வாழ்கிறார்
வேட்டை விரும்பும் புலியென விடுதலை
வேட்கை வீரராய்ப் புகழுடன் வாழ்கிறார்
சாதியும் சமயமும் சாடிடும் பாரதி
வீதிகள் முழுவதும் முழங்கிடும் விதத்தில்
சீர்மிகு சந்தச் சிந்தினில் வாழ்கிறார்
முந்நசை அதனில் பெண்நசை போற்றும்
இந்நிலம் தன்னில் பெண்ணின் பெருமை
பேசிடும் பாடலால் பரவ வாழ்கிறார்
ஊதிடும் மூச்சில் அடிமை நிலைகெட
வாதிடும் வார்த்தை வனப்பில் வாழ்கிறார்

அச்சம் அறியா அஞ்சா நெஞ்சனாய்
எச்சம் இல்லா ஏற்புடை ஆத்திச்
சூடியின் சூளுரைப் பொருளில் வாழ்கிறார்
சிந்தனைச் சீர்செய் புலவர் எனினும்
நிந்தனை செய்வோர் நெஞ்சிலும் வாழ்கிறார்
மருட்சி நீக்கும் புலவனாம் தாசனின்
புரட்சி நலமிகு புதுமைக் கவிதனில்
கவிதைக் காவாம் கண்ண தாசனின்
கற்பனை நலமிகு காதல் மொழிதனில்
நற்பயன் சிறக்கும் தத்துவப் பாவினில்
புவியிடைப் பொதுமை பாடிய பாவலர்
பட்டுக் கோட்டைக் கலியாண சுந்தரம்
கட்டுக் கோப்பினைக் காட்டிய நெறியிலும்
கருத்து உயர்ந்த கவிஞர் கவிதையில்
அரும்பொருள் வழங்கும் உயிர்ப்பென வாழ்கிறார்
வாழ்கிறார் மக்கள் இனத்தில்
தாழ்விலாத் தரணியில் தகைமை யுடனே.

# புதுச் சூடி

சா. கிருட்டிணமூர்த்தி
தமிழ்ப் பல்கலைக்கழகம்

அகர வரிசையில் ஆன்றோர் சொன்ன
புகாறு மொழிகளைப் புதிய நோக்கில்
தரும்வகை யுணர்ந்து தரணியோ ரெல்லாம்
பெறும்வகை பெரிதும் நாடி
இப்புதுச் சூடியை இயற்றினன் யானே.

அளவு அறிந்துவாழ்
ஆன்றோர் போற்று
இனிமையாய்ப் பேசு
ஈயெனத் திரியேல்
உன்னை அறிந்துகொள்
ஊரைப் பழியேல்
எண்ணியது முடித்திடு
ஏக்கம் கொள்ளேல்
ஒருவழி தேர்ந்தெடு
ஓரிடம் துணைக்கொள்
ஔவெனச் சேர்ந்துவாழ்
கல்வியிற் சிறந்திடு
காரணம் அறிந்துசெய்
கிழவரை இகழேல்
கீழ்த்தனம் செய்யேல்
குறைகளைக் களைந்திடு

கூட்டம் சேரேல்
கேள்விகள் கேட்டறி
கையை நம்பிவாழ்
கொடுத்துக் கொண்டிடு
கோபம் அறிந்துகொள்
சமயம் பார்த்திரு
சாக்குச் சொல்லேல்
சிரித்துப் பழகிடு
சீதனம் கேளேல
செருக்கில் வாழேல்
சேர்ந்து வாழ்ந்திடு
சொல்வது செய்திடு
சோர்வு அகற்றிடு
தமிழின உணர்வுகொள்
தாழ்வுணர்ச்சி கொள்ளேல்
திரும்பிப் பார்த்திடு
தீத்தொழில் பழகேல்
துணிந்து முடிவெடு
தூக்கம் குறைத்திடு
தெவிட்ட உண்ணேல்
தேவையைச் சுருக்கிவாழ்
தைக்கப் பேசேல்
தொண்டிலனச் செய்துபார்
தோல்வியிற் கலங்கேல்
நன்றி யுணர்வுகொள்
நாளை நினைத்திரு
நிலைகெட நடவேல்
நீளப் பேசேல்
நுணுகி ஆய்வுசெய்
நூலொடு தொடர்புகொள்
நெஞ்சில் அன்புகொள்
நேற்றை மறந்திடு

நையாண்டி பேசேல்
நொடிப்பொழுது' வீண்செயேல்
நோக்கம் முடிவுசெய்
பழம்பொருள் சேர்த்திடு
பாதையில் மாறேல்
பிஞ்சில் பழுக்கேல்
பீடுடை நெறிநில்
புதியவை போற்றிடு
பூவையர்க் குரிமைகேள்
பெற்றோர் மதித்திரு
பேசித் தீர்வுகாண்
பொறுமை உணர்வுகொள்
போட்டியில் சினங்கொளேல்
மகளிர் கல்வியளி
மாலை விளையாடு
மிடுக்காய் நடவேல்
மீண்டும் அளந்தறி
முடங்கிக் கிடவேல்
மூப்பை நினையேல்
மெச்சப் பணிசெய்
மேலிட உறவுபேண்
மொழிநலம் எடுத்துரை
மோதல் தவிர்த்திடு
மௌனம் அறிந்துகொள்
யாவர்க்கும் மதிப்பளி
வன்முறை வெறுத்திடு
வாழ்வை உணர்ந்துகொள்
விரும்பிப் பணிசெய்
வீணரைத் திருத்திடு
வெறுக்கப் பழகேல்
வேண்டியது விரும்பு
வையகம் போற்றவாழ்

# தோழனே மானுடம் பேசு!

ந. கிருட்டிணமூர்த்தி
சென்னைப் பல்கலைக்கழகம்

தோழனே
உன்
இரண்டாவது
உருவத்தில்
ஒளிந்து கொண்டிருக்கும்
மானுடத்தைப்
பேசவிடு.

உன்
மூன்றாவது
கண்ணைத்
திறந்து
இந்த
உலகத்தைத்தைப் பார்.

உன்
பார்வைகளில்
பட்டுத் தெறிப்பவை
பகல் வேஷங்களில்
தோய்த்தெடுத்த
முகங்கள்;
அதன்
பளபளப்பைக் கண்டு
நீ
ஏமாந்து போகாதே!

உன்
மௌனங்களில்
புதைந்திருப்பது
எதிர்காலத்தின்
இனிய 'உதயம்'
என்பது
எனக்குத் தெரியும்

ஆனால்
அவை
கண்ணிவெடிகளாய்
அணுகுண்டுகளாய்த்
தெரியும்
'அந்த'
கண்களைப்பற்றி
நீ
கொஞ்சமும்
கவலைப்படாதே.

ஏனெனில்
அவை
கண்களல்ல
நாட்டை
அரித்து அரித்துப்
புரையோடிய
புண்கள்.

வானத்துக்கும்
பூமிக்கும்
இடையே
விரிந்து கிடக்கும்
இந்தப் பேரண்டம்
உன்
பாதங்களுக்குச்
சொந்தமென்பதை

மறந்து விடாதே.
சின்னதாய்
உன்னைச்
சிறைப்படுத்தியிருக்கும்
வட்டவலையைக்
கிழித்தெறி
உந்து; உதறி
வெளிக்கிளம்பு

ஆப்ரிக்கத்
தோழனோடும்
அஸ்ஸாம்
தோழனோடும்
நம்
தமிழீழத்
தோழனோடும்
இன்னும்
இவர்போல்
முகவரி
மட்டுமின்றி
முகங்களும்
தொலைந்து போனவரோடு
மனதால்
மட்டுமின்றிச்
செயலாலும்
மானுடம் பேசு

புதிய பாதை
அவர்களுக்குக்
காட்டு; அவர்தம்
வாழ்வில்
புத்தொளியூட்டு

எழு தோழனே
எழு

பிறர்தம்
கால்களில்
விழுந்தது போதும்
வீழ்த்து
அவர்தம்
மூரண்கொள் சிந்தனைய

அதிகார வர்க்கம்
என்பது
ஆகாயப்பூ அல்ல
ஆச்சர்யம் கொள்ள
அது
சுகமாய்
உன் முதுகின்மேல்
ஏறிக்கொண்டே
உன்
கண்களைக்
குறிபார்க்கும்
கண்கொத்திப் பாம்பு
என்பதை
நம்பு

உழைத்தும்
உயர முடியாமல்
போனாய் என்பதால்
கேள்விக் குறியாய்
வளைந்து போகாதே

நீ
அறியாமலே
நீ
சுரண்டப் படுகிறாய்
என்பதை அறி
மாறு — அவர்களுக்கு
வியப்புக் குறியாய்

சமுதாய மாற்றம்
என்பதே
'விடிவு'
என்றுணர்

அது
நில உடைமையின்
வாய்க்கால் அல்ல
பொது உடைமையின்
வடிகால்
என்றுணர்த்து
மேலும்
இம்முயற்சியை
இங்கு நீ
முதிர்ச்சியாக்கு

இந்த
உலகப் பந்தை
உன்
கைகளால்
எட்டிப்பிடி;
விளையாடு
உன்னை
வித்தியாசமாகக்
காட்டு
முகவரி
இல்லாமலே
தெரியட்டும்
யாவர்க்கும்
உன் முகம்

போராடு
பிறர்
புகழ வேண்டும்
என்பதை மற

வெற்றிபெறு
பிறர்
வாழவேண்டும்
என்பதை நினை
ஓய்வெடு
ஆனால்
உள்ளில் இயங்கு
உன்னில்
ஓராயிரம்
பூக்கள் மலரட்டும்
அவையும்
மானுடம் வாழ
வாழட்டும்
மானுடர்
வாழ்த்திப் பேசட்டும்
நன்றி தோழனே

# இயற்கையும் மனிதனும்

க. குணசேகரன்
சென்னை

1. வளமிருக்கும் வரையிருக்கும் வம்பும் தெம்பும்
வற்றியபின் அரசமர இலைகள் போல
உளமிருக்கும் சலசலக்கும் கூச்சல் போடும்,
உலகத்தைப் படைத்தவனைச் சாடச் சொல்லும்.
அழகிருக்கும் வரையிருக்கும் ஆண வத்து
அழகழகாம் கற்பனைகள்! அகன்ற பின்போ
எழவிருக்கும் நரைதிரைகள்! எழுந்த பின்னோ
ஏதிருக்கும் நினைத்திருக்க ஏக்கந் தானே.

2. ஆலமரம் போலிருப்பர் கிளைகள் தாங்கி
அவனியிலே ஓரிருவர் எட்டிக் காய்சேர்
சாலமரம் பழுத்தாலும் உதவா யார்க்கும்
சரிநிகராம் மாந்தர்களும் உண்டு பாரில்
கோலமரம் வேம்பது போல் கைப்பாய்ப் பேசி
கொடைநிழலாய்க் கொள்மருந்தாய் வாழும் மக்கள்
ஞாலம் வரைப் புகழ்ச்சேர்ப்பர் ஐய மில்லை
ஞானிகளாய்ப் புரந்திடுவர் கற்ப கந்தான்!

3. ஊருக்கு நடுவினிலே பழுத்து நின்ற
உதவாத நச்சுமரம் வறியார்க்(கு) ஈயா
தாருக்கு வள்ளுவனார் தந்த பட்டம்
தருபவனை ஊருக்குப் பக்க முள்ள
நீருக்கு நிகரென்றார் ஆன்றோர் அந்த
நிலையான மாபட்டம் கொடுப்ப வற்கு

பாருக்கும் வானுக்கும் பெரிய தாகப்
பகர்ந்திட்டான் குறிப்பார்க்கா உதவி தன்னை

4. புல்லாகிப் போனாலும் ஆடு மாடு
புசித்திடற்கு உணவாவேன்; புவியில் பாராங்
கல்லாகிப் போனாலும் மாந்தர் வாழக்
கவின்மிகுந்த வீடாகிக் காட்சி யாவேன்;
செல்லாகிப் போனாலும் கோழிக் குஞ்சு
செகுத்துண்ண உணவாவேன்; மனிதன் என்னும்
சொல்லாகிப் பயனற்ற வாழ்க்கை வாழ்ந்தால்
சோற்றுக்குக் கேடாவேன் சுமையும் ஆவேன்.

5. பிறந்தவரைப் பார்க்கின்றேன்; பீடு பொங்கப்
பிறிதிங்கு வாழ்ந்துவிட்டுக் காலம் வெல்ல
இறந்தவரைப் பார்க்கின்றேன்; இவர்கள் சேர்த்த
இருநிதியம் ஒருசிறிதும் எடுத்துச் செல்ல
மறந்தவரைப் பார்க்கின்றேன்; எனினும் இந்த
மணமக்கள் சுற்றமொடு பொருளைப் பொன்னைத்
துறந்தவரைப் பார்க்கின்றேன் இல்லை மாதோ!
துயர்மனிதன் உடன்பிறப்பு ஆசை யன்றோ?

6. இலைதந்து பூத்தந்து காய்கள் தந்து
இனிக்கின்ற பழம் தந்து வீழ்ந்த பின்னும்
நிலைதந்து தண்டினையும் தந்து பின்னும்
நீடிக்கக் கன்றுகளை ஈந்து நல்ல
விலைதந்த வாழையினைப் போல மக்கள்
வியனுலகில் பயன்பட்டால் சமூகம் என்றும்
கலைதந்த கவின்பயனாய் வாழும் உண்மை
கண்டிடுக! வாழையடி வாழை வாழ்ந்து!

மழை (காவடிச் சிந்து)

1, வானிருந்து வந்தவுயிர்ச் சத்து - பெரு
வையகத்து மாந்தருக்குச் சொத்து - மக்கள்

வாழவென்றே தாழவந்த
வானவர்கள் விட்டெறிந்த

முத்து - உயிர்
வித்து

2. ஆய்ந்தவர்க்கு ஐந்திலொரு பூதம் - மழை
அன்றருளல் மூன்றுமுறை மாதம் - என்றும்
ஆனவள வாகிடிலோ
ஆகிவரும் உண்ணுதற்குச்

சாதம் - இல்லை
ஏதம்

3. செந்தழலை உண்டுவிட வல்லாய் - எனில்
தென்றலினைத் தீண்டிடலே இல்லாய் - வெளி
வந்தவழி என்பதினால்
வாழவிட்டு வந்துவிட்டாய்

நல்லாய் - நன்றி
சொல்லாய்

4' தாயகமோ உந்தனுக்கு வானம் - நீர்
தாவிவர வில்லையெனில்ஊனம் - வரத்
தானமொடு தவமிரண்டும்
தங்குவதால் உய்வதெங்கள்

மானம் – அன்ன
தானம்

5. புக்ககம் உனக்குயிந்தப் பூமி - மழை
பூசிக்கப் படுவதால் சாமி! - நில
மாப்பிள்ளையைப் மாலையிட்டு
மாவிளைச்சல் பெற்றெடுத்தாய்

காமி - கடல்
மாமி

6, நன்செயொடு புன்செய்வளம் கண்டு - நனி
நாற்றிசையும் நின்புகழே விண்டு - உரை
செய்திடற்கு நாடுநகர்
செம்மையுற நின்வருகை

உண்டு - புகழ்
மொண்டு

7. வானிருந்த காரணத்தால் தண்மை - இறை
வைத்தனுப்பி விட்டிருந்தான் உண்மை - எங்கள்
காற்றுனக்குப் பட்டதினால்
காட்டுகின்றாய் பேரழிவுப்

புன்மை - இல்லை
நன்மை

8. வானமதைத் தூய்மையதாய் ஆக்கி - மண்
வாய்த்தவளம் பொங்கிடவே தேக்கி - கடல்
வற்றிவிடப் போகுதென்று
வாரியடித் தோடுவது

நோக்கின் - இன்பம்
பூக்கும்

9. நல்லவர்க்கும் அல்லவர்க்கும் ஒன்றாய்ப் - பெய்து
நானிலத்தில் நடுநிலையாய் நின்றாய் - நாட்டில்
மேடுபள்ளம் மாறிவர
மேதினியைச் சீர்படுத்திச்

சென்றாய் - நிதம்
வென்றாய்

# அறிஞராற்றுப்படை

வ. குருநாதன்
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை.

மலர்தலை யுலகம் அலர்தலை யுறுகால்
இதழ்விரி தந்த இசையோ டசைந்து
நடைபயின் றேயிந் நாடகத் தாடி
இடைவரு மணிகள் மிடைதர வியன்று

மதியின் விளங்கு முதிய விளந்தமிழ்க்
கல்விக் கடலிடை மிடலொடு பாய்ந்து
நீந்தியு மதனிடை யேந்து தோணியை
உகைத்தும் சென்றங் குறுபொரு ளாகிய
மணியும் பவளமும் மதிமலி தரளமும்

வாரிக் கொணரும் வண்கலை தேர்ந்து
கலையின் இளைஞர் கலையின் முதுவர்
ஆய்வியல் நிறைஞர் முனைவரென் றாங்குப்
பட்டங் கள்பல பெற்றநல் லறிஞரீர்!
நோக்க முங்குறிக் கோளுங் கொண்டுநல்

ஊக்கம் மேலெழுந்து ஆக்கம் நோக்கிடும்
ஏக்கந் தீருளத் திளைஞரீர்! மற்று
வேற்றி டப்பணி போற்றி யவ்விடத்து
ஏற்ற நற்பணி யாற்றி முதியராய்
ஒய்வு பெற்றபின் னொடுக்கம் மாறவே

ஊக்க மோடுரன் நீக்க மில்திருப்
பேரி ளந்தகைப் பெரியீர்! சீருறு
மாண வர்பலர் ஆசான் மாரொடு

காண வந்ததொரு மாநா டெனவே
கூடி யிங்குநீர் குழுமி யிருந்தீர்;

நாடி யொன்றுநான் நவில்வது கேளீர்
மேலை நாளெலாம் வேலை தேடினீர்;
சாலை யோடுநும் காலும் தேய்ந்தன
வேலை யின்மையே திண்டாட் டமதாய்க்
காலை மாலைகள் கழிந்தன நொந்தீர்!

பாலை யேயினி வாழ்வு தானெனின்
சோலை யேயினி சொல்வழி வாரீர்;
நஞ்செய் புஞ்செய்யும் இஞ்சி மஞ்சளும்
கொஞ்சு தஞ்சைமா நகர்தென் குடபால்
ஆயிர மேக்கரின் அகலிடங் கொண்ட

பாயி ருந்தமிழ் பல்கலைக் கழகம்!
தமிழ்நா டரசும் தமிழ்மூ தறிஞரும்
ஆராய்ந் தமைத்த அருங்கலைக் கழகம்
நாடும் மொழியும் நற்பண் பாடும்
ஏடும் இலக்கிய இலக்க ணங்களும்

கலையின் நிலையும் வளர்தமிழ் வகையும்
அறிவிய லாக்கமும் அவ்வகை பிறவும்
ஆய்ந்து தமிழின் அவ்வத் துறைகளில்
தோய்ந்து நூல்செயும் தூய நற்பணி
தொடங்கி வீறொடு நடந்து போமதை

நெருங்கி நீவிரும் இணங்கு வீரெனின்
கேண்மி னோவதன் மேன்மைப் பான்மைகள்
மொழிப்பு லம்வளர் தமிழ்ப்பு லமெனா
கலைப்பு லம்மறி வியற்பு லமெனா
சுவடிப் புலமெனச் சேரைம் புலமும்

மாந்தர் அறிவினுக் கேய்ந்தவை போல
வாய்ந்தன வற்றின் வகைவரிக் கேண்மின்

மொழிப்பு லத்தின் வழிப்ப டுவிரெனின்
இலக்கி யத்துறை யெய்துவிர் முதலில்;
சங்கவி லக்கியச் சால்புடை மாந்தரும்

காப்பியக் கதைஞரும் யாப்பிய லறிஞரும்
தெய்வத் திருமுறை தேர்ந்து தெளிஞரும்
சிற்றி லக்கியச் செல்வரும் இற்றைப்
புத்தி லக்கியம் புரிஞரும் மற்றை
ஒப்பி லக்கியம் உரைஞரும் தப்பாது

இலக்கி யத்திற னாய்ஞரும் உள்ள
நிலைக்க ளமதாய் நேர்படக் காண்பீர்;
கண்டபின் மெல்லக் கால்பெயர்த் திட்டால்
மொழியி யல்துறை முன்னுவிர்; முன்னின்
தொல்காப் பியமுதல் பல்லி லக்கண

நூலறி புலவரும் கால்டுவெல் போலும்
ஒப்பி லக்கண முடையரும் அப்பால்
மாற்றி லக்கண நடையரும் மற்றும்
ஒலியன் னியலார் உருபன் னியலார்
பொருண்மை யியல்பல் கிளைமொழி யியலார்

வரலாற் றுச்சமு தாய மொழியியல்
உளமொழி யியலொடு உயிர்மொழி யியலார்
பலரையு மங்கே பயில்வுறப் பார்ப்பிர்;
பார்த்த வுடனதன் பக்கத் துறையாம்
நாட்டுப் புறவியல் நண்ணுமின்; நண்ணின்

ஏட்டில் எழுதா இன்றமிழ்ப் பாடல்
பல்வகை யானவும் பழமொழி விடுகதை
சொல்கதை யுங்கதைப் பாடல்க ளும்வழி
பாடுக ளும்விழ வாடல்க ளும்கலை
ஈடுக ளும்தொகுத் தாயுநர்க் காண்குவிர்;

செந்தமி ழீன்ற சீர்மலை யாளம்
கன்ன டங்களி தெலுங்கு மராத்தி
வங்க ளத்தொடும் இந்தி யுட்படும்
இந்திய மொழிகள் மைய மொன்றையும்
வந்த தத்துவ மையத் துடனே

அந்த மொழிப்புல மதனுளே கண்டபின்
வவர்த மிழ்ப்புலம் படர்குவி ராயின்
இலகு தமிழ்நூல் உலக மொழியிலும்
உலக மொழிநூல் பழகு தமிழிலும்
பெயர்த்த ளிக்கும் நயத்தகு துறையும்

உலக நாடுகளில் விலகி வாழ்தமிழர்
தாய்மொழி யாந்தமி ழறியவு மின்மையால்
கற்பித் துமவர் குடிநிலை யோடு
சமுதாய யநிலை பொருள்நிலை தேறி
பண்பாட் டுப்பரி மாற்ற நிகழ்ச்சிகள்

ஆராய்ந் துரைக்கும் அயல்நாட் டுத்தமிழ்க்
கல்வித் துறையும் சொல்லடை வோடே
அகர முதலிகள் அனைய பல்தொகை
தொகுத்து அளிக்கும் தொகுப்பியல் துறையும்
அறிவிய லைத்தமி ழின்கண் வளர்க்கும்

திறனறி துறையும் வருநெறி கண்டு
சமுதா யவியல் சார்ந்துரை துறையும்
அப்பு லத்தினில் கப்புறக் காண்குவிர்.
கண்ட றிந்துபின் கால்நடை யிட்டு
ஈர டியெடுத் தேகுவ தன்முன்

பாரித் துவரும் பண்ணி யற்றமிழ்ப்
பாட்டுக் கள்செவி கேட்டுப் புகுமின்
அசைக்கும் நெஞ்சை இசைத்துறை யதுவே
குழலும் யாழும் முழவும் முதலாய்
இணைந்த கருவிக ளிழைந்து குழைவுற

வனைந்த பாடலை வாயுறப் பாடுநர்
பண்ணொ டேதமிழ் பயின்ற நாவினர்
எண்ணொ டேயள பிசைத்த கையினர்
அவர்தி றங்கண் டகன்றனி ராயினர்
ஆடல் பாடலொ டமைந்த வரங்கின்

நாட கத்துறை நணுகுவி ரங்கே
பாவைக் கூத்துகள் பலவு முந்தைய
தாவி லாத்தெருக் கூத்தொடு தேறிய
கலைஞ ரும்கலை நிகழ்த்து நிலைஞரும்
நடிக ரும்நடிப் பிலக்கண வறிஞரும்

குழுமி யேயிருந் தொத்திகை யும்பிற
நிகழ மைப்பும் நிகழ்த்துதல் காண்பிர்
கட்டி டக்கலைத் துறையொடு தொடரும்
சிற்பத் துறையினைச் சென்று காண்பதொடு
கலைப்பு லத்தைக் கழிய நடந்தால்

அறிவி யற்புலம் அங்கெதிர் தோன்றும்
தொல்லறி வியல்துறை துன்னுவி ராயின்
பண்டைத் தமிழரின் பயிரியல் விலங்கியல்
முதலிய அறிவின் முழுமை யுணர்ந்துரை
சான்றவ ரங்கே தோன்றக் காண்குவிர்

பண்டை நாள்மகன் பாய்ம ரக்கலன்
கண்டு நீர்மிசைச் சென்று வந்ததும்
கரும்பொ னாகிய இரும்பி னாலவன்
கைவி னைப்பொருள் செய்து வாழ்ந்ததும்
என்றி னையதொழில் நன்ற றிந்துவரும்

தொல்தொ ழில்துறை தோன்றக் கண்டபின்
சித்தம ருத்துவ நற்றுறை செல்லுமின்
நோயும் நோய்முத லுந்தெ ரிந்துதணி
வாய்ம ருந்தினை யறிந்து தந்திடும்
அத்து றைப்பணியை மெச்சியே மீளுமின்

அறிவி யற்புல மதுவிடுத் தேகுமின்
ஓலையோ டரிய தாளிற் சுவடி

கல்லெ ழுத்தெனும் முத்துறை யாகும்
சுவடிப் புலமதன் சுற்றறையுங் காணுமின்;
பதிப்பி லாதன மதிப்பு வாய்ந்தன

ஆகிய சுவடிகள் ஆய்ந்து பதித்தும்
கல்வெட் டுக்களின் காலம் செய்தி
அறிந்து நாட்டு மொழிவர லாறுகள்
தெரிந்து ரைத்தும் திகழு மப்புலம்
அதனை யுங்கண் டகன்றனி ராயின்

அருங்காட் சியக மதனுளே சென்று
சிலைமுத லாயின கலைநிலை கண்டபின்
நூலக த்தினுள் நுழைந்து பன்மொழி
நூல்க ளுந்துறை வாரியிற் காண்குவிர்;
கண்டு பல்கலைக் கழக மேநமது

தொண்டு நற்கள மென்று கொண்டிரேல்
மாண்ப மைந்ததுணை வேந்த ரையுடன்
காண்ப தேயுமக் கேய்ந்த தோர்முறை
கற்ற கல்வியும் பெற்ற பட்டமும்
சற்று நேரத்தில் வெற்றி யுற்றிடும்!

எத்து றையுமக் கேய்ந்த தோவதில்
உய்த்து நும்பணி யுலகுக் காக்குவர்
துறையை யுற்றுநும் குறையை யெற்றியுள்
நிறைவை யுற்றபின் நிலைமை பற்றிநல்
ஆக்கப் பணிகளில் ஊக்கங் காட்டுவிர்

உண்மை யும்கலை ஒண்மை யும்தமிழ்
வண்மை யும்தெரி வகைநும் ஆய்வினைத்
திண்மை யிற்செய்து திறனுற நாட்டுவிர்
நில்லா வுலகினில் நிலைமை யுற்றிட
எல்லா வகையிலும் ஏற்றது கல்வி!

ஆதலி னால்நும் ஆய்வும் படைப்பும்
சாதலி லாத சாதனை யாகுக!
தீதி லாத்திறன் கூர்தலால்
ஓது நற்றமிழ் ஓங்குக உலகிலே!

# இறைவனைக் கேட்டேன்

ச. சவகர்லால்

இறைவனைக் கேட்டேன் பதிலில்லை — இங்கே
இருப்பவர் பதிலும் சரியில்லை

நல்லவர் வாழ்க்கை நலிகிறதே — நாளும்
நடப்பினில் துன்பம் நிறைகிறதே
அல்லவர் வாழ்க்கை உயர்கிறதே — இந்த
அமைப்பினில் நலங்கள் விளைந்திடுமா? (இறை)

வஞ்சகம் கைகொட்டிச் சிரிக்கிறதே! — நல்ல
வாய்மையும் தூய்மையும் சரிகிறதே
சஞ்சலம் அறத்தையே சூழ்கிறதே! — இந்தச்
சூழலும் நன்மை அளித்திடுமா? (இறை)

நல்லன செய்யத் துடித்திருப்பான் — அவன்
நலிந்து கிடக்கிறான் அடித்தளத்தில்
அல்லன செய்பவன் மேல்தளத்தில்! — இந்த
அடித்தளம் மேல்தளம் சரிதானா? (இறை)

கள்ளியில் முல்லைகள் பூப்பதில்லை — எந்தக்
கானலும் தாகமே தீர்ப்பதில்லை
கள்ளமே அரியணை அமர்கிறதே! — இந்தக்
காட்சி அமைப்பெலாம் சரிதானா? (இறை

காக்கை மயிலென ஆவதில்லை — எந்தக்
காலமும் தோகையை விரிப்பதில்லை

சேர்க்கையில் காக்கை சிறக்கிறதே — இந்தச்
செப்பிடு வித்தைகள் சரிதானா? (இறை)

நீதியும் நேர்மையும் சாகிறதே! — தூய
நெஞ்சங்கள் தீயினில் வேகிறதே
சாதிகள் சிறகினை விரிக்கிறதே! — இந்தச்
சூழலில் அறங்களே வென்றிடுமா? (இறை)

கீதையை ஏனடா சொல்லிவைத்தாய் — எந்தக்
கிறுக்கனும் அதன்வழி நடப்பதில்லை
போதையின் நெறிபுகும் மக்களுக்கே — உன்றன்
கீதையின் போதனை சுகம்தருமா? (இறை)

யாரடா அறநெறி தொடர்ந்திடுவார் — இங்கே
யாரடா நாளுமே இடர்ப்படுவார்?
பாரடா கவுரவர் சிரிப்பதனை — அந்தப்
பாண்டவர் கைகளை நெறிப்பதனை

சங்கெடுத் தூதடா சமர்வரட்டும் — அந்தச்
சமரினில் முடிவொன்று தான்வரட்டும்
இங்கெடுத் தெறியடா சக்கரத்தை — தீமை
இலையென அழித்துவிட்டது வரட்டும்

குருச்சேத் ரம்தான் மறையவில்லை — அந்தக்
கவுரவர் பரம்பரை குறையவில்லை
இருப்பதில் அறமதே வெல்லவேண்டும் — கண்ணா!
இவ்வழி போரிடத் துணிவுமுண்டா? (இறை)

# மருத்துவம் சிரிக்கிறது

மு. சற்குணவதி
சென்னைப் பல்கலைக்கழகம்

பிரசவ வேதனை
உயிர் கொல்லும் என்பார்கள்!
உண்மைதான்!
வேதனை விட்டபோது
உயிர் இருந்தும்
கொன்றுவிட்ட நிலை ஒன்று

மழலை பெற
பிள்ளைப் பாசத்தால்
துடிக்கிறாள் ஒரு பாவை!
படிப்பறியா கணவனுடன்
மருத்துவமனை வந்துவிட்டாள்?

தனி அறையில் வைக்கப்பட்டு
தாதிகளின் (நர்ஸ்களின்)
கருணை எனும் சொல் அம்பால்
காயப்பட்ட மனத்தோடு
மயங்கி விட்டாள்!
நேரம் பார்த்திருந்த நர்ஸ் முதல் டாக்டர் வரை
கடமை முடிந்ததென்று
பிணக்கிடங்கில் தூக்கி எறிந்துவிட்டு
அறையையும் அடைத்துவிட

பழைய துணிக் கொண்டுவர
ஊருக்கு ஓடிச் சென்றுவந்த கணவன்
காரணம் கேட்டபோது,
இறந்துவிட்ட பிணத்தை
இப்போது காட்ட மாட்டோம்!
கதவை அடைத்துவிட்டோம்!

எங்கள் கடமை முடிந்தது
காலையில் வந்துப் பார்!
என்று
கருணை மழை பொழிந்துவிட்டு
கடமையில் இறங்கி விட்டார்!
போலிக்
கடமையில் இறங்கிவிட்டார்!

அலமாரித் தட்டுகளில்
பிணங்கள் சில
அலங்கோல நிலையில்
அடுக்கி வைத்திருக்க
அதனிடையில்
பிரசவ வேதனையில்
மீண்டும் ஓர் குரல்!
அம்மாவென்று அலறியது!

அடுத்து வந்தது
குழந்தையின் அழுகுரல்?
அறையைச் சுற்றி அழுதுவந்த
கணவனுக்கு
பிண அறையைச் சுற்றி
அடுத்தடுத்து
இரு குரலும் கேட்கிறது!
மோசம் எல்லாம் புரிகிறது!
அவனை அறியாது
ஆவேசம் பிறக்கிறது!

அருகிருந்த அனைவரையும்
அழைக்கிறான் அழுகையோடு!
சிலர் அச்சத்தால்
அவன் குரலுக்கு
பதில் கொடுக்கவில்லை!
அதிகாரிகளோ
அவனை
மனம் மயங்கியவன் என்று
மாறுபட்டு நோக்கி
மனங்களை மூடிக்கொள்ள,
மனந்துடித்த அப்பாவியோ
கால்கள் பின்னலிட
காவல் நிலையம் செல்கிறான்!
அதற்குள்

செவ்வானம் சிவந்து விட்டது!
அதிகாரி வந்தார்!
அங்குமிங்கும் அவனலைய
உச்சி வேளையில்
ஒரு காவலர் அவனுடன் வந்தார்,

பிண அறை திறக்கப்பட
தாயும் சேயும்
உயிரோடு இருப்பதைக் கண்டு,
உயிரோட விளையாட
டாக்டருக்கு தண்டனை
எனும் பெயரால்
இடமாற்றம் செய்யப்பட்டு,
வேறு ஏழைகளின் உயிரோடு
விளையாட உத்தரவும்
அரசாங்கம் அளித்து விட்டது!
மருத்துவம் செய்யும்
மருத்துவர்களே!
மனம் ஒன்றும்
தொழிலல்லவா உங்களுக்கு!

அதில்
மறதி வரலாமா!
இதயத்தை அறுக்கும்போதும்
வாழ வைக்கும் வயிற்றினை
பிளக்கும் போதும்
இன்னும் பல செயலின்போதும்
அதில் நீங்கள்
கருவிகளை மறந்து வைப்பதினால்
காலம் சிலருக்கு
முற்றுப்புள்ளி வைக்கிறது!
உங்களுக்கு வேண்டுமானால்
இது மறதியாகலாம்
மக்களுக்கு
மரணக் குழியல்லவா!
உங்களின்
செயலைக் கண்டும் காணாது
பார்வையைத் திருப்பிக்கொள்ளும்
மனிதர்களைக் கண்டு
மருத்துவம் சிரிக்கிறது

## 2. எங்களைத் தெரிகிறதா!

எங்கள் தலைகள்
எப்போது நிமிரும்!
வேடிக்கைப் பார்க்கும்
வீணரல்ல நாங்கள்!
பட்டு நகை பளபளப்பு
இப்படி
எதையும் எடுத்தணிய
நியாயமில்லை!
நடைப்பாதையில்
நடக்கும் உங்கள் கால்களில்
உறவாடும் செருப்பையே
எங்கள் கண்கள்

இமைக்கிடையில் பார்த்திருக்கும்!
தியாகிகள் சோம்பேறிகள்
சுயநலக்காரர்கள்
இப்படி எத்தனையோ
முத்திரை மனிதர்களின்
செருப்புக் கிழிசலை
தைத்துக் கொடுக்கிறோம்!
அவர்கள் மனங்களின்
கிழிசலை மட்டும்
ஏனோ
தைக்க முடிவதில்லை!
கால்களைக் கடித்தாலும்
காதறுந்து தொங்கினாலும்
மாற்றிக் கொடுக்கிறோம்!
ஆனால்
மனிதர்களின்
கடிகளை மட்டும்
எங்களால் மாற்ற முடிவதில்லை!
வண்ணமும் வாசமும்
நிறையப் பெற்றும்
குப்பைகள் போல்
கவிக்கப் படுகிறோம்
காரணம் சொல்கிறார்கள்
மாடியோரம் உதிக்காமல்
மண்குடிசையோரம்
மலர்ந்து விட்டோமாம்!
செருப்பு உங்களைத்
திசை திருப்பும்போது
எங்களைத் தேடுகிறீர்!
அடுத்த நிமிடமே
உங்கள் காலடியில்
மிதிபட்டாலும்
உங்கள் நினைவுகள்
ஏனோ திரும்புவதில்லை!

எங்களைத் தெரிகிறதா?
சாலையோரத்து
சமுதாயம் நாங்கள்!
இரவு நேரத்தில்
மரங்களுக்குக் கூட
மனநிம்மதி போலும்
உறங்கி விடுகிறது!
எங்களுக்கு மட்டும்
உறக்கம் வருவதில்லை;
மனச் சுமைகளால்!
கதிரவன் வரவால்
இரவு விடியுமாம்!
சொல்கிறார்கள்!
எங்களின் இரவுகள் மட்டும்
ஏனோ
விடிவதே இல்லை!
அதிசய இரவோ!
கீழே பாருங்கள்!
எங்களைத் தெரிகிறதா!
நாங்களும்
உங்களின்
உறவுகள்தான்!

# இயற்கையோடு இணைந்து வாழ்வோம்

சாரதா சுப்ரமணியம்
அண்ணா ஆதர்ச மகளிர் கல்லூரி, சென்னை.

எந்தையும் தாயும் இனிதாய்க் கற்று
விந்தைகள் புரிந்து வளர்த்த தமிழில்
நந்தமிழ் அன்னையை நயமாய் வணங்கி
இன்தமிழ்க் கவிதை இயம்பிட வந்தேன்!

இயற்கைச் செல்வங்கள் ஏற்றமுடன் பெற்றும்
வியனுலகம் அமைக்க விரும்பிட வில்லையே?
இன்னுயிர் காக்கும் கடலும் மலையும்
மன்னுயிர் வளர்க்கும் வனமும் பிறவும்

மானிட வாழ்விற்குத் துணையே யன்றோ?
மானிடர் இதனை யறிந்து நன்றே
இனிய இயற்கை இதனுடன் இயைந்து
இனிமை வாழ்வில் பெற்றிடல் நலமே

## கடல்

மலையினின்றும் பிறந்து வரும் ஆற்றுவெள்ளம்
அலையலையாய்ப் புரண்டு வரும் ஆழிவெள்ளம்
கலையெல்லாம் வளர்த்து வரும் காலவெள்ளம்
நிலையின்றி நித்தம் ஆர்ப்பரிக்கும் ஊழிவெள்ளம்

வாணிகம் செய்திடவே வகைகள் காட்டும்
தோணிகள் கலங்கள் துணையாய் ஓட்டும்
பல்லுயிர் வாழ்ந்திட வளங்கள் ஊட்டும்
நல்லுணவில் நற்சுவைசேர் உப்பைக் கூட்டும்

முந்நீரென உலகம்சொல் உவர்நீர் கடலே
வெந்நீராய் ஆவியாகும் வேலை செய்தே
நந்நீர் முகில்சேர் ''வேலை''யே நீயெம்
கண்ணீர் போக்கிக் கவலைகள் மாற்றினாயே!

ஆடவர் வினைபுரிய விரைந்தே செல்வர்
தேடற்கரிய செல்வம் தேடியே கொணர்வர்
பாடல்சான்ற புலவோரும் பாடும் பொருளே!
ஆடல்வல்ல விறலியென ஆடும் கடலே!

பல்வேறு மதங்களென வேற்றுமை பேசும்
பல்வேறு மாந்தர்க்கு ஒற்றுமை உணர்த்த
வெவ்வேறு ஆறுகள் எண்வேறு திசைகளிலே
அவ்வாறு களனைத்தும் சங்கமம் உன்னில்!

செல்வங்கள் பெருகவே செழிப்புடன் வாழவே
நல்விளை பொருள்களை நலமாய் நல்கியே
நல்முத்து பவளங்களும் சங்கும் தந்துமே
பலப்பல பணிசெய் கடலே வாழியவே!

காக்கும் கடவுளென எண்ணும் மாந்தர்துயர்
நீக்கும் நெய்தற் கடவுளே! உறுபசி
தீர்க்கும் சுறவும் தருவள்ளலே! பாவம்
போக்கும் அன்னையே! வாழியே நீடுழி!

கைம்மாறு கருதாக் கருணையில் கடவுளொத்தாய்!
முத்தும் பவளமும் ஏந்திவரும் வணிகரொத்தாய்!
உண்பொருள் பலதந்து வேளாள ரொத்தாய்!
முந்நீரே புகழிலே முடிவேந்த ரொத்தாய்!

## மலை

மலர்தலை யுலகில் மங்காப்புகழ் பெற்று
அலர்கதிர் ஞாயிற்றால் பல்வளமும் பெற்று

பலர்புகழ் கேட்டுத் தலையை நிமிர்த்தும்
சிலர்போல் அல்லாத சான்றோ ரன்னமலை!

வேங்கை மரங்கள் தொறும் மலர்கள் பூக்கும்
வேங்கைப் புலிகளும் தமது இரையை நோக்கும்
அடர்த்த மரங்களுடன் நல்ல சுனைகள் காட்டும்
படர்ந்து பல்வகை யான்நல் வளங்கள் கூட்டும்

தேனின் அரும்புகள் மெல்லத் தளைய விழும்
ஊனினை உருக்கும் நல்ல தென்றல் தவழும்
சீரிய கொள்கையிலே தவறாது நீயும் நிற்பதால்
பாரில் அறங்கள் குன்றாது விளங்கு மன்றே!

நாடிதினம் நோக்காமல் நலமாய் மக்கள் காக்காமல்
கோடிவகைத் தருக்க ளெனும் செல்வம் சேர்ப்பாய்!
ஆடிவீழ்ந் திடும்அருவி யின்வேகத்தால் மிகவே
வாடிவரும் மக்களின் நோயைத் தீர்ப்பாய்!

வற்றா வளங்களை வழங்கும் வள்ளலே!
கற்றார் பாடும்கவிதை யின்முதற் பொருளே!
குழலுக்கு வேயும்நல் யாழுக்குப் பலாவும்
முழவும் பிறவும் தந்திடும் கலையே!

கல்வியால் தருக்கிய புலவர் போலேநல்
கலவியில் திளைத்த மாதர் மேனிபோல்
செருக்குற்று என்றும் தலைநிமிர்ந்து செல்வம்
பெருக்கும் வளம்சேர் இயற்கைச் செல்வமே

கரிய முகில் தன்னைத் தலையில் தாங்கி
அரிய அன்னை யெனப் பரிந்து நோக்கி
ஆறுகள் தம்மை அழகுற அணிந்த நல்ல
நேருயர் குன்றமே! நிலையாய் வாழியே!

அன்பாலே அன்னை முலைப்பாலை யொத்தாய்!
அறிவாலே புலவர் கைந்நூலை யொத்தாய்!
கொடையாலே மூவேந்தர் தம்புகழை யொத்தாய்!
தடையிலா நீர்வளம் நல்கி வாழ்கநீடுழியே]

## வனம்

மலையும் மரமும் மிகவும் உயர்ந்தே
கலையும் கரடியும் பிறவி லங்கும்
பலவாய்ப் பெருகிப் பகையை மறந்து
நிலையில் உயர்ந்து வளம் கொழிக்கும்

ஆடும் மயிலும் பாடும் குயிலும்
ஓடும் வரிப்புலி யானையுடன் வானை
நாடும் உயர்மரக் கூட்டத் திடையே
தேடும் இரையைத் தீங்கின்றி வாழும்

பாவும் ஊடுமாய் ஒளிக்கோலம் காட்டும்
மாவும் புள்ளும் அருந்து சுனையும் - தே
மாவும் பலவும் கனிகளும் நிறைந்த
"கா"வும் பொருள் தந்துவளம் சுரக்கும்!

உறைவிடம் அளிக்க மரங்கள் அளித்து
மறைந்து வாழ்ந்திட புகலிடம் நல்கி
உறைந்து கிடக்கும் தேனும் மருந்தும்
விரைந்து நாளும் வழங்கிடு வள்ளலே!

பாடும் புலவோர்க்குப் பாடுபொரு ளாகி
நாடும் மக்களின் உணவாக்கத் தீயாகி
பல்வித இசைக் கருவிக்கு மரமும்
நல்லரக்கும் காகிதமும் தந்திடும் வனமே!

கானகத்தில் அடர்தருக் களில்லை யேல்
வானம் வறண்டு மாரியும் பொய்க்கும்
கானக மென்னும் செல்வச் செவிலியே!
நானிலம் நலம்பெற மழைய ளிப்பாயே!

கான்யாறும் அருவியும் கனிதரு தருவும்
பூண்அணி கலனின் புதுப்புது மணியும்
காணற்கரிய கவின்மிக்கக் காட்சியும்
தானாய் வழங்கியே தழைத்திடும் தினமே!

கனிகளின் வளமும் பிறவும் நல்கி
தனித்த வாழ்வில் பயனில் லையென
இனிய ஒருமைப் பாட்டுடன் எளிதாய்
மனித நேயம் விளக்கும் வனமே!

வளம்பல தந்து காப்பதிலே இறைவனொத்தாய்!
உறைவிடம் தந்து காப்பதிலே வேந்தனொத்தாய்!
வெட்டினாலும் பலன்தரும் தியாகிய ரொத்தாய்!
கெட்டாரைப் பரிந்தோம்பும் பண்பிலே நண்பரொத்தாய்!

இறைவனின் படைப்பிலே கடலும் மலையும்
நிறைவாலும் திணிமரக் கானும் விரிந்தும்
கறைபடிந்த மனமுடை மாந்தர் நாமும்
குறையே காணும் இயல்பினை மாற்றுவோம்!

மலையென உயர்ந்த மனமுடன் வாழ்வோம்!
கலைகற்று கடல்போல் சோர்வின்றி வாழ்வோம்!
வானம்போல் ஒன்றாய் இணைந்தே வாழ்வோம்!
கானம்தரும் செல்வத்தால் வளமாய் வாழ்வோம!

# மலர்கள் சாம்பலாகுமுன்

சாரதிதாசன்
சிதம்பரம்

தாலாட்டும் தென்றல் - பூத்து
தளிர்விடும் பூக்கள்;
இனம்புரியா இசைபாடும் - இனிய
பறவைகள் கூட்டம்;
பாலருவி வழிந்தது போல் - எங்கும்
படர்பனித்தொடர்மலைகள்;
கால்நடையாய் புல்மேய்ந்து -
பால்சுரக்கும் கால்நடைகள்,
கதிர்வீசும் புல்நுனியில் - நிதம்
களித்தாடும் பனித்துளிகள்;
அத்தனை பொருள்கள் மீதும் - அணுவின்
கதிரியக்க நஞ்சின் வாசம்,
அணுஉலை கழிவுகள் - இன்று
ஆழ்கடல் வாசிகள்;
கடல்மீன் கறியினை - எங்கள்
கண்மணிகளுக்கு ஊட்டும்போது
எமக்குள் எழுகிறது - சந்ததியை
சாம்பலாக்கும் குற்ற உணர்வு?

மேடையிலே வீசுகின்ற - புது
மெல்லிய பூங்காற்று
வாடையிலே பிணம்சுமந்து - இனி
நாசிகளை துளைத்திடுமோ?
சமாதான சங்கதிகள் - இனியும்
எழுத்தாய் பேச்சாய்,
ஏமாற்று பத்திரிகையின் - புதிய
ஏழுபக்கச் செய்தியாய் .....................
அறிவியல் கூடாரங்களில் - தினம்
ஆர்ப்பாட்ட அலைகள்;
அலைகளை அடக்கிடும் - புதிய
அரசியல் வலைகள்;
ஊர்வாயை மூடியது போதும்-அணுவின்
உலைவாயை மூடுவோம்;
கதிரியக்க கரங்களில் - மானுட
மலர்கள் சாம்பலாகுமுன்.

# பணம் எங்கே

அர. சிங்காரவடிவேலன்
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைக்கல்லூரி, தேவகோட்டை

பணமெங்கே பணமெங்கே என்று பாடும்
பல்லவியே வாழ்வென்று நம்பும் வண்ணம்
தினமிங்கே நிகழ்ச்சியெலாம் நடப்ப தாலே
திருமகளைச் சாகடிக்கும் பொல்லாக் கள்ளத்
தனமிங்கே தழைக்கிறது; கயமை பாடத்
தமிழ்கூடக் களைக்கிறது; கோபங் கொண்டு
மனமெல்லாம் கொதிக்கிறது மாசை நீக்க
மழையிங்கே பெய்கிறது தாங்கிக் கொள்க

பழங்களினாற் பசியாறி மரங்கள் தந்த
பட்டையினால் உடல்மூடிப் பண்ட மாற்றால்
விலங்கைவிட உயர்ந்தார்கள் வீடு வாசல்
விளைநிலங்கள் திருக்கோயில் வேந்து நாடு
நலங்களெல்லாம் உண்டாக்கும் கருவி யாக
நாணயத்தைப் படைத்தார்கள் பணத்தால் இன்று
விலங்கைவிடத் தாழ்கின்றார் தாமே இட்ட
விலங்கைவிடத் தவிக்கின்றார் விடுமா ஆசை?

கூழுக்கு வழியில்லார் சோளம் வாங்கக்
குறைகின்ற துட்டுக்கே அழுகின் றார்கள்
பாலுக்கு வழியுள்ளார் சீனி வாங்கப்
பணத்துக்கு வழியின்றிப் பதறு கின்றார்
மேலுக்குத் துணியுள்ளார் மின்னும் பட்டு
மினுக்குக்குப் பணமின்றி விம்மு கின்றார்

காலுக்குச் செருப்பாக வந்த காசு
கடவுளுக்கும் மேலாக உயர்ந்த தம்மா!

எல்லோரும் எப்போதும் எங்கே என்றே
ஏங்குகிற ஒருபொருளாய் இருப்ப தாலும்
கல்லாரைக் கற்றவராய்ச் செய்வ தாலும்
கயவர்களை மேலாக்கி வைப்ப தாலும்
பொல்லாத பணமின்றேல் மனைவி கூடப்
போகாத பிணமென்றே நினைப்ப தாலும்
இல்லாமல் நடக்காது வாழ்க்கை என்றே
எங்குற்றாய் பணமகளே! என்று கேட்டேன்.

எலிகாணாப் பொந்தினிலும் ஆட்சி செல்ல
இடங்காணாச் சந்தினிலும் கடத்தல் என்னும்
புலிவாழும் குகைகளிலும்; பதுக்கல் என்னும்
புழுவாழும் மூட்டையிலும்; விலைகள் என்னும்
மலைகாணா உச்சியிலும்; நேர்மை இல்லார்
மலம்வாழும் நெஞ்சினிலும் ஒதுங்கி வாழ்வாள்
பலியிடுவேன் எனப்பயந்து பாட்டுக் குள்ளே
பதிலுரைக்க வருகின்றாள் கேட்டுக் கொள்க

ஆக்கத்தாய் வயிற்றினிலே கருவி ருப்பேன்
அரசாங்க அப்பனுக்குப் பிறப்பெ டுப்பேன்
தூக்கத்தில் கற்பழிக்கும் கயவர் சில்லோர்
துணிந்தென்னை அச்சடிப்பார் அப்பன் ஆவார்
காக்கைதன் கூட்டுக்குள் குயிலைப் போலக்
கலந்திடுவார்; கயவருக்கும் மனித ருக்கும்
யாக்கையினால் அடையாளம் தெரிவ துண்டா?
அசல்நானும் நகல்போல அலைகின் றேனே!

ஒருமாதம் கருவிருந்து பிறப்பெ டுப்பேன்
ஒருமாதப் பாதியிலே நடையெ டுப்பேன்
மறுமாதம் முதல்தேதி தலையெ டுப்பேன்
மளிகைக்கும் பாலுக்கும் மடியிழப்பேன்
தருமாதத் தவணைகளின் பொருள்களாகித்
தரைபாதி கடைபாதித் தவமி ருப்பேன்
வருமாதச் சம்பளத்தில் ஈசல் போல
வரும்போதே சாபவளாய் வாழ்கின் றேனே!

கருப்புக்குள் காலொடிந்து முடங்கிப் போனேன்
கடல்மீதும் சிறகடித்துப் பறந்து போனேன்
செருப்புக்குள் வைரமெனச் சிக்கிக் கொண்டேன்
சேயிழையார் நகையாகிச் சிறையும் பட்டேன்
பருப்புக்குள் கல்லாகக் கலந்து விட்டேன்
பதுக்கலிலும் ஒதுக்கலிலும் பதுங்கி விட்டேன்
உறுப்புக்கள் தேய்கின்ற ஏழை தோளை
ஊடலினால் தழுவாமல் ஒதுங்கி விட்டேன்

முதலாளி மாருக்கு மட்டு மிங்கே
முக்காட்டை விலக்குகிற மும்தாஜ் ஆனேன்
கதறுகிற ஏழையர்கள் கையை நீட்டின்
கற்புடைய கண்ணகியாய்க் காந்து கின்றேன்
விதவிதமாய்ப் பொருள்கடத்தும் கயவர் நெஞ்சில்
விளையாடும் மயிலானேன் வேசி ஆனேன்
இதயமிலாப் பொய்யரிடம் சிக்கிக் கொண்டே
இறைவனுக்கும் கையூட்டாய் இருக்கின் றேனே!

வணிகர்களின் வரவேட்டிற் பாதி யானேன்
வையத்தின் வாழ்வுக்கு வீதி யானேன்
தனியுடைமை மக்களுக்கே ஆதி யானேன்
தகதகக்கும் ஆடைகளில் சோதி யானேன்
கனிவிருந்தால் தங்காமல் பேதி யாவேன்
கனமாகச் சேர்ந்திருந்தால் நீதி யாவேன்
முனிவருக்கும் இந்நாளில் மூர்த்தி ஆனேன்
முடியாமல் எந்நாளும் தொடர்கின் றேனே.

கொடுவரியோ புலிச்சாதி; கடமை யாகக்
கொடுவரியை ஏய்க்கின்ற கொடுமை யாலே
படுசாதி கருப்பென்னும் பணத்தின் சாதி;
பணத்தினிலும் இருசாதி வந்த தாலே
எடுபிடியாய்ப் பணிசெய்ய வந்த என்னை
இறைவனைப் பூச்சூட்டி ஏத்து கின்றார்
நடுவுநிலை தவறுகின்றார்; என்னைக் கவ்வும்
நாயாக மனிதரெலாம் அலைகின் றாரே!

மலையேற்றம் உச்சியிலே சேர்க்கும்; தென்னை
மரமேற்றம் தேங்காயை நல்கும்; யானைத்
தலையேற்றம் வாகையினைச் சூட்டும்; கற்ற
தமிழேற்றம் மன்றத்திற் சேர்க்கும்; நல்ல
கலையேற்றம் பண்பாட்டைக் காட்டும்; ஏழை
கையேற்றம் புரட்சியினை ஆக்கும்; ஆனால்
விலையேற்றம் பொருள்துறையின் இறக்கம் ஆகும்
விரைவாகக் கொல்லுகிற வீக்கம் ஆகும்.

போட்டமுதல் திரும்பாத தொழில்க ளாலே
 போனஇடம் தெரியாமல் மறைகின் றேன்நாள்
நாட்டுவளம் உள்ளீடாய் அதனைக் காட்டும்
 நாடேற்கும் அறிகுறியாய் வந்த என்னை
நோட்டுவளம் எனப்பெருக்கி விட்டார் மாடு
 நூறுமுறை போட்டாலும் எருவும் பாலாய்
மீட்டுவர முடியாது பொம்மைக் காசால்
 மேன்மைவர மாட்டாது தாளே நட்டம்

அறிஞரிடம் வாராய்நீ ஏனோ என்றேன்?
 அறிவேதான் பணமாகும் அறிவாய் என்றாள்
வறிஞரிடம் உனக்கென்ன பகைமை என்றேன்
 வள்ளலிடம் இதைப்போய்நீ கேட்பாய் என்றாள்
கவிஞர்களைப் பிடிக்காதா? பணமே! என்றேன்
 கவிஞருக்குப் பணமென்னைப் பிடிக்கா தென்றாள்
புவியினிலே புரியாத புதிர்நீ என்றேன்
 புதிருக்கு விடைநீயே புரிவாய் என்றாள்

பசிநீங்கி வளங்காண என்ன வேண்டும்?
 பணமேநீ உரையென்றேன் செல்வ ருக்குப்
பொசிகின்ற மனம்வேண்டும் ஏழை கட்குப்
 போற்றுகின்ற திறம்வேண்டும் காசி னுக்குப்
பசிநீக்கம் கருவியென்றே மதிப்பு மட்டும்
 பாரோர்கள் தரவேண்டும் போதும் என்றாள்
கசிகின்ற மனமில்லார் திருந்தா விட்டால்
 'கைவளைந்தால்' எனச்சிரித்து மறைந்திட் டாளே!

# வெண்புறா வேந்தன்

மு. செல்வசேகரன்
கிரசண்ட் மேனிலைப் பள்ளி, ஆடுதுறை

மோதிலால் ஈன்ற செல்வன்
முடிபுனை வேந்தாய் விளங்கி
மாதரார் சுகத்தி னோடும்
மதுச்சுவை விருந்தி னோடும்
சோதனை ஏது மின்றிச்
சுகமுற வாழ்ந்தி ருந்தால்
நாதியே இல்லா நாட்டின்
நடைமுறை வேறே யன்றோ?

கங்கையும் யமுனை யாறும்
கலந்திடும் துறையின் பக்கம்
தங்கமே இழைத்துச் செய்த
தனிமனை பிறந்த செல்வன்
சிங்கமாம் மோதி லாலின்
சிறப்புறு செல்வன் நாட்டைப்
பங்கமே இன்றிக் காத்தப்
பண்டிதன் நேரு ஆவான்

அணிமனை வாழ்வை நீத்தான்
அழகிய துணையை நீத்தான்

பிணியென மக்கள் எண்ணும்
 பெருஞ்சிறை தன்னை வேந்தன்
இனிப்புற ஏற்றுக் கொண்டான்
 இன்னலைத் தழுவிக் கொண்டான்
எனினும் இந்த நாட்டின்
 ஏழையர்க் காக வாழ்ந்தான்.

போகந்தான் வேண்டி னானா?
 பொருளையே தேடு கின்ற
தாகந்தான் வந்த துண்டா?
 தன்னுடைக் குடும்ப மென்றே
தேகந்தான் அசைந்த துண்டா?
 தேயமே வாழ்க்கை என்று
சாகும்நாள் வரைக்கும் வாழ்ந்தான்
 சரித்திர நூலில் வாழ்வான்

வேண்டிய திருந்தும் என்ன?
 விழைவெலாம் பெற்றும் என்ன?
ஆண்டியைப் போன்று வாழ்ந்த
 அறநெறி காந்தி சொல்லைத்
தாண்டியே அறியான் இந்தத்
 தாயக உரிமைக் காக
மூண்டதோர் வேள்வித் தீயின்
 முன்னணி வீரன் ஆனான்

| | | | |
|---|---|---|---|
| வல்லர | செல்லாம் | கொல்லர | சாகி |
| அல்லவை | செய்யின் | அறநெறி | உரைத்தவன் |
| வான | ஊர்திகள் | வரிசைப் | பறவையாய்ச் |

| | | | |
|---|---|---|---|
| குனியப் | படுத்தும் | சுடர்வெடி | குண்டெனும் |
| எச்சிலை | உமிழ | எதேச்சாதி | காரிகள் |
| நச்சுத் | திட்டங்கள் | நாட்டிய | வேளையில் |
| பச்சைக் | குழவிபோல் | பளிங்கு | மனத்தான் |
| அசோக | வேந்தனின் | அச்சாய்ப் | பிறந்தோன் |
| போரெனும் | கொடுமையைப் | பூதலம் | மறக்கப் |
| பாரெலாம் | வாழப் | பஞ்ச | சீலமாம் |
| தவநெறி | உரைத்த | சத்திய | வித்தகன் |

போர்மழை மேகம் இந்தப்
புவியினை வளைத்த போதில்
ஆரெமைக் காப்பா ரென்றே
அகிலமும் அழுத போதில்
தேறவோர் வழியே இன்றித்
திகைப்புடன் திரிந்த வேளை
நேருவாம் தலைவ னன்றோ
நிம்மதி நிலவச் செய்தான்
வன்கொலைக் கருவி ஏந்தி
மாற்றலர் நாட்டை யெல்லாம்
என்புறப் பொருது பற்றும்
இழிநிலை யுற்ற போதில்
நண்பராய் நாட்டா ரெல்லாம்
நடந்திட்ட அறிவு சொல்லி
வெண்புறா பறக்க விட்ட
வேந்தனாம் சவகர் வாழி!

# சேவல்கள் கண்விழிக்கும்

ச. சோமசுந்தரம்
பிசப் ஈபர் கல்லூரி, திருச்சி

அவர்கள் உப்பு வயல்களில்
கால் பதிக்கும் போதுதான்
காலை விடிகிறது!
சூரியனைச் சுமந்து கொண்டு
உப்பு விளைவிக்கும் ... அந்த ஒட்டிக் கருத்த
எலும்புக் கூடுகள்
பட்டினி நாட்டு ராஜ பிரஜைகள்!
உப்பளத்தில் நடந்து நடந்தே ....
ஆணி விழுந்த அவர்களின் பாதங்களை
பனை மட்டைச் செருப்புகளே பாதுகாக்கின்றன;
உச்சிவெயில் உறுத்தும்போது —
நேற்றிரவு வடித்த சோற்றுக் கஞ்சி
காற்று ஊறுகாயோடு கலந்து
குடலுக்குள் விழும்!
நெஞ்சு வற்றிப்போன குஞ்சு குறுவான்கள்
சிப்பிகளைப் பொறுக்கிச் சிறுவீடு கட்ட
பச்சை சிசுக்கள், கருவை மரத்துச்
சேலையூஞ்சலில் கண்ணயர்ந்திருக்கும்!
அது ... பாலுக்கழுதால்
குனிந்து குனிந்து உப்பை அரிக்கும்

தாய் முகம் நிமிரும்!
நிமிரும் முகத்தில் முதலாளி மாரின்
ஆதிக்க சாட்டை!
எரிச்சல் சொற்களை சுழட்டி அடிக்கும்!
குழந்தையை தூக்கிக் கொடுக்க மட்டும்
இங்கே என்ன இருக்குது? என்ற யதார்த்தச் சவுக்கு
தாயின் நெஞ்சில் அடிக்கும்!
பால் இலாவிடினும் தோல்சுவை கண்டு
தூங்க நினைத்த — அந்தக் குழந்தை
அழுத களைப்பில் — மயங்கிப் போகும்!
தாயின் தவிப்புத் தாலாட்டாகிக்
கடலின் அலைகளில் சங்கமமாகும்!
பசிச்சு அழுத கொடலை
பழுதை போட்டுக் கட்டுவனா?
துடிச்சு அழுத கொடலை
துணியைப் போட்டுக் கட்டுவனா?
கதறி அழுத கொடலை
கயித்தைப் போட்டுக் கட்டுவனா?
நடுச்சாமம் கஞ்சித் தண்ணி
நான் குடிப்பேன் ராசாவே!
நாளைக்குக் காலையிலே
பால் சுரக்கும் ராசாவே!

கற்பனையும் நடைமுறையும்
கலந்து புரண்டுவரும் அற்புதத்தாலாட்டை
அந்தி கேட்க வரும்!
எண்ணெய் மழைக்காய் ... ஏங்கித் தவித்து

வரண்டு போன ... செம்பட்டை முடிகளை
மாலைக் காற்று ... கோதிக் கொடுக்கும்!
காலையிலிருந்தே ... இவர்களைப் பார்த்து
வயிறெரிந்த சூரியன் மேற்குக் கடலில் விழுந்து
தற்கொலை செய்து கொள்வான்!
அவர்கள் ...
அண்ணாந்து பார்த்துக் கரையேறும் போது
இருட்டு தன்னை அலங்காரம் செய்து கொள்ளும்!
அழுக்கு ஒத்தை ரூபாய்களை
அஞ்சாறு முறை எண்ணித் தட்டிப் பார்த்து
பழைய கடனுக்குப் பிடித்தது போக
மிச்சத்தைப் போடுவார் கணக்குப் பிள்ளை;
பனிரெண்டு மணி நேர உழைப்புப் பலிக்குக்
கிடைத்த பரிசை — குடிசைக்குக் கொணர்ந்து
உலையேற்றும் போது —
குஞ்சு குறுவான்களை ரெண்டாஞ்சாமத்தூக்கம்
மொய்த்துக் கொண்டிருக்கும்!
தூக்க மயக்கம் பசியைத் தாக்கிக்
கொல்லப் பார்க்கும்!

ஆயிற்று —
நெருப்பில் ஊற்றிய நீராய் —
கொஞ்சம் கஞ்சி குடல்களில் விழுந்ததும்
படுக்கைப் படலம் ஆரம்பமாகும்!
வயிற்று நெருப்பு — நெய்தல் குளிரை
நெருக்கி எதிர்க்க
கொசுக்கள் பாடும் நீலாம்பரிக்கு
கைத்தாளம் போட

தூக்கக் கடமை தொடர்ந்து நடக்கும்!
அவர்களின்
உறக்க நிலத்தில் உடலின் வலிகள்
உழவு நடத்தும்!
ஓ! இதோ அவர்கள் தங்கள் கூட்டத்தை
வேலைக்குக் கூவி அழைக்கும் சப்தம் கேட்டுச்
சேவல்கள் கண் விழிக்கும்!
மீண்டும் ... அவர்கள்
உப்பு வயல்களில் கால்பதிக்கும் போதுதான்
காலை விடிகிறது!
ஆமாம்! இவர்களுச்கு ... இவர்களுக்கு
என்றைக்கு விடியும்?

அந்த கிராமத்து சாலை:

அடைமழையால் அறுந்தோடிப் போன
தாறுமாறான புரையோட்டங்கள்!
ஓரத்து நொச்சிக் குத்தில்
ஒளிகிற ஓணான்கள்
தலையைத் தூக்கிச் சூரியனைப் பழிக்கும்!
வேர்களை வெளிக்காட்டியபடி
அடிமண் கரைந்து
தலையை அசைக்கும் ஓரத்துப் பனைகள்!
பக்கத்து வாய்க்காலில் மூச்சுமுட்டத்
தண்ணீர் வரும்போது
வேர்கள் மூழ்கிப் பால்குடிக்கும்!
எருமைகள் _ குளிக்க வந்தால்
வாய்க்கால் தண்ணீர்
சாலையை நனைக்கும்!
பனைமரத்தில் _ முதுகு சொறிய

எருமை உராயும்!...
ஒற்றைக் காலை... அழுத்தி ஊன்றி
மரம் நிதானிக்கும்!...
உச்சியில் தொங்கும் ஊசல் வீட்டில்
தூக்கணாங் குருவிகளுக்கு
உயிரே நடுங்கும்!

சாலை முதுகில்...
ஓர்...ஒத்தையடிப்பாதை
வெள்ளை எலும்பாய் விலகித்தெரியும்!...
சேற்றை மிதித்துக்...கருத்த சுவடுகள்
பட்டுப் பட்டு
புழுதி சிலிர்க்கும்!...
சின்னப் பள்ளிக்குச்
சீக்கிரமாய்ப் போன... சாம்பான் மகன்
சங்கரலிங்கம்...
இடதுகை... கால்சட்டையை இழுத்துப் பிடித்து...
இடுப்பில் நிறுத்த...
வலதுகை சிலேட்டை வாரிப் பிடிக்க...
சார்! சார்! ஒன்றுக்கு...
சட்டாம் பிள்ளை ரெண்டுக்கு...
நான் போறேன் வீட்டுக்கு...
நாளைக்கு வந்தா... கேட்டுக்க...
வாய் ஒளி பரப்ப...

வளைந்து வளைந்து ஓடுவான்!...
எல்லைக்கல் சாமிக்கு
நேர்ந்து போட்ட செவந்திப்பூ மாலை

சருகாய்க் கிடக்கும்! —
கல்லின் தலையில் மஞ்சளும் குங்குமமும்
மரியாதை செய்யும்!...
கல்லின் அடியில்— தேர்தலுக்குப் போட்ட
கட்சிச் சின்னம்
களங்கமாய்த் தெரியும்! —
பண்ணையார் வீட்டு நாய்—
வேட்டைக்குப் போகும் போதெல்லாம்
அந்தக் கல்லுக்கு— அபிஷேகம் செய்யும்!...
சின்னப் பண்ணை— மைனரின்
வில்வண்டி —
ஆய்ச்சலில் விழுந்து குலுங்கும் போது
'பள்ளத்தைப் பார்த்து ஓட்டுறா பரதேசி;
என்று கொதிப்பார்! —
வண்டிக்காரரின் கோபம்
சாட்டை வழியாய்
மாட்டைப் பதம் பார்க்கும்!—
வாயில் நுரைதள்ள
மாடு மேட்டை உதைக்கும்!...

# எங்கள் தணியாத தாகம்

சா. தியாகமணி
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி

## புதைந்த நிஜங்கள்

நம் அரசாங்கத்தில்
எத்தனையோ
நிஜங்கள்
புதைக்கப்பட்டுவிட்டன!
ஆம்......
அதன் பிரதிபலிப்பாகவே
கலவரங்கள்
இன்றைய
காட்சிகளாகிவிட்டன!
இன்றைய
மக்களாட்சியின்
மறைந்த நிஜங்கள்
வெளிச்சத்தை நோக்கி
புறப்படத்தான் வேண்டும்!
பொய்மையும் போலியுமான
பூசல் நாடகங்கள்
இனி
எங்களது

புதுயுகப்பாட்டுக்களால்
பொசுக்கப் படத்தான் வேண்டும்!
சத்தியத்திற்கு சோதனை
நீதிக்குத் தண்டனை
நியாயத்திற்கு நிந்தனை
உத்தமனுக்கு வேதனை
என்று இதுவரை
நிழலகளின் சாதனையாயிருந்த
தலைகீழ் விகிதங்கள்
இனியும்
ஆங்கே
இருப்பதற்கு இடமில்லை!
எங்கள் மௌனங்கள் கலைந்து
நாங்கள் பேசும் கீதங்களாக
மாறும்போது.......
மறைந்த உண்மைகள்
மறுவாழ்வு பெறப்போகின்றன!
மீட்புப் படைகளைக் கொண்டு
புதைந்த நிஜங்களை
மீட்டுக்கொள்கின்ற வேளையில்
நிழல்கள்
மாய்க்கப்படப் போவதில்லை
மாயத்தான் போகின்றன!
இருண்ட சமுதாயத்தின்
கீறல்கள்
இனி—
கலையப் போகின்றன!
கோணல்கள்

திமிர்க்கப்பட போகின்றன!
புதைந்த நிஜங்கள்
புலப்பட போகின்றன!
என்பது
குறிகூறும்
குறத்திப் பாட்டல்ல!
குறிக்கோளுடைய
கொள்கைக் குன்றாப்பாட்டு!
இச்சமுதாயப் பாட்டு
நேர்மை, நீதி, சத்தியம் எனும்
திறவுக்கோல்; துலாக்கோல் சாட்டையையே
நம் நாட்டின்
நண்பர்கள் எனக் கொள்வோம்!
இத்தகு புதுயுகப் பாட்டுக்களால்
இருட்டு ரகசியங்களை
வெளிக்கொணர முயல்வோம்
அப்போது—
புதைந்த நிஜங்கள்
புதுவாழ்வு பெறப் போகின்றன!
புன்மை நிழல்கள் வெளியேறி
உண்மை நாடகங்கள்
இனி—
எங்களால்
உலகுணர்த்தப் போகின்றன!
மௌனங்களை விடவா?
சப்தங்கள்_......
சாதிக்கப் போகின்றன?

என்றாலும்,
மௌனம் சம்மதத்திற்கு
குறியீடாகையால்
சமயத்தில் சப்தமாக
தொனிக்காவிட்டால்
நாடே—
மயானத் தொட்டிலாகிவிடும்
என்பது
பொய்யுரை யன்று
பொருளுரை—
இப் - பேருரை!

## விடிய மறுக்கும் இரவுகள்

சமுதாய மக்களை
காத்திடவே
காவல் துறைவேலிகள்!
அதுவோ
மேயும் வேலிகள்
நியாயத் தராசாய்
நின்று
நீதி வழங்க வேண்டிய
நீதி மன்றங்களோ!
இன்று
வியாபார மன்றங்கள்!
இதுவும் ஒரு வாய்ப்புத்தான்!
சிறுமையும் வறுமையும்
செங்கோ லோச்ச...

கயமையும் கொடுமையும்
கான மிசைத்திட....
கையூட்டும் களவும்
கொலுவீற்றிருக்க ...
கட்சிக் காளான்களின்
மொத்த அவதாரமாய்
காட்சியளிக்கும்
குடியரசு!
இன்றோ
குறிப்பிடத் தக்க
தனி தினுசு!
இவைகள்
படரக்கூடாதென்பதாலோ...
விடிய மறுக்கின்றன இரவுகள்
ஏ ... இரவுகளே!
இலங்கை இராவணர்களால்
இடையறாது நடக்கும்
இனக் கொலைகள்
என்றுதான் முடிவுறும்;
இலங்கைத் தமிழர்களின்
இனிய வாழ்வு
என்றே விடிவுறும்;
ஏ... இரவுகளே!
ஏழைப் பட்டதாரிகளின்
வாழ்க்கைக் குடிசையிலும்
கையூட்டுக் கோட்டான்கள்
குடியேறியதால்
இன்று

குட்டிச்சுவராய்
காட்சியளிக்கும்
பட்டதாரிகள்!
ஏழை வனிதையரின்
திருமணத் தேர்வுக்கும்
'வரதட்சணை' எனும்
நுழைவுச் சீட்டு
குறுக்கிட்டதால்
இன்றோ—
குடத்திலிட்ட விளக்காய்
ஒளிமங்கி வாழும்
குமரியர்கள்!

கையூட்டு வரதட்சணை
எனும் சீர்கேட்டைச்
சுமக்கின்ற கர்ப்பிணிஇரவுகளே!
எங்கள் வாழ்க்கை விடிவுக்கு
விடிய மறுப்பதேன்!
ஊழலாகிய ஊன பிரசவங்களை
இனியும்
பிறப்பிக்கக் கூடாதென்பதாலா?
அன்றி—
எங்களிடமும் நீ
கைக்கூலியை எதிர்பார்ப்பதாலா?

### எங்கள் தணியாத தாகம்

நம் நாட்டில்
தீராத...தாகங்கள்
பல உண்டு

அவற்றுள் ஒன்று
அரசியல் மோகம்
எனும் தாகம், ஈண்டு
குடிமக்களின்
நலன் ஓம்புவதுபோல்
கொள்ளையடிப்பதில்
குறியுடைய
கொள்கையாளர்களின் தாகம்
இன்றோ அதி—வேகம்!
ஆம்
அரசியல் வாதிகளுக்கு
ஆட்சியைப் பிடிப்பதிலும்
தங்கள் மாட்சியைப் பதிப்பதிலும்
தாகம்
மேலாள ஊழியர்களுக்கு
மேற் பதவிகளின் மேல் தாகம்
மேல் அதிகாரிகளுக்கோ
பதவி பணம் புகழ்
ஆகிய இவற்றின் மீதே தாகம்,
சிலருக்கு கல்விப் பெருக்கின்
மேல் தாகம்!
வேறு சிலருக்கோ—
தங்களைக் கவினுற
அலங்கரிப்பதிலே தாகம்!
பணத் தேனீக்களாம்—
பணக்காரர்க்கு
பணத்தைப் பெருக்குவதிலே தாகம்!
மாணவச் சிட்டுக்கள்
நாங்கள்...
கல்விச் சொட்டுக்களின் மீது
நம்பிக்கை வைத்து
படிப்பை அஸ்திவாரமாக்கி
பட்டங்கள் பெறுகிறோம்!
நாட்டுச் சட்டங்களில்

அதற்கோர்—
கட்டுதிட்டமின்மையால்
தட்டிக் கழிக்கப் படுகின்றோம்!
ஆம்
லஞ்சமெனும்
வஞ்சவிளக்கு
எரிவதற்கு—
துணைபோகவில்லை யாகையால்—
பலியாக்கப் படுகின்றோம்!
பரிதாபமாக—
நாங்கள்!
அப்பப்பா...
இவையாவும்
இப் பூவுலகின்
என்றும் தீரா தாகங்கள்!
இவற்றிற்கெல்லாம்
முடிவாக சிறந்த விடிவாக
எங்கள் விழைவாக...
மாசு மறுவற்ற
நல்லாட்சி...
இனி—
இப்பாரத நாட்டில்
எப்போது உருவாகும்
என்பதே
எங்கள் தணியாத தாகம்!

# பலியாடு

கே. பாலகிருஷ்ணன்
உடுமலை

ஈர்க்கும் தந்தரியின் சொல்வன்மை போன்றெழில்

சேர்க்கும் முந்திரியின் வனத்திடைதான் செவிலியர்

பயிற்சிப் பள்ளி ஒன்று நன்றே

இயங்கிய அங்கே செவ்வேள் என்றே

எண்ணத்தகும் எழிலுடைத் தலைவனாய் பாதிரியார்

வெண்ணாடை உடுத்தி வாழ்ந்து வந்தனனே

வெளியில் கவரும் தோற்றமுடை நாகமாய்

உள்ளூர வஞ்சக நஞ்சமிகு நெஞ்சமும்

உடையானை அடையாளம் காணாதார் பலராவர்

இடையாளொ ருத்தியும் இவ் வுண்மைறி யாதண்டிப்

பிழைத்திட விழைந்தாள், விளைவினை நுகர்ந்தாள்

தழைத்த வனம்போல் கருங்குழல் உடையாள்

பிறைநுதலுடைமுழுமதி முகத்தாள், எள்நாசியாள்

கறைபட்டுக் குருதி சோர மடிவதற்கே

வல்லியத்திடம் பலியாடாய் வந்து சேர்ந்தாளோ

துல்லியமாய் செதுக்கிய நல் சிற்பம் நிகர்மேனி

பொன்னொளிர் காந்தி பரப்பி மிளிர்ந்தது

மென்மதுக் குரலோ இன்னிசை பாய்த்திட

கொவ்வை செவ்வத ரம்விரியத் தெரிந்த

செவ்வை யுடைத்துகிர் தந்தம்வேல் கணையாய்

நெஞ்சத்து தைத்திட, நாவற்கனி கருவிழி
மஞ்சத்து அவளுடன் சுகம்காண அழைத்திடும்
மருண்ட மான்விழி நோக்குடை எழிலாள்
திரண்ட கோபுர கலசம் இரண்டும்
இடைதாங்கத் தவித்திடும் உடுக்கை இடையாள்
துடைவாழை நிகர்க்கும் நடப்பின் அசையும்
குதளழில் இதயத்தைத் துளைத்திடும் தந்தச்சிலை
மதனவி ழாகாண அழைத்திடும் அழைப்பித ழாய்
துலங்கியதால், இராஜஸ உணவுண்ணும் பாதிரிமனம்
கலங்கியதே காமன் விழாகாண விழைந்தது மனம்
கன்னியிடம் காதலுடன் நெருங்கியது அனுதினம்
மன்றாடி உதவி பலசெய்திடத் துடிப்பதாய்
கூறி அவளேற்கும் பொருளுதவி வந்தான்
நூறி கரும்புச்சுவைத் திடத்துடித்த வஞ்சகன்
மாணவியர் விடுதியில் உறைவிடம் உணவு
மாண்புடன் உடுத்திட பல்வகை உடைகள்
கற்றுத் தேர்ந்திட நூல்கள் பலவும்
சற்றும் தடையின்றி முழுவதும் கொடுத்தான்
பூவையை பூனைபோல் முந்திரி வனத்தில்தான்
தேவையை நிறைவு செய்ய தினமும்இருள்
சூழும் நேரத்தில் வருமாறு அழைத்தான்
மெழுகென நன்றியால் உருகிய நெஞ்சத்துடன்
காதற் கீதம் இசைத்திட வீணையானாள்
சாதற் கேளன உணரா மடக்கொடியாள்
பயிற்சிக் காலம் முடிகின்ற வரையில்
அயிற்சி யின்றி மதனநூலும் நுகர்ந்து
கற்றாள் காலம் சென்றிடச் சென்றிட

உற்றாள் கலக்கம் ஆலிலை நாபி
பெருக்கத் துவங்கியது வரம்தந்த தேவனின்
அருளை நாடிப்போய் விழிநீரைப் பெருக்கினாள்
முன்பு ஆதரித்த தெய்வம் ஏனோ
பின்பு அருளாது இருப்பது கண்டு
முரண்டு பிடிக்கும் பக்தை ஆனாள்
மிரட்டினாள் மேரி மேலிடம் வரையில்
முறையீடு கொடுத்தே சந்தித்த போது
அறையை வாங்கினாள் சிந்திக்கா துதன்னையே
தந்த முன்வினைப் பயனால் கண்ணீர்
சிந்தினாள் விடியும் என்றே விடியவே
இல்லை எல்லா பயிற்சியும் முடிந்து
எல்லை விட்டு ஏகினாள் தன்மனை
நோக்கி பெற்றவர் மனதினை அவள்நிலை
தாக்கி வதைத்திட உற்ற வழியினி
ஒன்றே என்று வேண்டா பாரம்
நன்றே இறக்கிட மருத்துவ உதவி
நாடினர் விரைந்து கரைந்தது துன்பமும்
சாடினர் மகளை மௌனியாய்த் தாங்கினாள்
ஊரின் மருத்துவ மனையில் பணியேற்றாள்
ஊர்ந்தன நாட்கள் வஞ்சகன் வின்சென்ட்
வஞ்சியின் பிரிவால் தனியாய் தவித்தான்
கெஞ்சி அவளுடன் உறவைத் தொடரும்
நஞ்சு எண்ணமுடன் வின்சென்ட் பாதிரி
நெஞ்சம் உருக்குகின்ற கடிதம் எழுதினான்
மஞ்சத்தில் சுகம்அறிந்த பாவையின் உள்ளம்
கொஞ்சுமின்பம் காணவே விழைந்து, மீண்டும்
பஞ்சும் நெருப்புமாய் நெருக்கம் அமைந்தது

தஞ்சம் நாடி நச்சினாள் பாவை
துஞ்சினும் துஞ்சுவன் பாவையே உன்னைக்
கொஞ்சுதல் விடுவது இல்லையான் ஆயினும்
தஞ்சமும் தருவது இல்லையது உறுதி
மஞ்சத்திற் சுவைதரும் கனிநீ, கன்னியல்ல
நெஞ்சுருக அழுகுரல் கேட்பினும் கலங்கேன்போ
என்றவன் கூறலும், "சூடுபட்டுத் தீயென
அன்றே அறிந்தும் விலகாத பஞ்சாய்
ஆனேன் அந்தோ" என்றே நொந்தாள்
தேனே மானே என்று மீண்டும்
கூறக் கேட்டு மயங்கி கசங்கியமலர்
ஏற்பார் யாருளர்? என்றே நொந்தாள்
பள்ளியில் தன்னுடன் படித்த பிரான்சிஸ்விடி
வெள்ளியாய் தன்னில்லம் வந்தது அறிந்தாள்
துள்ளிக் குதித்தவள் உள்ளம் மகிழ்ந்தது
உடற்பிணிக்கு மருத்துவம் செய்திடும் செவிலி
உடற்பசியைத் தணித்திட துடித்திடும் உளப்பிணி
தீர்த்திட மருந்தறியாள் இன்பவிருந் துண்டு
அயர்ந்து அவள்பாவ மன்னிப்பு எய்திட
துடித்தாள் துடியிடை துவளத்தழு வும்திருமணம்
கடிதே நடந்து முடிந்தாண்டு கள் இரண்டு
ஓடின விரைந்து மழலைக்கனி இரண்டு
அடுத்த டுத்து ஈன்றுவந்து வாழ்ந்தான்
மேய்த்துக் காக்க துணிந்திட வேண்டியவன்
ஏய்த்து அழிக்கத் துணிந்து துடித்தான்
பாவ மன்னிப்பு அருள வேண்டியவன்
ஆவல் கொண்டு பாவம் செய்திட

துணிந்தோன் காமனை தகனம் செய்யதி
துணியா துகாம வேள்வி செய்திட
விழைந்து ஆதிப் பொருளாய் ஆக்கிட
செழித்த ஆடாய் அவளை ஏற்றான்
தப்பியதே பலிப்பொருள் என்றே கொலைவெறி
கப்பியது உள்ளத்தில் உறங்கா வேங்கையாய்
ஆட்டினை பலிகொள்ள வழியினைச் சிந்தித்தாள்
வேட்ட தன்வழியே செயல்பட வேகம்மிகு
வாலிபர் சிலரை வசம்செய் கொடியோன்
பாலிக்கும் பாதிரியின் வாழ்வு விடுத்து
மறவழி ஏகிட எண்ணி இரும்புத்தடி
அறத்தினை சிதைத்திட உதவிடும் கருவியெனக்
கொண்டிடச் செய்தே அனுப்பினான் அவர்களை
பண்டு காதலித் தவள்மனை நோக்கி
காற்றுப்புகும் சாளரத்தின் கம்பிகள் விலக்கி
ஒற்றறிய உட்புகுந்தனர் வீட்டின் உள்ளே
சற்றே விலகி உறங்கும் வனிதையை
முற்றும் ஆவியைப் போக்கிட எண்ணி
ஓங்கி வேகமாய் அடித்தனர் மண்டை
தேங்காய் போன்றே சிதறிடக் குருதி
வெள்ளமாய் பாய்ந்தது மடிந்தாள் நங்கையும்
கள்ளனும் மகிழ்ந்தான் வஞ்சம் தீர்ந்த
தென்றே
அடித்தாற்கு மறுகன்னம் காட்டும் கடப்பாடு
இடித்துத்தள்ளி மாசற்ற கன்னியைக் கறைப்படுத்தி
அடித்துக் கொன்றால் நீதியும் உறங்குமோ?
மடிந்தான் அவனும் ஆண்டு இரண்டு
கழித்து தூக்கில் இடப்பட்டே மக்கள்
ஒழிந்தது பசுத்தோல் போர்த்தியபுலி என்றும்கண்
விழித்ததே நீதி இன்றுஎன முற்றும்
மகிழ்ந்து நிறைவு எய்தினர் நன்றே

# பாரதி நீ வா

புனிதகுமாரி
திண்டுக்கல்

செந்தமிழ்த் தாயின் திருவடி நெஞ்சினில்
சேர்த்த பெரும்புலவன் - அவன்
நொந்து மடிந்திட்ட நந்தமிழ் நாட்டினர்
நோயறப் பாடியவன் - நல்ல
சந்தக் கவிதையில் சிந்துகள் பாடிய
சக்தியின் மைந்தனவன் - இனிப்
பைந்தமிழ் நாட்டினைப் பாரதி நாடெனப்
பட்டயம் தீட்டி வைப்போம்

சாதிப் பிரிவெனும் பேதைக் குணத்தினைச்
சாடிய வீரனவன் - அது
பாதியில் வந்தது சூதினில் நின்றது
என்றிட்ட சூரனவன் - தமிழ்
ஆதி அறத்தினை போற்றிட நல்வழி
காட்டிய தீரனவன் - உயர்
வேதியர் கீழவர் என்ற கொடுமையை
வீட்டிய சாரனவன்

பண்டிதர் கைகளில் பட்டுக் கிடந்திட்ட
பைந்தமிழ் நற்கவிதை - எனும்
மண்டு பெரும்புகழ்ப் பாச்சுவை யாவரும்
மாந்திக் களித்திடவே - நனி
எண்டிசை போற்றிட வாரி வழங்கிய
எண்ணப் பெருங்கவிஞன் - அவன்
திண்டிறல் ஆண்மைச் சிறப்பினைப் போற்றியே
சிந்தை களித்திடுவோம்!

வாட்டிய வெள்ளையர் ஓட்டிடவே கவி
வாளினைத் தீட்டியவன் – எறி
ஈட்டிக் கவிதையில் எண்ண நெருப்பினை
ஏற்றிய பாட்டனவன் - சொந்த
நாட்டவர் மாற்றவர் கால்களை நக்கிச்
சகித்துக் கிடக்கையிலே - அந்தக்
கேட்டினைக் கண்டு வெதும்பிக் கவியெனும்
சாட்டையைத் தூக்கியவன்!

பாயும் புலிநிகர் வீரர்கள் நெஞ்சம்
பயந்து கிடக்கையிலே - அவர்
ஆயும் திறமையும் ஆண்மையும் குன்றி
அடங்கிக் கிடக்கையிலே - இழி
வாயும் வயிறுமே எண்ணித் தொழும்பராய்
வாடிக் கிடக்கையிலே - தலை
சாயும் வரையினில் ஓயுதல் இன்றிச்
சமரில் இறங்கியவன்;

அன்னை விலங்கை அறுத்தெறியக் கவி
ஆட்சி நடத்தியவன் – அவன்
முன்னைப் பழமை எனும்புதை சாக்கடை
மூடிய தொண்டனவன் - உயர்
கன்னல் நிகர்தமிழ் அன்னை பெரும்புகழ்
காட்டிய சீர்மறவன் - அவன்
தன்னை மறந்தவர் தாய்மறந்தார் இழி
தன்மை விலங்குகளே!

மண்ணில் அடிமை விலங்கொடிக்கப் பெரு
மந்திரம் சொல்லிவைத்தான் - தகு
பெண்ணை இழிவெனப் பேசிடும் பித்தரைப்
பேயெனத் தள்ளி வைத்தான் - இரு
கண்களில் ஒன்றை வெறுத்தே ஒதுக்குதல்
கண்ணிலர் செய்கை என்றான் — அட
பெண்ககளைச் சக்தி வடிவமாய் போற்றுதல்
பேரின்ப முக்தியென்றான்!

ஐயா பாரதி ஆண்மைச் சிங்கமே!
பாட்டில் விடுதலை பாடிய பாவல!
'பாட்டில்' விடுதலை பாரடா இங்கே!
கூட்டில் விலங்காய் குறுகிக் கிடந்தோர்
நாட்டில் மனிதராய் நடமாட வைத்தாய்!
ஞானப் பழமாம் விடுதலை வேண்டிக்
கானம் பாடிய கவிதைக் குயிலே!
நாரதர் கைப்படு ஞானப் பழமெனும்
விடுதலை தானும் விநாயகர் கையில்
கிடைத்தது! ஆண்டியாய் முருகனாய் நாங்கள்
ஏமாந்து நிற்கிறோம்! இதுதான் நிலைமை!
யாதும் உம் ஊரே! எனப்பிறர் கேட்டால்
யாதும் உம் கேளிர்! என்ற கேள்விக்கு
யாவரும் கேளிர்! என விடைத் தருவான்!
செந்தமிழ் நாட்டின் சிறப்பினைப் பாடினான்
ஆங்கிலக் கல்வியின் அவலம் பாடினாய்
எந்தமிழ் நாட்டினர் ஏனோ இந்த
மந்திரம் மறந்தனர்! 'மம்மியும்' 'டாடியும்'
மழலையர் வாயில் கேட்டு மயங்கிடும்
பெற்றோர் இருக்கிறார் பெரிதாய் மகிழ்கிறார்!!
தாய்மொழிக் கல்வியே தரித்திரம் என்கிறார்!
சாதிகள் ஒழித்துச் சமத்துவம் காணவே
ஓதினாய்ப் பாப்பா பாடல்! ஆயின்
சாதிகள் ஒழிந்ததா? சமத்துவம் வந்ததா?
அயலான் சாதியை அடுத்தவன் ஒழிப்பதே
சாதி ஒழிப்பென்ச் சப்தம் செய்கிறார்!
பெண்கள் விடுதலை பேசினாய் பெரும!
பெண்கள் விடுதலை பெறுகிறார் இந்த
மண்ணை விட்டே! மறுப்பதற் கில்லை!
மாதரை இழிவாய்ப் பேசும் கெட்ட
மடமைகள் தம்மைக் கொளுத்திடச் சொன்னாய்
ஆயின் நாங்களும் அப்படியே தான்
மாதர் தம்மையே கொளுத்தி விடுகிறோம்!
'தனியொரு வருக்குண வில்லை என்றால்

செகத்தினையே அழித்திடுவோம் என்றனை!
எல்லோரு மிங்கே உணவுக் காகவே
ஏங்கிடும் வயிறே! எரிகிற போதில்
எதனைக் கொளுத்துவோம் எப்படிக் கொளுத்துவோம்?
புற்றில் ஈசலாய்ப் பொலபொல வென்றே!
நற்றமிழ்க் குழவிகள் நாங்கள் பெறுகிறோம்
கவசகுண் டலத்துடன் கர்ணனைப் போலவே
தட்டுடன் பிறக்கும் தளிருடற் குழவிகள்!
ஆண்டான் அடிமை பார்ப்பான் புலையன்
வேண்டா வேற்றுமை! பிறப்பில் யாவரும்
மானிடப் பிறப்பே! மாற்றம் இலையென
நீட்டிப் பாடினாய்! நெஞ்சில் யார் கொண்டார்?
ஒழுக்கம் உடையவன் உயர்ந்தவன் ஒழுக்கம்
இழுக்கம் உடையவன் இழிந்தவன் என்றாய்!
கனகலிங் கத்தை அந்தண னாக்கியே
விந்தைப் புரிந்தனை! வீணர்கள் உன்னையே
அந்தணன் என்றே அழைக்கவும் நாணினர்!
வாழ்ந்தகா லத்தில் வறுமையில் வாடினும்
தாழ்ந்தஇந் நாட்டின் தரித்திரம் துடைத்தாய்!
ஆண்களும் பெண்களும் அரியசீர்க் கற்பினை
ஒன்றாய் எண்ணியே ஓம்புக என்றனை!
வஞ்சியர் மட்டுமே வஞ்சிக்கப் பட்டபின்
எஞ்சிய மானம் எரிதழ லாகிடக்
கருவினைச் சுமந்து கருகியே மாய்கிறார்!
பாரதி உன்னைப் பணிவுடன் கேட்கிறேன்
ஒருமுறை இங்கே உயிர்பெற்று வாயேன்!
தமிழர் நாட்டையும் தமிழ்ப்பண் பாட்டையும்
அமிழ்தத் தமிழையும் அறவே மறந்ததால்
புதியநா டாகப் புலப்படும் உனக்கே
தெருவில் பெயரில் பேச்சில் எழுத்தில்
அருமைத் தமிழே அழிந்து போனதடா!
உண்ணும் பொருளில் கலப்படம் போலவே
கன்னல் தமிழிலும் கலப்படம் தானடா!
பார்த்தால் நெஞ்சம் பதைபதைப் படைவாய்

ஆள்வினை உடைமையின் ஆழ்கடல் கடந்தும்
தோள்வலி காட்டிய தொல்குலத் தமிழர்கள்
ஊழ்வினை பேசியே உறங்கிக் கிடக்கிறார்!
சூழ்நிலை உணரும் சுயவுணர் வில்லார்!
பரிசுச் சீட்டுப் பகவான் துணைஎன
வரிசைக்கு ஐந்தாய் வாங்கித் தீர்க்கிறார்!
பொய்யை மெய்யெனப் புலனெறி மங்கிச்
செய்கை மறந்து திரைப்பட அரங்கில்
ஆடவர் பெண்டிர் அலையெனக் கூடுவார்!
கள்ளின் மயக்கில் கட்டுடல் தளர்ந்து
தள்ளாடி நடக்கும் தமிழரைக் காணுவாய்!
இழிநிலை இதனைக் காணவா நீயும்
பழிபல ஏற்றுப் பாடல்கள் பாடினாய்?
'பாஞ்சாலி சபதம்' பாடினாய் ஆனால்
துச்சா தனர்களே பெருகிவிட் டார்கள்!
கண்ணன் பாடலின் கருத்துண ராமையால்
எண்ணற்ற கண்ணன்கள் எங்கணும் தெருக்களில்
பெண்களுக் கோயாத் தொல்லையே தருகிறார்!
குயில்பா டலிலுள குறிப்புண ராமையால்
மயில்போல் கன்னியர் மயக்கில் விழுந்தே
காதல் காதல் காதல்
காதல் போயின் காதல் போயின்
சாதல் சாதல் சாதல் என்றே
வேதனைக் கவிதையாய் விம்முவர் காணடா!
"விதியே! விதியே! தமிழச் சாதியை
என்செயக் கருதி இருக்கின் றாயடா!"
என்று நீ பாடிய ஏக்கக் கவிதை
இன்றும் உயிர்ப்புடன் இலகுதல் பாரடா!
எழுகதிர் போல எழுந்த பாரதி!
உன்னால்......
கவிதை வானத்தில் கவிந்து கிடந்த
கறையிருள் யாவுமே காணாமல் போனது
மன்னரைப் பாடியும் மங்கையர் தம்முடை
நன்னய அழகினை நயந்து பாடியும்

உலாமடல் தூது கலம்பகம் போன்ற
உருப்படி இல்லாக் கவிதைகள் பாடியும்
பழைய கள்ளினைப் பருகிக் களித்த
நிலையை மாற்றிய நீள்புகழ்க் கவிஞன்!
நாட்டையும் மொழியையும் நலிவுறு மக்கள்தம்
பாட்டையும் தீட்டிய பைந்தமிழ்ப் புலவன்!
பாட்டையும் புதிதாய்ப் பண்புறச் சமைத்தே
பாட்டுத் தேரினை ஓட்டிய சாரதி!
திடம்படு தீந்தமிழ்க் கவிதைச் சுவையில்
கடலும் கையலை கொட்டியார்ப் பரிக்கும்

செந்தமிழ்த் தாயருள் கொண்டு பிறந்திட்ட
　　சேயவன் பாரதி போற்றிடுவோம் — அவன்
சிந்தை நிறைந்தவள் சக்தியின் சேவடி
　　வந்தனை செய்திங்கு வாழ்த்திடுவோம்!
வெள்ளையர் ஆளுகை கண்டு வெதும்பிய
　　வீரம்செறிந்த புலிநிகர்த்தோன் — அவன்
கள்ளப் புலமையை எண்ணி நகைத்திட்ட
　　காலத்தை வென்ற பெருங்கவிஞன்
கண்களில் நல்லொளி கொண்டவர் தம்மையே
　　கண்ணியமாக அழைத்து நின்றான் — உயர்
பண்ணிசைப் பாடல் உரைநடை யாவிலும்
　　பாரதத் தாயினை யே புகழ்ந்தான்!
நெற்றியில் குங்குமம் போலப் பகைமையை
　　நேர்படல் பார்வையில் சுட்டிடுவான் — உயர்
முற்றும் சுதந்தர தேவிக்கென்றே நல்கி
　　மூவாப் பெரும்புகழ் நட்டுவிட்டான்!
மீசை முறுக்கினில் ஆண்மை விளக்கிய
　　மேன்மைப் புலவனைப் பாடிடுவோம் — இந்தத்
தேசம் அடிமை விலங்கக லத்தன்னை
　　தேய்த்தவன் பாரதி வாழ்த்திடுவோம்!

வேறு

அடிமையாகி மிடிமை வாழ்வில்
சூழ்ந்து சோர்ந்த மக்களைத்
துடியறைந்து தோள்கள் தட்டித்
துள்ளி மீளச் செய்தவன்
வெள்ளை யாட்சி வீழ்கவென்று
வீறுமிக்க பாடலால்
உள்ளம் சோர்ந்த மக்கள் தம்மை
உந்தி வீரம் சேர்த்தவன்!
மறைக ளோதும் மக்களென்றும்
மற்றுமுள்ள பேரெலாம்
பறையர் புலையர் என்றுரைத்த
பழிதுடைத்து நின்றவன்!
வறுமை வாழ்வு வந்த போதும்
வாழ்வு முற்றும் நரகமாய்
சிறுமை வந்து சேர்ந்தபோதும்
சோர்ந்திடாது வென்றவன்!
எரி நெருப்பில் கவிதை செய்து
ஏட்டில் தோய விட்டவன்!
புரியும் வண்ணம் உரிமை வாழ்வை
போற்றிப் பாடல் கண்டவன்!
தாழ்வு போக்கித் தமிழர் தம்மைத்
தலைநிமிர்த்தி வைத்தவன்
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க
வாழ்க எங்கள் பாரதி!

# தேர்தல் தீர்ப்பு

கடலூர். மணிமாறன்
பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி

காட்சி—1

(குறுநில வேந்தன் குமரன், அமைச்சன் அருளன், வாயிற்காவலன் இருளன்)

குமரனும், அருளனும் அத்தாணி மண்டபத்துள் நுழைகின்றனர்.

இருளன்:

குன்றெனச் சிறக்கும் குமரர் ஆட்சி
என்றும் பொலிக! இன்பம் விளைக!
சிறுமைகள் மறைக! செங்கோல் ஓங்குக!
குறுநில வேந்தர் கொற்றம் வெல்க!

குமரன்:

நன்று! நன்று! அமைச்சர் அருளரே!
இன்றைய நடப்பு யாங்கன முள்ளது?
மக்கள் அனைவரும் மகிழ்வுடன் உளரா?
தக்கவை நடைபெறத் தடையொன் றிலையே
மன்னரைப் பற்றிய மக்கள் எண்ணம்
என்ன வென்றே இயம்புக இனிதே!

அருளன்:

அறிவுடை வேந்தே! அமைச்சன் வணக்கம்!
நெறிமுறை நாட்டில் நிலைபிறழ்ந் தோய்ந்தது;
எல்லாம் இங்கே ஏறுமா றானது;
நல்லார் பலரும் நடுக்கம் கொண்டுளார்
மழையைக் காணோம்; மண்விளை வில்லை;

உழைப்போ ரில்லை! ஒழுக்கம் சிதைந்தது
மூளை யுள்ளவர் முணுமுணுக் கின்றார்;
வேளை தோறும் விருந்திற் களவிலை;
கல்வி நிலையம் கவலைக் கிடமாய்
உள்ளது எனினும் ஒன்றும் தாழ்விலை;
மருத்துவ மனைகளில் மருத்துவ ரில்லை
வருத்தும் நோய்களோ வரம்பிலை; எனினும்
ஒன்றும் குறைவிலை! உங்கள் ஆட்சியைப்
பொன்னென மக்கள் போற்று கின்றனர்!

குமரன்:

புகன்றவை அனைத்தும் பொய்யோ? மெய்யோ?
நகர்வலம் நாளை வருவேன்; அறிவேன்!

## காட்சி — 2

(இரவு நேரத்தில் குமரன் மாறுவேடத்தில் நகருள் வருகிறான். சேந்தன், செழியன் என்னும் இளைஞர் இருவர் உரையாடுவதை மறைந்து கேட்கிறான்).

சேந்தன்;

அருமை நண்பரே! ஆட்சி எப்படி?
பெருமைக் குரியதா? பிழைமலிந் துளதா?
கொற்றவன் குமரன் கொடிய ஆட்சியில்
நற்றிறம் உண்டா? நவிலுக நீயே!

செழியன்:

என்னரும் நண்ப! இவ்வினாக் கணைகளை
என்னிடம் தொடுப்பதா? இயம்புவன் கேள்! நீ!
எல்லாம் தன்னால் ஆகும் என்றே
சொல்லும் மன்னவன் சூழ்ச்சி மிக்கவன்
பித்தன் இவனோ பெரும்பிழை செய்யினும்
புத்தன் போலப் புனைந்துளான் வேடம்
பிறரின் துயரில் பெருமகிழ் வெய்தும்

அரக்கன் இவனோ அறியான் எதுவும்
வஞ்சியர் மடியில் வாணாள் கழிக்கும்
நஞ்சினும் கொடியன் நடிக்கும் கயவன்
பொதுநலம் விழையாப் புன்மை யாளன்
பொதுமை யுணர்வைப் பொசுக்கும் தீயன்!
குடியிலும் கூத்திலும் கொள்ளை யடிப்பிலும்
அடிதடிச் செயலிலும் ஆட்களை ஏவிப்
பொருளைக் குவிக்கும் புண்ணியன்; நீங்கா
இருளில் மக்களைத் தவிக்க விட்டவன்;
அறிஞர் கூட்டம் அஞ்சி நடுங்க
வறிஞர் சுற்றம் வளரச் செய்தவன்!
இதுவே போதுமா? இன்னும் வேண்டுமா?

குமரன் (தனக்குள்)

என்னே அவலம்! இத்தகு பெரும்பழி
என்னைச் சேர்வதா? எவரும் நம்மை
மதித்திலர் போலும்! மறைவாய் ஏதோ
சதிச்செயல் நடப்பதை சடுதியில் அறிவேன்!

## காட்சி — 3

(குமரன், தன் அமைச்சன் அரசவைப் புலவருடன் மனந்திறந்து உரையாடி வருத்தத்தைத் தெரிவிக்கிறான்)

குமரன்,

அமைச்சர் அருளரே! அருமைப் புலவரே!
எமைப்புகழ்ந் துரைக்கும் இனிய சுற்றமே!
இன்றே என்றன் விழிகள் திறந்தன!
நன்றுசெய் வீரென நம்பி யிருந்தேன்!
வாரியம் பற்பல வகுத்துத் தந்தேன்!
வாரி வழங்கிக் கைகள் சிவந்தேன்;
உங்களால் வீணே ஓய்வுகொண் டிருந்தேன்;
இங்கென் நாட்டவர் இழித்தும் பழித்தும்
உரைப்பதைக் கேட்டுளம் ஒடிந்து போனேன்!

திரையின் மறைவில் தீயன புரிந்தீர்;
அனைத்தும் அரசன் அடாத செயலென
நினைக்கச் செய்தீர்! நீதியும் இதுவோ?

அருளன்;

மனத்துயர் நீங்குக மன்னரே! எவரோ
சினத்துடன் கூறிய சிறுசொல் மறப்பீர்!
நன்றியில் லாதார் நாட்டில் பலருளார்
பொன்னைப் பித்தளை யென்பவர் உள்ளார்
நாயின் வாலை நிமிர்த்திடப் போமோ?
தாயினைப் பழிக்கும் தகவிலர் கூட
நாட்டில் வாழ்கிறார் நலம்பல பெற்றே
வாட்டம் தவிர்ப்பீர்! வளர்புகழ் குவிப்பீர்!

குமரன்:

அடுத்துக் கெடுப்பதும் அழிவைச் செய்வதும்
தடுத்திடச் செய்வேன் தகுந்த மாற்றம்!
சந்தனக் குழம்பைச் சகதியென் பார்யார்?
நொந்திடச் செய்தீர்! நோயென வளைத்தீர்!
நாட்டவர் நவிலும் நச்சுக் கருத்தைக்
கேட்பீர் நாளைய மக்கள் மன்றில்;

## காட்சி—4

(குறுநிலவேந்தன் குமரன், மக்கள் மன்றத்தைக் கூட்டிக் கருத்துக் கேட்கிறான்).

குமரன் :

இங்கென் ஆட்சியில் எக்குறை கண்டீர்!
உங்கள் குறைகளை உணர்த்துக இங்கே!
மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு;
தக்கவர் இன்மையால் தடம்பிறழ்ந் தேன்நான்!

இளைஞன் ஒருவன்: (உணர்ச்சியுடன்)

ஆண்டது போதும் அரசே! மக்கள்
மாண்டது போதும்! மக்கள் ஆட்சியை

அறிவித் திடுக! ஆளத் தக்கோர்
உரிமை ஆட்சியை உவப்புடன் வழங்குவர்!
அருந்திறல் உம்மிடம் அணுவள வுளதோ!
விருந்தும் விழாக்களும் விளைக்கும் பயனென்?
சிறுமை புரிந்தனை! செங்கோல் வளைத்தனை!
வறுமையை மட்டும் பரிசாய் வழங்கினை!
அறிவிலி மாந்தர் அடித்தனர் கொள்ளை
குறிக்கோள் அறியார் குவித்தனர் செல்வம்
சாரா யத்தொழில் சந்துபொந் தெங்கும்
ஆறாய்ப் பெருகின! அவலம் சூழ்ந்தன;
இகழ்வோர் தம்மை இருட்சிறைத் தள்ளிப்
புகழ்வோர் கூட்டம் பூரிக்க வைத்தாய்!
பல்லவி பாடின் பதவிப் பரிசுகள்
அள்ளித் தந்தாய்! கொள்ளையில் பங்கு
கேட்டுப் பெற்றாய்! கேடுகள் மலிந்தன!
ஓட்டை உடைசலாய் மக்கள் மாறினர்
குமரன் ஆட்சி கொடிது! கொடிது!
எமக்கு வேண்டும் இனியநல் லாட்சி!

குமரன்:

ஆட்சியைத் துறந்தேன்! அடுத்த திங்கள்
மாட்சிமை மிகுந்த மக்க ளாட்சி
அரும்பிடத் தேர்தலை அணிய மாக்குவேன்!
விரும்பியோர் தேர்தலில் வெல்க! ஆள்கவே!

## காட்சி — 5

குமரனும் களத்தில் குதித்தான் சிறக்கும்
தமது பெரும்படை தனித்திறம் எண்ணி!
தேர்தல் வந்தது திருநாள் போல
ஆர்ப்புகள் அளப்புகள் அத்துமீறல்கள்
எல்லாம் நடந்தி யானே தேர்தலில்
வெல்வேன் என்றவன் வீழ்ச்சி யடைந்தான்!
மக்களை ஏய்த்து மகிழ்த்த வனுக்குத்

தக்கதோர் பாடம் தந்தது தேர்தல்!
புழுவாய்த் துடித்தான் வழுவாய் அமைந்தவன்
எழுவாய் பயனிலை இலாத தொடராய்
மாசு படிந்தவன் மண்ணைக் கவ்வினான்!
தூசுகள் காற்றால் தொலைவில் பறந்தது!
எவரையும் என்றும் ஏய்த்திட இயலா!
தவறுகள் இழைப்போர் தண்டனை பெறுதல்
காலத் தீர்ப்பு; கணித்த முடிவு
ஞாலம் உய்ய நல்வழி காட்டும்
அறவோர் இளைஞர் அனைவரும் சேர்ந்து
சிறப்புடைத் தலைவனாய்ச் செம்மலைத் தேர்ந்தனர்

செம்மல் உறுதிமொழி:

நாடு செழிக்க நல்லோர் மகிழப்
பீடுறு செயல்கள் பெரியதாய் விளங்க
முயல்வேன்! நாட்டின் முன்னேற் றத்தை
நயந்து தொண்டு நாளும் புரிவேன்!
ஊழலை ஒழிப்பேன்! உயர்ந்தோர் வாழும்
சூழலைக் கொணர்வேன்! சுரண்டல் தவிர்ப்பேன்!
உங்களில் ஒருவன் நடத்தும் ஆட்சி
மங்காத் தமிழாய் மணக்கும் உறுதி!

மக்கள்:

செம்மல் வாழ்க! செங்கோல் ஆட்சியால்
நம்வளஞ் சிறக்க! நாடு வாழ்கவே!

# பாலை நிலம் பாவை நெஞ்சம்

மோ. வித்தியா ரத்தினம்
சென்னை

அகத்திணை வகுத்தான் அருந்தமிழ்க் காப்பியன்
இகத்துள் நிலவும் இல்லற வாழ்வின்
சுகத்திற்கு நான்காய் சோகத்திற் கொன்றாய்
சகத்துள் தொகுத்து சார்பாய் இணைத்தே
சாற்றினான் இலக்கணம் சார்வார் தமக்கே

ஐவகைச் சிறப்பாம் அகத்திணை அதனுள்
உய்வழி காட்டும் உயர்பாலை யாம் இவண்
செப்பு பா வைத்திணை செந்தமிழ்க் குணமாய்
இப்புவி ஏற்றிட இன்றிவள் எண்ணியே
இச்சை மிகு கொண் டெழுதிட விழைந்தேன்

இச்சகத் துள்ளே இறையருள் எண்ணியே
உச்சத் தில்பா டுவன் இவண் பாலையை
அச்சமில் வகையில் அணங்கிவள் மகிழ்ந்தே
இளையவ ளாயினும் இல்லறம் நாடிலேன்
களைப்புற்ற வண்ணம் கன்னியும் வழிநடந்து

உறவினைத் துறந்தே உறுதியில் தளர்ந்தே
பிரிவினை எண்ணிமனம் பீதியுற்று வழி நடக்க
நடந்தவழி தனிலே நவின்றது பாடலொன்று
“துன்பக் கடலைத் தாண்டும் போது
தோன்றும் கீதம்” என்று தூண்டியது இதுஎன்னை

கன்னிமேல் கன்னியான் காதலுற் றழைக்க உடன்
என்னிடை வந்தாள் எழில்மேவு கொற்றவை
மன்னிடை அழைத்த தென்னை? மாதே என்றாள்
ஒன்றிக் கலந்தேன் ஒத்துரி மையாய்
நின்று நீ கேட்டிட நினைத்தேன் தாயே

பாலைக் கிழத்திநீ பாலையைப் பற்றிஇன்று
சேலைக் கட்டிய செல்விக் குச் சொல்
பாலைநிலம் பற்றிப் பாவை அறியவே
என்றது கேட்டெதிர் நின்றிவைச் சொன்னாள்
பாலையெ னும் நிலம் பிரிதற் பொருண்மை

சுரமும் சுரஞ்சார்ந்த இடமுமாம் அதுவே
பிரிதலும் பிரிதல் நிமித்தமு மாம் அவை
"ஓதல் பகை தூதிவை பிரிவே"
எனவகுத் தனரிங்கு எழிற்றமிழ் வல்லுநர்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே

கழிதுன் பம் கண்ட காதலர் பிரிதற்
கிடமாய்க் கருதினர் இன்னமும் கூறக்கேள்
எழில்மிகு காதலர்க் கெழுதிட்ட விதியின்
பழுதால் வந்தவர் பாலையை நாடுவர்
அகத்துறைப் புணர்ச்சியது அன்பிலை யென்னில்

இகத்துள் நிகழும் இத்துணைப் பிரிவே
இன்பமும் இதயமும் இன்னல் கண்டால்
அன்பில் நிலையில் அலைந்தே திரியும்
இன்பத் துள் துன் பம் தோன்று மெழில்
பன்னிரண்டு காணும் பருவக் காதல்

கண்ணிரண் டில் கருணை இலையெ னில்பிரிவு
வறண்டஉள நிலைபோல் வளமில் பாலையாம்
துறவுமனம் கொண்டிச் சுரந்தனை நாடும்
இருண்டமன மிங்கே இன்னலைக் காணும்
மருண்டவழி யில்வாழ மனமும் நாணும்

மராவும் குராவும் மாறாது பூக்கும்
அகத்துறைப் புணர்ச்சியில் அடைந்திட்ட முடிவே
இகத்துள் நாடும் இத்துணைப் பாலையை
பிரிதல் உணர்வே பாலைக் குரித்தாம்
உறைதல் நீங்கியே உறுதியில் தளர்வர்

மதியொத் தது நின் மாசற்ற முகமென்று
பழகியவ ராயினும் பழவினை வயத்தால்
அழகனும் அழகியும் ஆவார் இருவராய்
பெருகிய அன்பது பிரிவினால் குறுகும்
உருகும் நெஞ்சோ உருக்குலைந்து கருகும்

பிரிதலி லும் கருணை கருப்பொரு ளாகும்
அறிவிற் குணர்த்தும் அற்புத ஔடதம்
கற்பத நெஞ்சின் கரிசெ லாம் நீங்கி
பொற்பதம் காணவிழை யும்பாலை யதுவே
"பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்"

காமநோ யும் வந்து காளையரைச் சேரும்
சாமமும் விட்டகன்று சற்றும் திரும்பாது
வாம பா கம் கொண்ட வள் தான் கொற்றவை
நாமமிங்கு நனிமகிழ்ந்து நாவழுத்திச் சொல்
பாலைக் கிழத்தியென்று பாரோர் கூறுவர்

பாலையின் ஒழுக்கமும் பாவைக் கானதால்
பாலைத் தெய்வமும் ஆனேன் இனிகேள்
பிரிதலை உணர்த்தும் பாங்கில் செந்நாய்
உரிய நிலத் தொருங்கு புறாவும் பருந்தும்

எருவைக் கழுகும் எதிரில் தோன்றும்

உணவோ ஊர்ப்பறிக் கொள்ளையில் அமையும்
உயர்வென் பது இங்கு உயர்ந்தோர் செயலிலை
முதற் பொரு ளான சுரம் சுரஞ்சார்ந்த இடத்துள்
அளவில் வெம்மை அருஞ்சுரத் தன்மை
வளமில் வன்னிலம் வறுமை வல்லூற்று

களிமகிழ் மனத்தவர் கருணையில் குணத்தவர்
வவ்வுதல் செய்யும் வன்மைத் தோற்றம்
இத்தகு நிலத்திவை இயங்கிடும் செயலாம்
காய்ந்தே கரிந்திட்ட காட்டிடை வளமில்
தேய்ந்ததோர் பாதை தேர்ந்ததாய் காணும்

இயற்கைப் புணர்ச்சியில் இணைந்திட்ட இன்னல்
அயர்ச்சியில் தோன்றும் அகற்சியில் முடியும்
புரைதீர் காமம் புல்லிய வகையில்
வரையில் சோகம் வாழ்வில் கொள்ளும்
கூடிய புணர்ச்சியில் குறுகும் இன்பம்

நாடியே தேடும் நயந்திங்கு பாலையை
நகையே அழுகை என்றான் காப்பியன்
எனவே தானிங்கு ஏக்கம் என்பதிலை
அணங்கே விலங்கே கள்வர்தம் மிறையெனப்
பிணங்கல் சாலா அச்சமும் நான்கே

என்றவ னே விதித் தான் நல் லிலக்கணம்
இதுபோன்று பலவுண்டு இன்னும் பிறகேள்
அதுவும் கூறுவன் அறிவாய் என்றாள்
மதுவுண்ட வண்டாய் மாதொ டிணைந்தேன்
பதுமை யானவளே பாலைக் குரியாளே

சொல்லுநீ சுகம்சே ரக் கன் னிக்கென
சொல்லிட லானாள் சொக்கிட லானேன்
"காதலின் முடிவே கண்டவர்க்குச் சாதல்"
இதுபற்றி உன்னிடம் இன்றிவள் சொன்னால்

சின்னவள் உனக்கிது சிறப்பிலை என்றாள்
பாலைக்கிழத்தி என்முகம் பார்த்துடன் நகைத்துஅந்
நாலையும் அனுபவித்து நாடுவர் பின் என்னை
வாலையாட் டும் வன் மனத்துறைப் புணர்ச்சியென
பாலையில் கொள்ளும் பிரிதல் உணர்ச்சியென

இது பற்றி அறியேன் இன்னமும் நான்கன்னி
என்றது கேட்டதும் என்னையவள் தழுவினாள்
கன்றாய் இணைந்தே னவள்கனி முகம்நோக்கி
மாதினை அணைத்துபுன் முறுவல் பூத்தவள்
தூதாக விடுத்திட்ட தூயவன் துணையால்

எவ்விதப் புணர்ச்சியும் எய்திடா உனக்கே
அவ்வித வுணர்ச்சியும் அணுகிடா உன்னிடம்
பவ்வியப் படுபவள் பாரில் நீ அல்லை
செவ்வியப் பாலையைச் சிறப்புறப் பாடென
போதனை ஏற்றேன் பணிந்தேன் அடியினை

சாதனை யில் நிலைத்த சாத்திர இசையில்
பாலையாழ் சுருதிகூட்டி பழம் பஞ் சுரம்பாடி
வழுத்தினேன் கொற்றவை வழங்கிய திறன் குறித்து
எழுதிய தமிழுக்கு ஏழிசைச் சேர்த்தேன்
தெரிந்திட அவளெனக்கு தெளிவாய்ச் சொல்லிட

அறிவித்த படி அதை அனுபவித்து நான் எழுத
புரிந்திட்ட அருளால் புத்துணர்வு நான்பெற
விரிந்தது அவளுடை வியன்கருணை எனக்கே
காடுறைத் தெய்வம் களிமிகு கிழத்தியே

ஏடுறைப் பாடலுக்கு எழில் கருத்து கூறிஉடன்

பாடிடப் பணித்தாள் பாடிட உவந்தாள்
பா தந்து பாடும் குரல்கேட்டு மகிழ்ந்தவள்
பாவை யை நோக் கியே பர பரப்பாய
கேட்டாள் ஒரு சொல் கேள்வியாய் என்னிடம்
குமரனைப் பாடும் குமரியே நீஏன்

குறிஞ்சியை வெறுத் தாயென் றதும்-நான்
கந்தனடி பணியும் கன்னிவித்தி யாவென்று
எந்த நாளு மிருக்க வரம் எனக்கருள் என்றதும்
சந்ததம் வாழ்க! நீ தழைத்தென் றாள். தாய்
அளித்திட்ட வாக்கால் அமுதத் தமிழ்நயந்து

எளிமை யில் எழுத ஏற்றதொரு நிலையில்
உள்ளும் படியே உறழ்ச்சியின்றி உளமுணர்ந்து
அள்ளித் தந்த அருள் தமிழ்க்கருத் தையிங்கு
நள்ளிர வில் எழுதி நானிங்கு முடித்தேன்
கள்ளமில் கந்தன் கருணையும் பெற்றே

உள்ளம் உறைத்ததை உரைத்தேன் உறுதியாய்
ஆலைக்கரும் பெனவே ஆட்டும் அகற்சிக்கு
வேலைக்காட்டி முன்னே வேட்கைத் தணிவிக்க
நாலிலும் நாட்டமில் நெஞ்சம்,
பாலையன்ன நிலமாய் பாவைக் கானதே!

# வெளிச்ச ரேகைகள்

வேனிலா ஸ்டாலின்
அண்ணா ஆதர்ச மகளிர் கல்லூரி, சென்னை,

கடிகார முள்குத்திக் காலத்தேர்ச் சக்கரம்
குடிகாரன் நடையாகக் குறிகெட்டு ஓடியது
அடியாத மாடு படியாது என்பதனால்
தடிஎடுத்துத் தொடங்கியது தாண்டவக் கூத்து
விடியாத வான்விழியில் வெளிச்ச ரேகையாய்
விடிவெள்ளி தெரிந்தது! விடுதலை பிறந்தது
வேள்வித் தீயின் வெப்பத்தில் விடுதலையின்
கேள்விக்கு விடையும் விரைவாய்க் கிடைத்தது
விடியாத வான்விழியும் வெளிச்சமாய்த் திறந்தது
விடிவெள்ளி தெரிந்தது விடுதலை பிறந்தது.

தின்று முடித்த தேதித்தாள் குப்பையிலே
தினவு எடுக்கும் நினைவுக் கரத்தால்
கிளறிப் பார்த்ததில் கீதைப் பாடல்களை
உளறிக் கொண்டு ஊதும் குழலொன்று
உறங்கிக் கிடந்தன வரலாற்று வசனங்கள்
கிறங்கிக் கிடந்தன கீழ்வானம் சிலருக்கு
இன்னும் வெளுக்க வில்லையாம் நிச்சயமாய்ச்
சொன்னால் அவர்கள் குருடர்களே அங்கே

வெளுத்துக் கிடக்கிறது வேனிலாய் வானம்
சுளுக்குப் பிடித்த சோம்பல் மூளையில்
சுறுசுறுப்பு எண்ணெயைச் சூடாக ஊற்றி
விறுவிறுப்பாய் வேலைகள் விரைவில் தொடரும்
வேலைகள் தொடர விளைச்சல் பெருகும்
காலைகள் இங்கே கவிதைகள் பாடும்.

சுதந்திரச் சுடரின் சுகந்த ஆராதனை
மிதந்து வந்ததால் மின்னோட்ட வேகத்தில்
முன்னோட்டம் பயில்கிறான் இந்திய இளைஞன்
ஆலைகள் இன்று ஆலயக் கோபுரங்கள்
"புகைதான் நமக்குப்பகை: புகையைப் பிடிக்காதீர்"
மிகைபல அறிவுரைகள் சொன்னாலும் ஆலைகள்
நகைத்துவிட்டுக் குகைவழியே புகைகிறதே
இறைவனே சாம்பிராணிப் புகையைப் பிடிக்கையில்
குறையுள்ள ஆலைகள் யாம்என் செய்வோம்?
என்கின்ற இவைகட்கு என்ன பதில் கூறுவது?
விடைகூற முடியாமல் விழிக்கின்ற வேளையிலே
தடைபோட முடியாமல் படைவீரர் எனவிரையும்
புகைவளையத் தொடரோ புன்னகையைக் கக்கும்.
ஆலைகள்— —
இவைகள் புகைக்கா விட்டால் உலகத்தின்
சுவாசமே நின்றுவிடும்: சூம்பிவிடும் பூமி:
ஆலைகளே நாட்டின் அடிப்படைச் செல்வங்கள்
ஆலைச் சங்கொலியே ஓலைக்குடிசைகளின்
காலை நேரத்து பூபாளப் பாட்டாகும்
ஆலைத் தொழிலாளி ஆற்றல் விளை பூமி
ஆலைத் தொழிலாளி அன்றாடக் கதிரவன்

கதிரொளி பெற்ற காதல் நிலவாக
அதிகாரம் செய்யும் முதலாளிக் குடியினரும்
விதியென வாழும் வேலைக் குடியினரை
மதித்து நடக்க மாமலையும் கடுகாம்
முதலாளி, தொழிலாளி மிதமான சேர்க்கையிலே
பதமான உற்பத்தியைப் பாரிலே பெருக்கலாம்
ஆலைக் குடும்பமெனும் அழகான கூட்டுறவில்
உற்பத்திப் பிள்ளைகளை ஓயாமல் பெற்றிடலாம்
சாலையோ ஒற்றுமையின் சின்னம்: மூலைச்
சந்தையும் பொந்தையும் சந்திக்க வைக்கும்;
வேலையும் மூளையும் ஒருங்கே சேர்ந்து
சாலையென உயர்வுப் பாதையை விரிப்போம்;
நாட்டுப் பண்ணில் ஒருமைப் பாட்டைக்
காட்டி ஒற்றுமை வளர்ப்போம்: வேற்றுமைக்
கேட்டின் வேரைத் தளர்ப்போம் வெல்வோம்

சாதிக் கொடுமைகட்குச் சமாதியினைக் கட்டி
சமரச மாளிகையைச் சமுதாயம் கட்டுகின்ற
நற்கூரை வேலையிலே நரிக்குரலைப் போல்கேட்கும்
பிரிவினைக் கொள்கைகளும் பேதையர் பேச்சுகளையும்
பாதாள அறைக்குள்ளே பதுக்கித் தள்ளுவோம்
ஒற்றுமைக் கொடியை உயர்த்திப் பிடிப்போம்
கற்றுக் கொள்வோம்; கலைக்கடல் கடைவோம்
விளைகின்ற நன்மையோடு முளைவிடும் மூடக்
களைகளை நீக்கிக் கல்லறையில் புதைப்போம்
கற்பனைக் கனிகளின் அற்புதச் சாற்றில்
நிற்கிற ஈக்களை நிலைதப்ப ஓட்டுவோம்
தற்போது நிலைமை கற்கோவில் எனஉயர

பற்பலப் புதுமைகளைப் பாரினில் பெருக்குவோம்
பூலோக பம்பரத்தைச் சுழல விட்ட
சதிகாரச் சாட்டைக் காரனின் விதியையும்
மாற்றுவோம் விளைச் சலைப் பெருக்குவோம்
விடுதலையின் சங்கமத்தால் விளைந்த நன்மைகளைப்
படுதாத் திரையின்பின் பதுக்குவதால் பயனில்லை
உலக அரங்கத்தில் இந்தியப் பெண்ணின்
இன்னிசைக் கச்சேரி இன்னும் சிலநாளில்
நடைபெறப் போகிறது அதிலே நமக்கும்
அழைப்பு உண்டு நாம் கண்ட நலமெல்லாம்
அரங்கத்தில் பாடப்படும்,

# படிப்பு...பட்டம்...பதவி

அய்க்கண்

ஆ.பி.சி. அ. கல்லூரி, திருப்பத்தூர்

காலையில் சிறிது நேரம் கழித்துத்தான் எழுந்திருந்தேன். இரவில் நெடுநேரம் சிந்தனையில் மூழ்கியிருந்ததால் ஒரே அலுப்பு. அதிலும், நான் மட்டுமே, சிக்கலை உள்ளுக்குள் வைத்துக்கொண்டு சிந்தித்ததால், உள்ளம் முற்றிலும் களைத்துப் போய்விட்டது. இறுதியாக, ஒரு நல்ல முடிவுக்கு வந்த பிறகு தான், தூக்கமே வந்தது.

மறுநாள் அந்த முடிவைச் செயல்படுத்திவிடுவது என்ற உறுதியுடன் தூங்கினேன்.

உண்மையில், இந்தச் சிக்கலில் வேறொருவனாக இருந்தால் அன்றைக்கே — அப்பொழுதே — ஒரு கால கடுதாசியை எடுத்து 'போடா, உன் வேலையும் நீயும்... இந்தா, என்னோட ராஜினாமா' என்று அவன் முகத்தில் வீசியெறிந்து விட்டு வந்திருப்பான். இன்னும் கொஞ்சம் இளம் இரத்தம் ஓடுகிறவனாயிருந்தால், அப்போதே, செருப்பைக் கழற்றி. பட்பட் என்று அவனை அடித்து விட்டு அலுவலகத்திலிருந்து வெளியேறியிருப்பான். அப்படிச் செய்திருந்தால்கூட, அது தப்பில்லை என்று எனக்குத் தோன்றியது.

அந்த அளவுக்கு, அந்த எம்.டி. என்னைக் கேவலமாக நடத்தி விட்டான். முந்தாநாள் பெய்த மழையிலே, நேற்று முளைத்த காளான் அவன்! என்னுடைய எத்தனை ஆண்டு அனுபவத்தையும் அறிவையும் தூக்கியெறிந்து அவமதித்து விட்டான்? என் சுயமரியாதையையும் தன்மானத்தையும் நொறுக்கித் தூள் தூளாக்கி விட்டானே?...

அவனுடைய அப்பா இருக்கிறவரை, என்னிடம் எவ்வளவு மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார்?...

இந்த விஷயத்தையெல்லாம் ஆபீஸ் சூப்பிரண்டென்ட்டுக் கிட்டே கேட்டுக்குங்கப்பா!... 'அவர் சொல்றபடி செய்யுங்க...' என்று என்னிடமே பல பொறுப்புகளை விட்டுடுவார்.

ஆனால் அவர் சென்ற மாதம் காலமாகி, இவன் எம்.டி பதவிக்கு வந்ததும், என்னை எவ்வளவு கிள்ளுக்கீரையாக எண்ணிக் கேவலமாகப் பேசிவிட்டான்? தான் எம்.பி.ஏ. படித் திருக்கிறோம் என்கின்ற திமிர் அவனுக்கு. என்ன பெரிய எம்.பி.ஏ.?_ எங்கள் காலத்து பீ.ஏ. பட்டதாரி மாதிரி, நாலு வரி இங்கிலீஷிலே தப்பில்லாமல் எழுதவருமா இவனுக்கு?... இவன் என்னைப் பார்த்து —சே!... எப்படி மானம் போகும்படி யாகப் பேசிவிட்டான்!...

இரவு முழுவதும் என்னுள் புகுந்து துளைத்த சிக்கலை சுமதி யிடம் கூடச் சொல்லவில்லை. எப்படிச் சொல்வது? எதைச் சொல் வது? அந்தச் சிறுபயல் என்னை மானம் போகப் பேசியதையெல் லாம் என் மனைவியிடம் சொல்லமுடியுமா? அந்த அவமான நிகழ்ச்சி யை என் மனதுக்குள்ளேயே போட்டுப் புதைத்துக் கொண்டுதான் நானே சிந்தித்து அந்த முடிவுக்கு வந்தேன்

இன்றைக்கு அலுவலகம் போய் பதவி விலகல் கடிதத்தைக் கொடுத்துவிட்டு கணக்கைத் தீர்த்துக்கொண்டு வரவேண்டியது தான்

"என்னங்க, இன்னும் எழுந்திருக்கலியா? இன்னிக்கு ஆபீஸ் போகிற நினைப்பு இல்லையா?" என்று கேட்டுக் கொண்டே படுக்கையறைக்குள் நுழைந்தாள் சுமதி,

"ஆமா" என்று சொல்ல நான் வாயெடுக்கு முன்னே படுக்கை யில் எழுந்து உட்கார்ந்திருந்த என்னைப் பார்த்து, "எழுந்திருச் சிட்டீங்களா? சரி பல் விளக்கிட்டு வாங்க. காப்பி தர்றேன்." என்று சொல்லிக்கொண்ட வெளியேறி விட்டாள் அவள்

வழக்கத்திற்கு மாறாக போர்வையை நானே ஒழுங்காக மடித்துத் தலையணைகளை அடுத்கி வைத்துவிட்டு குளியலறைக்கு பற்பசை, ப்ரஷ் எடுக்கச் சென்றேன்.

எனக்கு முன்பாகவே எழுந்துவிட்ட என் மகன் "டாடி! என் ஷுவைக் காணோம் டாடி! என்று கூவியவாறு வீடு முழுவதும் தேடிக் கொண்டிருந்தான்,

சீருடை, காலணி, கழுத்துப்பட்டைஇல்லாமல் அவன் பள்ளிக் கூடம் போக முடியாதே! 'கான்வென்ட் ஸ்டூடண்ட்' ஆயிற்றே?

வெள்ளைக்கார நாட்டில் அந்த நாட்டின் குளிருக்காக, சிறுவர் கள் பூட்ஸ், டை அணிந்துசெல்கிறார்கள் என்றால், அதை அப்படியே கண்மூடித்தனமாகப் பின்பற்றி நம்நாட்டு 'வெள்ளைக் காரப் பள்ளி'களும் நடக்கின்றனவே!...

முன்பு அரசியலிலே வெள்ளைக்காரருக்கு அடிமைப்பட்டிருந் தோம். இப்போது கல்வியிலே அவர்களுக்கு அடிமைப்பட்டிருக்கி றோம். இந்த நாட்டுக்கு அடிமைத்தனம் என்பது, பாரம்பரியப் பண்போ என்னவோ?

பல் துலக்கிவிட்டு கூடத்தில் உட்கார்ந்ததும் இளஞ்சூடான காப்பியுடன் என்முன்னே வந்து அமர்ந்தாள் சுமதி.

காலைப் பொழுதின் பரபரப்பான வேலைகளால் முகத்தில் அரும்பியிருந்த மெல்லிய வேர்வைத் துளிகளைச் சேலை முந்தானை யால் அழுத்தமாகத் துடைத்தவாறு நெடுமூச்செறிந்து களைப்பை இலேசாக்கிக் கொண்டிருந்தாள் அவள்.

காப்பியை மெதுவாக உறிஞ்சியபடி, அவளை ஏறிட்டுப் பார்த்தேன் நான்.

விடிகாலையில் எழுந்து, பெண்ணையும் பையனையும் குளிப் பாட்டி, உடையணிவித்துச் சாப்பிடவைத்து, 'டிபன்பாக்ஸ்'களை நிரப்பி அவர்களைப் பள்ளிக்கு அனுப்பும்வரை, இயந்திரமாகச் சுறு சுறுப்புடன் இயங்கும் என் மனைவி' இப்படி என் முன்னால் அமர்கிறாள் என்றால்- ஏதோ ஒரு முக்கியமான செய்தி இருக் கிறது என்று பொருள்.

ஓ!... அதைவிட முக்கியமான செய்தி, என்னிடமே இருக் கிறதே!...

''என்னங்க, சேதி தெரியுமா?''

கையிலிருந்த ஈரான்-ஈராக், பர்மா, இலங்கை, பஞ்சாப், அ.தி.மு.க. செய்திகளை மடித்து வைத்துவிட்டு, அவளை ஏறிட்டேன்.

''நம்ம எதிர்த்த வீட்டுக் கமலா இருக்காளே, அவளோட வீட்டுக்காரர் என்ன காரியம் செஞ்சிட்டார், தெரியுமா?''

நான் திகைப்புடன் அவள், வாயைப் பார்த்தவாறு இருந்தேன்

கமலாவின் வீட்டுக்காரர் நடேசன், அரசாங்கப் பணியில் எழுத்தராக இருக்கிறார். கோப்புக்களை நகர்த்துவதற்காக, அதிகமாக ஒன்றும் லஞ்சம் வாங்கமாட்டார். ஏதோ ஐந்து, பத்துத் தான் வாங்குவார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவேளை, லஞ்ச ஒழிப்புப் போலிஸார் அவரைக் கையும் மெய்யுமாகப் பிடித்துவிட்டார்களோ? திமிங்கிலங்களை விட்டுவிட்டுச் சிறு மீன்களைத் தானே நம் போலீஸ் வலை பிடிக்கும்?...

''நேத்து அவருக்கும் அவரோட ஆபீஸ்மேலதிகாரிக்கும் ஏதோ தகராறாம். அந்த அதிகாரி இவரை கன்னா பின்னானு மரியாதை இல்லாமப் பேசிட்டாராம். அதுக்காக ரோஷப்பட்டுக்கிட்டு வேலையை ராஜினாமா பண்ணிட்டு வந்திட்டாராம் ...'' என்று கவலையோடும் அதே சமயம் ஆத்திரத்தோடும் செய்தி விமர்சனம் செய்தாள் என் மனைவி.

என் நெஞ்சுக்குள் எதோ குபீர் என்று முகிழ்த்துப் படபட என்று அடித்துக்கொண்டு குமுறியது.

ராஜினாமா செய்கிற அளவுக்கு, அந்த அதிகாரி அவரைத் திட்டியிருப்பான் போலிருக்கு...'' என்றுமெல்ல முணு முணுத்தேன், 'அதே படகில் பயணம் செய்து கொண்டிருக்கும்' நான்.

''என்னதான் திட்டியிருக்கட்டுமே? - மேலதிகாரியாயிருக்கிறவர் திட்டத்தான் செய்வார். அதுக்குத்தான் அவரை மேலதிகாரியாய் நியமிச்சிருக்காங்க. அவர் திட்டிட்டாரேனு கோவிச்சுக்கிட்டுப் போறதுக்கு, ஆபீஸ் என்ன மாமனார் வீடா?... வாங்க மாப்பிள்ளே! மன்னிச்சுக்குங்க. வாங்க'னு வெத்திலை பாக்கு வச்சு மறுபடி கூப்பிடறதுக்கு? கவர்மெண்ட் ஆபீஸ்ங்க அது! - அந்த வேலையை விட்டுட்டு, என்ன செய்யப் போறாரு? இத்தனை வயசான பிறகு இவரோட மொட்டை பி.ஏக்கு எவன் உத்தியோகம் குடுப்பான்? எம்.ஏ., எம்,எஸ்சி, எம்.காம் படிச்ச

இளவட்டப் பிள்ளைக எல்லாம் பியூன் வேலை கிடைச்சாப் போதும்னு அலையுதுக. இந்த மனுஷருக்கு யார் வேலை குடுப்பாக? அதுவும் ஆயிரத்து எழுநூறு ரூபாய் சம்பளம் யார் குடுப்பாக? பாவி மனுஷர் வருஷா வருஷம் சம்பளத்திலே இன்க்ரி மென்ட் வாங்கினாரோ இல்லையோ — வருஷாவருஷம் குடும்பத் திலே இன்க்ரிமெண்ட் பண்ணிக்கிட்டிருந்தாரு. இந்தப் பெண்டாட்டி பிள்ளைக எல்லாம் இனிமே எப்படிப் பொழைக்கப் போறாங்க? இவர் என்ன பெரிய ஜமீன்தார் பரம்பரையா, பூர்வீக சொத்தை வச்சுக் காலத்தை ஓட்டறதுக்கு? நம்ம மாதிரி 'மிடில் கிளாஸ்' சாதிதானே? இந்த ஆளுக்குக் கொஞ்சமாவது அறிவு வேண்டாமா? நண்டும் சிண்டுமாய் இத்தனை குழந்தைகளை வச்சுகிட்டு கமலா என்ன பண்ணுவா? பாவம்! நேத்து வந்து என்கிட்டே ஒரு பாட்டம் அழுதுட்டுப் போனா'' என்று என் மனைவி எரிமலையாய்ப் பொங்கிக் கொண்டிருக்க, என் நெஞ்சுக் குள்ளே நில அதிர்ச்சியாய் இடியொலி எதிரொலித்துக் ஆர்ப் பரித்துக் கொண்டிருந்தது,

நீண்டநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு வீட்டு வேலைகன்னி அழுத்தத்தால் எழுந்த சுமதி, நீங்களாவது அந்த துப்புக் கெட்ட மனுஷரைப் பார்த்துப் புத்திமதி சொல்லுங்க'' என்று என்னைப் பெரிய புத்திசாலியாக அங்கீகரித்துவிட்டு அடுப்படிக்குள் மீண்டும் நுழைந்தாள்.

இரவில் என் உள்ளத்துக்குள் உறுதியான முடிவு மெதுவாக ஆட்டம் காணத் தொடங்கியது.

''டாடி ! இங்கிலிஷ் புக்ஸ் வாங்க இருபது ரூபாய் கேட்டேனே நாளைக்குக் கண்டிப்பாய் டீச்சர்கிட்டே கொடுத்தாகணும் டாடி! என்று இறுதி எச்சரிக்கை விடுத்தான் என் 'ஸன்'

நெஞ்சில் உருவாகி நின்ற திண்ணிய முடிவு மெல்ல பலவீன மாகி உடைந்து நொறுங்கிப் போனது.

வழக்கம்போல் அலுவலகத்துக்குப் புறப்படும் இயந்திர மானேன்.

"என்னங்க, சேதி தெரியுமா?... உங்க முனியாண்டி, வேலையை விட்டுட்டு வந்திட்டானாம் _'' என்று செய்திச் சுருக் கம் சொன்னாள் சுமதி.

உள்ளத்திற்குள் திகைப்பு முகிழ்த்துப் பொங்க, முனியாண்டியைப் பார்த்தேன்

"என்ன, முனியாண்டி! என்ன விஷயம்?" என்று பதற்றத்துடன் விசாரித்தேன்.

"ஒண்ணுமில்லே, சார்!..." என்று நிதானமாகச் சொல்லத் தொடங்கினான் அவன்.

"இன்னிக்கு சாயந்தரம், ஆபிசில் வேலை முடிஞ்சு எல்லாரும் விட்டுக்குக் கிளம்பிட்டாங்க. அந்த எம்.டி. பையனும் டைப்பிஸ்ட் குட்டியும் மட்டும் ரொம்ப நேரமாக அவனோட ரூமிலேயே இருந்துட்டுக் கடேசியிலே கிளம்பினாங்க. எம்.டி.யோட காரிலேயே அந்தக் குட்டியும் ஏறினா. ரூமிலேயே செருப்பை விட்டுட்டு வந்தது அப்போதான் அவளுக்கு ஞாபகம் வந்திச்சி போலிருக்கு. 'அடடா! செருப்பை மறந்துட்டேனே'னு அவ சிரிச்சுக்கிட்டே சொன்னா. உடனே அந்த எம்.டி. என்னைக் கூப்பிட்டு 'டேய்' அம்மாவோட செருப்பை எடுத்துக்கிட்டு வாடான்னான். எப்படியிருக்கு? எனக்குப் பொல்லாத கோபம்.. போயும், போயும் ஒரு பொம்பளையோட அதுவும் அந்தக் குட்டியோட செருப்பை நான் தூக்கிக்கிட்டு வர்றதா? 'போங்க சார்! முடியாது'ன்னுட்டேன். எடுத்துக்கிட்டு வர்றியா இல்லையான்னான். 'போய்யா, உன் பிச்சாத்து வேலையும் நீயும்'னு சொல்லிட்டு ஆபீஸ் சாவியை அவன் மூஞ்சியிலே எறிஞ்சிட்டு வந்திட்டேன்" என்று வீரபிரதாபத்தோடு விவரித்தான் அந்த பியூன்.

"மனுஷனுக்குச் சூடு சொரணைதான் உசிரு, சார்!... நா சோத்தைத்தானே தின்னுறோம்? மானம் கெட்டுப்போய் வயிறு நெறய விருந்து சாப்பிடறதை விட, மானத்தோடே கால்வயித்துக் கஞ்சி குடிச்சாப் போதும் சார்! இந்த பியூன் வேலை போயிட்டா என்ன, ஒலகத்திலே வேற வேலையே கிடைக்காதா? .. எல்லோரும் பியூன் வேலை பார்த்துச் சம்பளம் வாங்கித்தானா பொழைக்கிறான்?... மூட்டை தூக்கியாவது சம்பாதிச்சு, என் பெண்டாட்டி புள்ளைகளைக் காப்பாத்திடுவேன், சார்!... கெடக்கிறான் அந்தத் தேவடியா எம்.டிப்பய —" என்று கெட்ட வார்த்தைகளை அடுக்கத் தொடங்கினான் அந்த 'முன்னாள் பியூன்'.

"சரி வர்றோம், தாயி! – ரெண்டு மூணு நாளைக்கு கொஞ்சம் அரிசி குடுத்து உதவு, தாயி! – அதுக்குள்ளே எம் புருசன் ஏதாச்சும் வேலை செஞ்சு சம்பாதிச்சிருவாரு. இல்லைன்னா நான் சித்தாளு வேலைக்குப்போய்க்கூட, பதது ரூபா தெனசரி சம்பாதிச்சிருவேன், தாயி!" என்று புறப்பட்டாள் கருப்பாயி.

அவள் பின்னாலேயே நடந்தான் முனியாண்டி

அவர்கள், தெருவில் நடந்து செல்வதைப் பார்த்தவாறு நின்றேன் நான்—

படிப்பறிவு இல்லாத அந்த மனிதர்களின் உருவங்கள், தொலைவில் செல்லச் செல்ல, என் விழித்திரையில் மறையாமல் — என்னுள் பேருருவம் எடுத்துப் பரவி இதயத்தையே நிறைத்தவாறு நின்றுகொண்டிருந்தன...

# அடிவானத்து ஆசைகள்

அனார்கலி
ஏ.பி.சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி.

வேலுமணி மீண்டும் ஒருமுறை மடியைத் தொட்டுப் பார்த்து பத்திரமாக இருக்கிறது என்று உறுதிப்படுத்திக் கொண்டார். ஆறு பவுனுக்குச் சங்கிலி வாங்க மதுரைக்குப் புறப்பட்டு விட்டார். சங்கிலி கொழுந்தியாள் ராக்காயிக்கு, வேலுவின் தம்பிதான் ராக்காயியின் புருஷன்.

'அம்மா போயிட்டு வரேன்' சொல்லிவிட்டுக் கிளம்பிய ராக்காயியின் மூத்த மகன் ராசா பெரியப்பாவின் பின்னால் நடந்தான். ராக்காயிக்கு கண்கள் குளமாயின. கால்கள் துவண்டன. எப்படியோ தட்டுத் தடுமாறி வீட்டிற்குள் நுழைந்தவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவள் மனதில்..... கால ஏடு பின்னோக்கி புரண்டது.

என்னங்க ... ராசா அப்பா ... இந்த வருஷமாவது வெள்ளாமை விளைஞ்ச அப்புறம் இரண்டு பவுனுக்குச் சங்கிலி வாங்கிப் போடுவீங்களா?... அவள் கைகள் கழுத்தைத் தடவிக் கொண்டன. கண்களில் ஒரு 'பளிச்' மின்னி மறைந்தது,

"அதுக்கென்ன ராக்காயி ... கண்டிப்பா வாங்கிப் போட்டிரலாம். உறுதியுடன் கணவன் அழகரின் வார்த்தைகள் வெளிவந்தன.

அறுவடை முடிந்தது ... வழக்கம் போலத்தான் வாங்கின கடனுக்கு நெல் அளந்தது போக மீதியிருப்பது வருடம் முழுவதுக்கும் போதுமா என்ற பெரிய மனசுகள் கணக்குப் போட்டன.

ஒவ்வொரு அறுவடையின் போதும் ராக்காயின் மனசு சங்கிலியை நினைத்து மறுகியது. இரண்டு பவுன் சங்கிலிக்காக கணவன் அழகரும் எப்படி எல்லாமோ உழைத்தான்.

ஒருவேளைச் சாப்பாட்டைக் கூட சாப்பிடாமல் மிச்சம் பிடித்தும் பார்த்தான். ம் ... உம் ... உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குக் கூட மிஞ்சாதாமே.

புதுத் தண்ணீர் ஆற்றில் பெருக்கெடுக்கும் போது சங்கிலிக் கனவுடன் வயலில் இறங்கி வேலை செய்யும் ராக்காயிக்கு அறுவடைக்குப் பின் மேலைக்குப் பார்ப்போம் என்று ஆறுதல் படுத்திக் கொள்வது வழக்கமாகி விட்டது.

ராக்காயி இன்னும் இரண்டு பவுன் சங்கிலி வாங்கவில்லையே என்று காலச் சக்கரம் உருளாமலா நிற்கப் போகிறது.

அரைப்படி அரிசிப்பானை மாறி ஒருபடி அரிசிப்பானை அடுப்பில் இடம் பிடித்துக் கொண்டது. ராக்காயி கொஞ்சம் சதை போட்டிருந்தாள். இப்பொழுதெல்லாம் சடை போடுவதில்லை. முடியை அள்ளி முடிந்து கொள்கிறாள். அதுகூட பாந்தமாகத் தான் இருக்கிறது அவளுக்கு.

தலையில் அங்கொன்றும் இங்கொன்றுமாய் கறுப்புக் கலந்த வெள்ளை முடிகள். ஆனால் அவள் மனதில் மட்டும் வாசலில் நின்று தலையை மட்டும் நீட்டி எட்டிப் பார்க்கும் கிராமத்து வயசுப் பெண் போல சங்கிலி ஆசை இருந்து கொண்டேயிருக்கிறது. அன்று ராசா கல்லூரிக்குப் போய்விட்டான். இளையவன் ராமனும், அடுத்தவன் சுகுமாரும் பள்ளிக்குச் சென்றுவிட்டனர். வயலுக்குப் போன அழகர் திரும்பும் நேரமாகிவிட்டது.

நிலைப்படியில் சாய்ந்து ஒரு காலை மடக்கி இடக்காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு, கிழிந்து போன கண்டாங்கிச் சேலையைத் தைத்துக் கொண்டிருந்த ராக்காயியின் மனசு கணக்குப் போட்டுக் கொண்டிருந்தது.

மனசு சில சமயங்களில் மனிதனுடைய கட்டுக்குள் அடங்காமல் மீறிக் கொண்டு பறப்பதால்தானே ஏமாற்றங்களும் தோல்விகளும் அவனை அதிகம் தாக்காமல் இருக்கின்றன. ''இந்த வருஷம் நல்லா விளைஞ்சு எப்படியோ ரண்டாயிரம் மிச்சம் பண்ணியாச்சு.

அடுத்த வருஷமும் இப்படியிருந்தா தைக்குள்ள ஒரு சங்கிலியை வாங்கிப்புடலாம். பத்தும் பத்தாததுக்கு அக்கம் பக்கத்துலே கைமாற்று வாங்கிக்கிடலாம்''.

கையில் கிடைக்காத சங்கிலியை கழுத்தில் போட்டு மனசுக்குள் அழகு பார்த்துக் கொண்டிருந்த ராக்காயி திடுக்கிட்டாள்.

''மதனி ... ... ...மதனி'' ...

ஓடி வந்த கொட்டாப்புளி மூச்சிரைத்துக் கொண்டிருந்தான் 'என்ன கொழுந்தா யேன் இப்படி ஓடிவர்றே ? கொட்டாப்புளி ராக்காயிக்குச் சொந்தமில்லை. ஆனா மதனி, கொழுந்தன் உறவு முறை வைத்துத்தான் அவர்கள் பேசிக் கொள்வார்கள்.

எந்த சொந்தமும் பந்தமும் இல்லாமலேயே உறவு கொள்வது தானே கிராமியத் தார்மீகம்.

''மதனி ...... அண்ணனை வாடிப்பட்டி கார் அடிச்சிருச்சு ரோட்ல கிடக்குது'' சொல்லிவிட்டு ஓடினான் கொட்டாப்புளி அழகர் அடிபட்டுக் கிடந்த இடத்துக்கு.

உலகமே இடிந்து தன்னைப் போட்டு அமுக்கியதைப் போலானாள் ராக்காயி.

தைத்துக்கொண்டிருந்த சேலையை என்ன செய்தாள்,கதவைப் பூட்டினாளா .... ம் உம .... எதுவும் தெரியாது. நெற்றிப் பொட்டு அழிந்து கொண்டிருக்கும்போது கண்ணுக்கு மையில்லை என்று யார் கவலைப்படப் போகிறார்கள். மோதிய பஸ்ஸிலேயே தூக்கிப் போட்டுக் கொண்டு போனார்கள் மருத்துவமனைக்கு. கிராமத்து சனங்களே மருத்துவ மனையில்தான் இருந்தார்கள். டாக்டரைப் பார்க்க ... மருந்து வாங்க... சொந்தக்காரர்களுக்குச்

சொல்ல .... இப்படி யாரும் யாரையும் எதுவும் சொல்லாமலேயே அவர்களாகவே காரியங்களைச் செய்து கொண்டிருந்தார்கள். யார் என்ன செய்தால் என்ன — நான் போகிறேன் என்று சொல்லாமல் சொல்லிவிட்டுத் தன் பயணத்தை ஆரம்பித்துவிட்டான் அழகர்.

முட்டினாள் ...... மோதினாள் ராக்காயி ——

ஐயோ — நானும் அவரோடு போகிறேன் —

கிழங்கு மாதிரி இருந்தவனை தூக்கிக் கொடுத்துவிட்டுத் கதறியவளை யாரும் ஆறுதல் படுத்த முடியவில்லை —— சேர்ந்து அழுதார்கள்.

எல்லாச் சத்தத்தையும் மீறிக்கொண்டு "அப்பா" என்ற அலறல் அவளின் ஈரலில் பாய்ந்தது. அதன்பின் ராக்காயி அழுகையை நிறுத்திக் கொண்டாள். ஆனால் அவளால் பழைய நிலைக்கு வரமுடியவில்லை, இறகு பறிக்கப்பட்ட கோழியாய் தன்னை ஒடுக்கிக் கொண்டாள்,

ராசப்பா ... — ராசப்பா — அவளையும் மீறிக்கொண்டு தொண்டை வரைக்கும் வந்துவிடும் வார்த்தைகளை முழுங்கிக் கொண்டு துடித்துப் போவாள் ராக்காயி

காற்றடித்தது —...

மழை பெய்தது ......

உழவு நடந்தது — —

அறுவடையும் ஆனது —

இந்த அறுவடையில் மனசை கணக்குப் பார்க்க விடாமல் இறுக்கிக் கட்டிப் போட்டாள் ராக்காயி ...

அன்று மதியம் வந்த வேலுமணி ராக்காயியிடமும் அவளின் மகன்களிடமும் சொல்லிக் கொண்டிருந்தார்.

''பேச்சு வார்த்தை முடிந்துவிட்டது. கோர்ட்டு கேசுன்னு போனாக்க ரொம்ப இழுத்தடிப்பாங்க.

நம்மாளும் அலைய முடியாது.
சாட்சி அது —— இதுன்னு போய் கெஞ்சணும். அவங்களே சமரசத்துக்கு வர்ராங்க. நாமும் சரின்னு போறதுதான் நல்லது.

பஸ்ஸில் அடிபட்டு இறந்த அழகரின் குடும்பத்தினருக்கு அந்தக் கம்பெனி கணிசமான தொகையைத் தர முன்வந்தது.

அந்த பணத்தைப் பத்தித்தான் வேலுமணி சொல்லிக் கொண்டிருந்தார்.

வாழ்க்கையின் பெரும்பகுதியை படித்துவிட்ட வேலுமணியால் இந்த முடிவுக்குத்தான் வர முடிந்தது.

நல்லா கேட்டுக்கங்கடா —— சொல்லிவிட்டு தம்பிமகன்களின் முகத்தில் எதையோ தேடினார்.

நேரடியாகவே பேசத் தொடங்கி விட்டார். 'என்னதான் தாயாயிருந்தாலும் பிள்ளையாயிருந்தாலும் வாயும் வயிறும் வேற தான்'

நாளைக்கு யாரு எப்படி மாறுவோமோ. ஆனால் —— வந்த பணத்துலே உங்க அம்மாவுக்கு ஆதரவா ...... சா முதலா —— ஒரு ஆறு பவுன்ல ஒரு சங்கிலி வாங்கிப் போட்டிடலாம்னு நினைக் கிறேன் —— மீதியிருக்கிறதை நீங்க மூணுபேரும் வச்சுக்கங்க என்ன சொல்றீங்க ——''

பிள்ளைகள் சம்மதமாய் தலையாட்டினார்கள். ராக்காயி மட்டும் வாயில் சேலைத் தலைப்பைத் திணித்துக் கொண்டு குலுங் கிக் கொண்டிருந்தாள்.

# தொல்காப்பியர் பலர்

கு.வா. சச்சிதானந்தம்
சென்னை

முன்னுரை:

அகநானூறு புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களில் காணப்படும் பாடல்களுக்குரிய ஔவையாரும், ஆத்திசூடி பாடிய ஔவையாரும் என ஔவையார் பலராயினாற்போலவும் அகநானூறு முதலிய இலக்கியங்களில் வரும் பாடல்களுக்குரிய நக்கீரரும் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரரும் பதினோராந் திருமுறைப்பாடல்களில் வரும கயிலை பாதிகாளத்தி பாதி அந்தாதி கண்ணப்பதேவர் திருமறம் முதலிய செய்யுள்களுக்குரிய நக்கீரரும் என நக்கீரர் பலரானாற்போலவும் தொல்காப்பியம் இயற்றிய தொல்காப்பியரும் பன்னிருபடலவெட்சித்திணை பாடிய தொல் காப்பியரும் திருப்பாதிரிப் புலியூர்க்கலம்பகம் பாடிய தொல்காப் பியத்தேவர் என்பவரும் எனத்தொல்காப்பியரும் பலராவர். திருப்பா திரிப்புலியூர்க்கலம்பகம் பாடியவர் தொல்காப்பியத் தேவர் எனப் படுதலினாலும் மிகப் பிற்காலத்தவராதலினாலும் அவரை விடுத்து மற்றையிருவரையும் ஒருவராகவே கொள்வர் பலர், அது தவறு என்பதை இக்கட்டுரையால் அறியலாம்.

இளம்பூரணர் கூற்று:

தொல்காப்பியம் புறத்திணை ஏழ் எனக்கூறப் பன்னிரு படலம் பன்னிரண்டு எனக் கூறுகின்றது, அவற்றுள் வெட்சித் திணையை வெட்சிப்படலம் கரந்தைப்படலம் என இரண்டாகக் கூறுகின்றது. அவ்விரண்டனுள் வெட்சிப் படலத்தைத் தொல் காப்பியர் பாடினார் என்பது வழி வழிச்செய்தி, அகத்தியர் மாணவர் பன்னிருவர் என்றும் அவருள் ஒருவரான தொல்காப்

பியரே வெட்சிப்படலம் பாடினார் என்றும் கூறுவர். இக்கருத்தை இளம்பூரணர் பின்வருமாறு மறுப்பர், "பன்னிருபடலத்துள் தன்னுறு தொழில் வேந்துறு தொழில் என்று அன்ன இருவகைத்தே வெட்சி"யென இரண்டு கூறுபடக் கூறினாராயினும் முன்வருகின்ற வஞ்சி உழிஞை தும்பை முதலியன, எடுத்துச்செலவு, எயில்காத்தல் போர் செய்தல் என்பன அரசர்மேல் இயன்று வருதலின் வேந்துறு தொழில் ஒழித்து, தன்னுறு தொழில் எனத் தன் நாட்டும் பிறர் நாட்டும் களவின் ஆநிரை கோடலின் இவர் அரசரது ஆணையை நீங்கினார் ஆவர். ஆதலால் அவர் அவ்வாறு கூறல் மிகப்படக் கூறலாம். ஆதலால் பன்னிருபடலத்துள் வெட்சிப்படலம் தொல் காப்பியர் கூறினார் என்றல் பொருந்தாது என்னை?

ஒத்த சூத்திரம்... நூலெனமொழிப நுணங்கு மொழிப் புலவர். (தொல் மரபு 100) எனவும் "சிதைவு எனப்படுமவை ...... மிகை படக் கூறல் - அன்னபிறவும் அவற்று விரிவாகும் (தொல் பொருள் மரபு 110) எனவும் கூறிய ஆசிரியர், தாமே மாறுகொளக் கூறல் குன்றக் கூறல் மிகைபடக் கூறல் பொருளில் கூறல், ஒரு பொருள் கருதிக் கூறல் என்னும் குற்றம் பயப்பக் கூறினார் எனவழுவாம் ஆகலான்"

இவ்வாறு இளம்பூரணர் கூறியதால் அவர்களுக்குத் தொல் காப்பியம் இயற்றிய தொல்காப்பியர் பன்னிருபடல வெட்சிப் படலம் இயற்றினார் அல்லர் என்பது அவர் கருத்து என்பதும் பெறப்படும். அதிலிருந்து நாம் வெட்சிப்படலம் பாடியவர் தொல் காப்பியர் என்ற பெயருடைய மற்றொருவர் எனக் கொள்ளல் வேண்டும். அத் தொல்காப்பியர் யார்?

சிவலிங்கனார் கருத்து

அகத்தியர் பலருள் முதல் முதலில் தமிழ் அகத்தியர் இருந் தனர் என்றும், தொல்காப்பியர் இரண்டாம் அகத்தியர் மாணவர் என்றும், அவர் இயற்றியதே தொல்காப்பியம் என்றும், பின்னர் ஆரிய அகத்தியர் இருவர் வடக்கு இருந்து வந்தனர் என்றும்' அவருள் முதல் ஆரிய அகத்தியரிடம் திரணதூமாக்கினியார் முதலிய பன்னிருவர் மாணவர் இருந்தனர் என்றும், அப்பன்னிருவருள்

திரணதூமக்கினியார் என்பவர் தொல்காப்பியத்தில் வல்லுநரா யிருந்து தொல்காப்பியர் என்றே வழங்கப்பட்டார் என்றும், அவரே பன்னிருபடலத்து வெட்சிப்படலம் இயற்றியவர் என்றும் பிறவாறும் தமது அகத்தியர்கள் என்றும் நூலில் கூறியுள்ளார்.

இதனால் தொல்காப்பியர் பன்னிரு படல வெட்சித் திணை பாடினாரல்லர் என்பதும் அவர் பெயரால் விளங்கிய ஆரியராகிய திரணதூமாக்கினியாரே பாடினார் என்பதும் பெறப்படும், எப்படி யிருப்பினும், தொல்காப்பியர் பலர் இருந்தனர் என்பதற்கு அவர் கருத்தும் துணை செய்யும்.

என் கருத்து

காப்பியக்குடி என்ற ஒரு குடி பழங்காலத்தில் இருந்தது. அக்குடி மரபினர் நெடுங்காலம் இருந்துள்ளனர். அது காலப் பழமை கருதித் தொல்காப்பியக்குடி எனப்பட்டது, அதில் தோன்றியவர் தொல்காப்பியர். ஒரு குடியில் தோன்றிச் சிறந்தாரை அக்குடிப்பெயராலேயே அழைப்பதுண்டு. அந்தவகையில் தொல்காப் பியக்குடியில் தோன்றிச் சிறந்தவர் தொல்காப்பியரானார். காப்பியக் குடியார் என்பது காப்பியர் என மருவியது. அக்குடிப்பெயரால் அமைந்த ஊரும் உண்டு. அது காப்பியாறு என்பது. (கோட் டாறு தென்னாறு என இக்காலத்தும் ஆறு என முடியும் ஊர்கள் உண்டு). அக்காப்பியாற்றில் தோன்றிச் சிறந்த ஒரு புலவர் காப்பியனார் எனப்பட்டார். அவர் காப்பியாற்றுக் காப்பியனார் என்று ஊர்ப்பெயருடன் அழைக்கப்பட்டார். முதலாம் ஆரிய அகத்தியர் மாணவர் திரணதூமாக்கிலியார் தொல்காப்பியர் என்ற பெயருடன் இருந்தார் எனச் சிவலிங்கனார் கருதுவதை ஏற்காமல் தொல்காப்பியர் தமிழ் அகத்தியர் மாணவராகவே கொள்ளினும் அவரும் தொல்காப்பியக்குடியில் தோன்றியவராகவே அதாவது தொல்காப்பியம் இயற்றிய தொல்காப்பியருக்குப் பிற்பட்டுத் தோன்றியவராகவே கொள்ளலாம். எனவே, அகத்தியர், நக்கீரர், ஔவையார் முதலியோர் பலராயினாற் போலத் தொல்காப்பியரும் பலர் என்று கொள்வதில் தவறில்லை,

துணை நூல்கள்

1. தொல்காப்பியம் பொருளதிகாரம் — இளம்பூரணம்
2. அகத்தியர்கள் — ஆ, சிவலிங்கனார்

# அவனுக்குப் பண்டிகை இல்லை

ஈ. சேகர்
காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

''பொழுது சாயற நேரமாச்சு. இன்னும் போன ஆளக் காணோமே! இந்தா இருக்க மில்லுக்குப் போயிட்டு வர்றதுக்கா இவ்வளவு நேரம். நானும் வந்திடுவாரு, வந்திடுவாருன்னு காலையிலயிருந்து பார்த்துப் பாத்து கண்ணெல்லாம் பூத்துப் போச்சு. போனவரு ஒரேடியா வரக் காணோமே! இதுக்குத்தான் இந்த ஆளுக்கு வேலக்கிப் போறதில்ல கசாப்புக் கடையும் மூடுற நேரமாச்சு''.

அலுத்துக் கொண்டான் ரத்தினம்.

''என்னங்க! தங்கவேலு எப்ப வர்றது. கறி எப்ப எடுக்கிறது. பக்கத்து வீட்டுலயெல்லாம் நல்ல நாளைக்கி கறி சாப்பிடுறப்போ நாம மட்டும் எப்படிங்க. நாமதான் சாப்பிடாட்டியும் நம்ம பிள்ள பொறுப்பானா?''

நான் என்ன பணத்த வச்சுக்கிட்டா கறி எடுக்காம இருக்கேன். ஒனக்குத்தான் தெரியுமில இருந்த பணத்துக்கு பையனுக்கு சட்டை டவுசரும் ஒனக்கு சேலையும் வாங்கிட்டேன்ல. இந்த ஆளு இப்படிச் செய்வாருன்னு யாருக்குத் தெரியும். நேத்தே பணம் கிடைக்காதுன்னு சொல்லியிருந்தாலும் பானையையாவது அடகு வச்சிருக்கலாம். சரி, இன்னக்கி காலையில பாத்தவராவது சொல்லியிருக்கலாம். அதவிட்டுட்டு 12 மணிக்கெல்லாம் வந்திடுவேன்னு சொன்னாரு, ஆனா இன்னமும் வரக்காணோம். நான் இப்ப என்ன பண்ண முடியும்? போன மனுசன் இந்தக் கசாப்புக் கடையில சொல்லிப்புட்டு போயிருந்தரலும் பரவாயில்ல''

"வந்திடுவாரு, வந்திடுவாருன்னு காத்திருந்ததுதான் மிச்சமா போகப் போகுது, இப்படியே ஒக்காந்துகிட்டு இருக்காம போயி ராமசாமி கிட்டேயாவது கேட்டுப் பாருங்க. நாம சாப்பிடாமக்கூட இருக்கலாம். ஆனா இந்தப் பயலுக்கு பக்கத்து வீட்டுலயெல்லாம் சாப்பிடுறப்போ கன்னம் விங்கப் போகுது. பையன் ஏமாறப் போறான்".

ருக்மணி ஈரவிறகுக் கட்டையுடன் போராடினாள்.

என்ன செய்வதென்று தெரியாமல் இருந்த ரத்தினம் பலமான யோசனையில் மூழ்கிப் போனான்.

"அப்பா இருந்திருந்தா இம்புட்டுச் சொத்தும் வீணாகிப் போயிருக்காது. இப்படி ஊர்விட்டு ஊர் வந்து வாழ வேண்டிய அவசியமும இருந்திருக்காது. அண்ணனுடைய ஊதாரித்தனத்தால இப்படி நடுத்தெருவுல நிக்க வேண்டியதாச்சு. நாலு வயசுல விட்டுட்டுப் போயிட்டாங்க. பொறுப்பில்லாத அண்ணனால என் படிப்பும் பாழாகிப் போச்சு இருந்த வீட்டையும் கடனாக்கிப் புட்டான். அரண்மனை மாதிரி வீடு, இப்ப அப்படி வீடு கட்டனு முன்னா கொறஞ்சது லட்ச ருபாயாவது பிடிக்கும். இம் ... எல்லாம் தலையில எழுதியிருக்கும்போது யாரு என்ன செய்ய முடியும்"

மனைவியின் அழுத்தமான குரல் கேட்டு நிமிர்ந்தான்.

"என்னங்க நான் சொல்றது காதுல விழுகலயா? போயி ராமசாமிக்கிட்ட நாளக்கி தர்ரோமுன்னு கேட்டுப்பாருங்க. அரைக் கிலோ எடுத்தாக்கூட உருளக் கெழங்கோட போட்டு வக்கலாம் போங்க, போயி வாங்கிட்டு வாங்க."

ரத்தினத்தின் மூளையில் மின்னல் போல் பிரதிபலித்த எண்ணம்

"ராமசாமி வர்றது. ருக்மணியைப் பார்த்து அழகா இருக்குன்னு சொல்றது. ஒங்க குடும்பத்துல நானும் ஒருத்தன்னு சொலறது. எலலாம் பார்க்கும்போது இவமேல ஒரு கண்ணு வச்சு பேசறான்கிறது இவளுக்கெங்க புரியப் போகுது, அவன்கிட்டேயே போயி கடன் கேட்கச் சொல்றாளே."

வெளியில் போயிருந்த பையன் ஓடி வந்தான்.

''அப்பா! அப்பா! மாரிச்சாமியெல்லாம் புதுச்சட்டை போட்டுருக்கான், நீங்களும் என் சட்டைய வாங்கிட்டு வாங்கப்பா.''

நீ மொதல்ல போயி ஒன் சட்டைய தச்சாச்சான் பார்த்துட்டு வா! அப்புறம் வாங்கலாம்''

''சரிப்பா இந்தா!

புதுச்சட்டை போடுவதில் உள்ள ஆர்வத்தில் அடுத்த நிமிஷம் தெரு முனையில் தெரிந்தான் பையன். தானும் புதுச்சட்டை போடவேண்டும், ''என் சட்டையப் பாரு புதுச்சட்டை, எங்கப்பா எடுத்ததுன்னு'' மற்றவரைப் போல தானும் சொல்லவேண்டும் அதுவும் இப்பவே சொல்ல வேண்டும் என்ற ஆவலில் ஓடினான்

திரும்பி வந்தவன் கால் தரையில் பாவாமல் குதித்தான்.

''அப்பா! என் சட்டையை தச்சு ஆணியில மாட்டியிருக்காங்க வாங்கப்பா போயி வாங்கிட்டு வரலாம்''.

''பொறுடா போகலாம்''

'பக்கத்து வீட்டு கண்ணனெல்லாம் புதுச் சட்டை போட்டுருக்கான். தீபாவிக்கு எங்கப்பா எடுத்ததுன்னு எல்லாருகிட்டேயும், பீத்துறான். வாங்கப்பா போகலாம்''.

அழத் தொடங்கிவிட்டான் பிள்ளை.

''அழுதையின்னா வரமாட்டேன். அழாம இருந்தாத்தான் வருவேன். நீ இன்னொரு தடவ போயி பித்தான் வச்சாச்சான்னு கேட்டுட்டு வா!

மீண்டும் தையல் கடைக்கு ஓடினான் பையன்.

''தச்ச சட்டைய வாங்கக் கூட கையில பணம் இல்லாம ஆடு மாடுக திரும்பற நேரத்துல இப்படி அலைய வைக்கிறானே! வாழ்ந்தா பணக்காரனா வாழனும். இல்லையின்னா சாகனும். கையில முப்பது ரூபா இல்லாம நல்ல நாளைக்கி கறி எடுக்க முடியல. பையனுக்கு தச்ச சட்டையை வாங்க முடியல''.

தான் அழுதுவிடலாம். அப்படி அழுவது அசிங்கமென்று துண்டை வீசித் தோளில் போட்டு வெளியே கிளம்பினான்.

ருக்மணி தன் பங்கிற்கு பொருமினாள்.

''அம்மா இருந்தான்னா ரெண்டு வருசமாகியும் ஒரு தடவை யாவது பாக்க வராம இருக்க மாட்டா. நான் என்ன காலு நொண்டி இல்ல அபத்தையவா பாத்தேன். மனசுக்கு பிடிச்சது வாழ்றேன். அண்ணனாம் அண்ணன் பொண்டாட்டி பேச்சக்கேட்டுக் கிட்டு கட்டுனசேலையோட ஓடிப்போன்னு சொல்லிப்புட்டான் அம்மா நகைய கொடுத்தாலும் அவசர ஆத்திரத்துக்கு உதவியா இருக்கும்'',

கடையில் ராமசாமி இருந்தார்.
ரத்தினத்தைக் கண்டதும் கேட்டார்.
''என்ன ரத்தினம் இந்தப் பக்கம்?''

ஒண்ணுமில்லங்க ராமசாமியண்ணே'' தங்கவேலு மில்லுக்குப் போயிட்டு 12 மணிக்கெல்லாம் பணத்தோட வர்றதா சொன்னாரு; போனவர இன்னும் காணோம், அதான்...''

''பணம் கெடச்சிருந்தா வந்திருப்பாருல, பணம் கெடக்கல அதான் வரல.''

''ராமசாமிகிட்டே கேட்கலாமா? வேண்டாமா? இவர விட்ட வேறு யாருகிட்ட வாங்கமுடியும்''.

''என்ன யோசனை''

''ஒண்ணுமில்லங்க''.

''வா! வீட்டுக்குப் போகலாம்''.

ரத்தினம் தன் எண்ணத்திற்கு சமாதானம் சொல்லிக் கொண் டான்.

இவன் என்ன பணம் கொடுத்ததுக்காக வீட்டுக்கா வரப் போறான் கடனாத்தானே தரப் போறான். தங்கவேலு வந்ததும் திருப்பித் தரப்போறேன். நல்ல நாளும் கொண்டாடனும். பையன் புதுச் சட்டையும் போடனும். இதுக்கெல்லாம் உடனே பணத்துக்கு இவர விட்டா வேறு யாரு தருவா? பணத்த வாங்கிட்டு நாளக்கி கொடுத்துற வேண்டியதுதான்''.

"கையில இருந்த காசு செலவாகிப் போச்சு. பையனுக்கு தச்ச சட்டையைக் கூட வாங்க முடியல. பையன் சட்டை கேட்டு அழுகிறான். நாலுநாளா வேல செஞ்ச காசு தரனும். அதான் தங்கவேலப் பார்க்கலாமுன்னு ......"

"நல்ல ஆளுயா நீ! நல்ல நாளும் அதுவுமா கையில பணம் இல்லன்னா எங்கிட்ட கேட்க வேண்டியதுதானே?"

"இல்லங்க......"

"நான் ஒன்னும் காரவீடு வாங்கித் தரப் போறதில்ல என்னால முடிஞ்சதச் செய்றேன். அப்படியே நான் கொடுத்தாலும் நீ திருப்பித் தரப்போற, இதுல என்ன தயக்கம் வேண்டியிருக்கு. வா! வா! வீட்டுக்குப் போகலாம்',.

ரத்தினம் கறிப் பொட்டலம். பையனுக்கு புதுச் சட்டையுடன் வீட்டில் நின்றான்.

"ஐயா புதுச் சட்டை, அப்பா வாங்கியாந்துடுச்சு"

பையன் ஆனந்தத்தில் குதித்தான்,

"கறியக் கொடுங்க, நம்மளும் ஆளோட சாப்பிடனும்"

ருக்மணி கறிப் பையை வாங்கிக் கொண்டு பண்டிகையில் மூழ்கிப் போனாள்.

ரத்தினத்தின் மனதில் ஏதோ ஒரு உறுத்தல் உறுத்திக் கொண்டேயிருந்தது. ஊரே பண்டிகையில் முழ்கியிருந்தது. வெடிச் சப்தமும், மத்தாப்பு ஓசையும் ரத்தினத்தின் காதில் ஒலித்தது. ரத்தினத்தின் மனத்தில் தோன்றிய சுமை அவனை அசதியில் ஆழ்த்தியது. அவன் அருகில் உள்ள திண்ணையில் சோர்வுடன் அமர்ந்து சுவற்றில் சாய்ந்தான்.

# பதவியும் பாவங்களும்

பொன். சௌரிராசனார்
திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி

அன்னம் வாழ்க!

நல் அன்னத்தார் ஆள்க!

வாலாட்டி வள்ளல் ஒழிக!

நாயார் வாலாட்டி வள்ளல் ஒழிக!

பெரிய யானைமேல் நல் அன்னத்தார் வீற்றிருக்க ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. கழுகார், பருந்தார், மயிலார், குயிலார் நாகனவாய்ப்புள்ளார், கிளியார், சிட்டார் முதலிய பறவை இனத் தாரும் முயலார், மானார், பசுவார் முதலான விலங்கு இனத் தாரும் வாழ்த்தொலி எழுப்பியவாறு ஊர்வலத்தைத் தொடர்ந்து மெல்ல நகர்ந்து கொண்டிருந்தனர். கட்சிச் செயலாளர் கருங் கழுகார் மாலை அணிந்தவராய் முன்னின்று ஊர்வலத்தை நடத்திக் கொண்டிருந்தார். ஏரிக்கரையை நோக்கிக் கூட்டம் மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது.

"நாயார் வாலாட்டி வள்ளலை அன்னத்தார்க்கு எதிராகத் தேர்தலில் நிறுத்தியபோதே எனக்குத் தெரியும். சொந்தக்காரனே அந்த ஆளுக்கு ஓட்டுப் போடமாட்டானுங்க, வள் வள்னு யாரை யும் அவன் அண்ட விடமாட்டான். அதனால்தான் வள்ளல்னு அவனைக் கூப்பிடுவாங்க. ஓநாயார் தனக்கு ஒத்து வரலேன்னு இந்த நாயாரைத் தேர்ந்து நிறுத்திட்டாரு கடும்புலியார். தன் னிடம் நன்றி விசுவாசத்துடன் இருக்கும்னு நெனச்சு இப்படிச செய்துட்டாரு..........",

''அது ஒரு பாயிண்டுதான். ஒத்துக்கிறேன். ஆனா (அங்கும் இங்கும் பார்த்தபடி இரகசியமாக) கருங்கழுகார் கூட்டம் என்னென்ன அக்கிரமம் செய்திருக்காங்க தெரியுமா? மூனு நாலு கொலை கூட நடந்ததா கேள்வி - கடைசியில் எல்லாம் நல்லன்னத்தார் தலையிலே விழப்போவுது.''

''அய்யோ பாவம்!'' நல்லன்னம் நல்லவர். வெளுத்ததெல்லாம் பாலுன்னு நினைச்சு நம்புவார். அவர் எப்படியோ இந்தப் பாவி கருங்கழுகு வலையிலே விழுந்திட்டாரே! அவன் இவரை எப்புடி எப்புடி ஆட்டிப் படைக்கப் போறானோ?''

இப்படிக் குறுநடை காக்கையாரும் நெடுமூக்கு நாரையாரும் பேசிக்கொண்டே சென்றனர்.

''நான் ரொம்ப காலமா நல்லன்னத்தின் நம்பிக்கைக்கு உரிய ஆள், காவல் துறை வேண்டும்னு அவர்கிட்டே சொல்லியிருக்கிறேன். ஏன்னா இந்த ஓநாய் செங்கண்ணன் இருக்கான்லே, அவன் போலீசிலே இருந்துகிட்டுப் பண்ணாத தீமையெல்லாம் பண்றான். மொதல்லே அவனை ஒழிக்கனும். அப்புறம் பாரு, அந்தத் துறையிலேதான் மாமூல் சரியா நிறையா வரும்.... என்ன குறுங்கோழியாரே! நான் சொல்றது காதுலெ விழுதா எங்கேயோ பார்த்துகிட்டு வர்ரியே'' என்று முறைத்தார் நொண்டி எருமையார்.

''அட விழுதய்யா! அங்க பாரு கருங்கழுகு ஆள் ஒன்னையும் என்னையும் பாக்கிறதை அதான் ஒன்ன கவனிக்காதது மாதிரி நடக்குறேன் - எல்லாம் விழுந்தது. எனக்குக் கூட விளம்பரத் துறை மேலே ஆசையா இருக்கு. என் டான்சுக்கு நல்லன்னம் ஒருதரம் தலைமை தாங்கிப் பாராட்டியிருக்காரு, கேட்டுப் பார்க்கலான்னு இருக்கேன்''.

அப்படிச் சொன்னா போதுமா—நாமெல்லாம் ஒன்னு சேர்ந்து கேட்டாத்தான் கெடைக்கும். இல்லாட்டி கருங்கழுகு மிரட்டித் தனக்கும் தன் ஆளுக்கும் எல்லாப் பதவிகளையும் கொண்டு போயிடுவான். கேட்டுப் பாப்போம். கொடுக்காட்டி பிரிஞ்சி போய் புதுக்கட்சி அமைத்திடுவோம்''

இப்படியே நல்லன்னத்தார் பெற்ற வெற்றியைத் தங்களுக்கு எந்த அளவு சாதகம் ஆக்கிக் கொள்ளலாம் என்று பேசியபடி உறுப்பினர் பலர் ஊர்வலத்தில் வந்து கொண்டிருந்தனர்.

ஊர்வலம் ஏரிக்கரையின் கிழக்கு மூலையை எட்டியது. அந்த மூலையின் மேற்கே அடர்ந்த மலைச்காடு. கிழக்கே சின்ன கிராமம். ஆலங்குறிச்சி ஊர்வலம் காட்டுக்கும் குறிச்சிக்கும் இடையில் ஏரிக்கரை கிழக்கு மூலையில் வந்து நின்றது. திட்டப்படி அங்கே பந்தல் போடப்பட்டு இருந்தது. பாராட்டு மேடையும் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. சமையல் வாசனை மூக்கைத் துளைத்துக் கொண்டிருந்தது. வந்த பறவையாரும், விலங்காரும் ஏரிக்கரையில் ஒரு வாய் தண்ணி குடித்துவிட்டு வந்து ஓய்வெடுத்துக் கொண்டனர். ஆடல், பாடல் அமர்க்களப்பட்டன. மறைமுக ஆதரவு தந்த பன்றியார், எருமையார், நாயார் அனைவரும் இப்போது வெளிப்படையாகவே வந்து பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர்.

மலைக்காட்டில் கடும்புலியாரின் தலைமையின்கீழ் வேறொரு அணி மறைந்து மறைந்து இந்த அணியைத் தாக்க வந்துகொண்டிருந்தது. தங்களுக்கு உதவுவதாகக் கூறிவிட்டு மறைமுகமாக மாற்று கட்சிக்கு உதவிய பன்றியார், எருமையார், நாயாரிடம் கடுங்கோபம் அந்த அணிக்கு.

இதற்கிடையில் படைத்தலைவர் ஓநாய் செங்கண் வெண்பல்லார் படைவீரர்களுக்குப் பற்பல கட்டளைகள் இட்டுக் கொண்டிருந்தார் நாயார் வாலாட்டி வள்ளல் தோற்றது அவருக்கு உள்ளூர மகிழ்ச்சியே. அன்னம் வெற்றி பெற்றதில் அப்படியொரு பிடிப்பும் இல்லை. என்றாலும் நாயாரைத் தோற்கடித்ததால் அன்னத்தாரிடம் தன்னை அறியாமலே வெண்பல்லார்க்குக் கொஞ்சம் பாசம் வளர்ந்திருந்தது.

மறைமுகமாகத் தன் ஓநாய் இனம் தலைமை பெற வேண்டுமெனப் பெரிதும் முயன்று தோற்றுப் போனதை மீண்டும் வெண்பல்லார் தன் மனத்திற்குள் கொண்டுவந்து ஒருமுறை நினைத்துப் பார்த்தார். தான் அனுப்பி வைத்த ஓநாய் நீள் முகத்தானை

அடித்துத் துரத்திய வளை கொம்பு எருமையார், கோட்டுப்பல் பன்றியார் வெண்புள்ளி நன்மானார் எல்லோரும் தன் நினைவுக்கு வந்தனர். அவர்கள் எல்லாம் அந்த விருந்தில் கலந்து கொள்ளப் போவதை அறிந்தார்.

உடனே படைமேடைக்கு வந்து கலவரத்தைத் தடுப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என ஆணை மேல் ஆணை பிறப்பித்தார். பின்னர் தனக்கு மிக வேண்டிய இரண்டு துணைப்படைத் தலைவர்களை கைகாட்டி அந்தரங்க அறைக்கு அழைத்து வளைகொம்பார் கோட்டுப்பல்லார், வெண்புள்ளியார் பற்றிச் சில குறிப்புகள் சொல்லி அனுப்பிவிட்டார்.

ஏரிக்கரைக் கிழக்கு மூலையில் விருந்து நடந்து விழா துவங்கும் நேரத்தில் மேற்கே பின்புறமிருந்து பெருங் கூச்சலுடன் தோற்றுப் போன கூட்டம் வந்து தாக்கியது. இதற்கிடையே நான்கு புறங் களிலிலுமிருந்து கலவரத்தைத் தடுக்கக் காவற்படைகள் வந்து குவிந்தன.

ஒரிரு மணி நேரம் என்ன நிகழ்கிறது யார் செத்தார்? ஏன் செத்தார்? யார் அடிபட்டார் எப்படி அடிபட்டார்? என்று அறிய இயலவில்லை. இறுதியில் பலர் இரு கட்சியிலும் இறந்து போன தாக, காவலர் மூவர் படுகாயம் உற்றதாகச் செய்தி கிடைத்தது. இறந்து போனவர்கள் சிலர் கைவேறு கால்வேறு தலைவேறாகச் சிதைந்து போய்க் கிடந்தனர். ஆள் அடையாளம் காணமுடிய வில்லை. இன்னும் சிலர் வேற்றுக் காடுகளுக்கு ஓடிப் போய்ப் பதுங்கிக் கொண்டனர். இதனால் செத்தவர்களைச் சரியாக அடை யாளம் காணமுடியவில்லை எனக் காவல் துறை அறிக்கையில் குறிப்பிடப்பட்டது.

இப்போது அந்தக் கிழக்கு மூலையில் வெற்றி பெற்ற அன்ன மும் அதன் ஆதரவாளர்களும் மட்டும் ஒரு பாறைமேல் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

“என்ன கருங்கழுகாரே கடைசியில் இப்படி ஆகிவிட்டதே. அப்போதே விழாவும் வேண்டாம் ஒரு மண்ணும் வேண்டாம்

என்று சொன்னேன் கேட்டீர்களா'' என்று அன்னத்தார் சோகத்தோடும் தாபத்தோடும் கூறினார்.

தேர்தல் என்றால் எல்லாந்தான் உண்டு. அதுபோகட்டும் இனி ஆவதைப்பற்றி யோசிப்போம் தங்களுடைய முதல் மகன் பொன்னையையாநும் கடைசி மகள் முத்துநகையும் கலகக் காரர்களால் தூக்கிக்கொண்டு போகப்பட்டதாகச் சற்றுமுன் செய்தி வந்துள்ளது இதனைக் கவனிக்க உடனே...

அதற்குள் இடைமறித்து நீலிமணிப் புறா கூறியது. "பந்தல் செலவு, விழாச் செலவு பல ஆயிரம் ஆகிவிட்டது. இதனைச் சரிக் கட்ட இப்போதே ஐம்பதாயிரம் வேண்டும் இன்னும் ஒரு செய்தி...

அதற்குள் கருங்கழுகார் சீற்றத்துடன் "உங்களுக்கு இடம், காலம் ஒன்றும் தெரிவதில்லை. தலைவருடைய மகன், மகள் பற்றிக் கவலையில் இருக்கிறோம். எல்லாரும் பிறகு வாருங்கள் என்று அனுப்பி விட்டுத் தலைவரிடம், "ஐயா நான் தங்கள் மகன், மகள் பற்றி காவலர்களிடம் பேசி ஆவன செய்கிறேன். நீங்கள் உடனே வீட்டுக்குப் போய் ஓய்வு கொள்ளுங்கள் திரும்பி எத்தனை மணி நேரமானாலும் இரவானாலும் நான் வந்து நல்ல சேதி சொல்லுவேன் அதுவரை தாங்கள் யாரையும் தங்களோடு பேச அனுமதிக்க வேண்டாம். நான் வருகிறவரை யாரோடும் பேசாதீர்கள்; கவனம் முக்கியமாக வெண்கருடனுடன் ஏதும் தொடர்புவைத்துக்கொள்ளாதீர்கள் அவர்தான் நிதியமைச்சர் என்று யார் யாருடனோ பேசியதாகத் தகவல் வந்துள்ளது ஒன்றுக்கும் உதவாத குறுங்கோழியார்க்குக் கலையமைச்சர் பதவி வேண்டுமாம் அந்த நொண்டி எருமையார் காவல்துறை அமைச்சர் பதவி கேட்கத் திட்டமிட்டுள்ளார். நீங்கள் நான் வரும்வரை யாருடனும் பேச்சுக் கொடுத்துவிடாதீர்கள் அப்படி நிர்பந்தம் ஏற்பட்டால் காவல் நிதி தவிர மற்ற அமைச்சர் பதவிகள் பற்றி யோசியுங்கள். எதற்கும் விரைவில் வந்துவிடுவேன்'' என்று கூறிவிட்டுத் தன் ஆட்களோடு புறப்பட்டு விட்டார். கருங்கழுகார் வழியில் தன் ஆட்களைப் பகுதி பகுதியாகப் பிரித்து அவர்கள் உடனே செய்ய வேண்டிய செயல்களைக் குறிப்பாகச் சொல்லி அனுப்பிவிட்டு அந்தரங்க அடியாள் ஓநாய் செங்கண்ணனை அழைத்துத் தான்

கூறியபடி நல்லன்னத்தார் மகன் மகள் பதுக்கி வைத்த இடத்தைக் கேட்டு அறிந்து கொண்டு அடுத்து என்ன செய்வது என்று எண்ணியவாறு அவனோடு வேகமாகப் புறப்பட்டார்.

நல் அன்னத்தார் மாளிகைக்குச் செல்லும் போது இரவுமணி 11 ஆகிவிட்டது. மாளிகையில் எல்லாப் பொருள்களும் சிதறிக் கிடந்தன. பொன் வண்ணம் — அவருடைய மனைவி அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகப் படுக்கையில் புரண்டு கொண்டிருந் தாள். இவரைக் கண்டதும் 'ஆ' 'ஆ' என அழுதவளாய் அவரை அணைத்துக் கொண்டே தேம்பித் தேம்பித் தன் மாளிகையில் நிகழ்ந்த கொடுமையெல்லாம் கூறினாள். மெல்ல அவளுக்குத் தூக்க மாத்திரை கொடுத்துத் தூங்க வைத்து விட்டு நல் அன்னம் உறக்கமின்றித் தன் கடமைகளை எண்ணிப் பார்க்கலானார்.

தனக்கு ஆதரவு தந்த ஒவ்வொரு கூட்டத்திற்கும் கருங் கழுகார் தன் கண்முன் அளித்த வாக்குறுதிகளை நினைத்துப் பார்த்தார். அவருக்கே பயமாக இருந்தது. தன் மூதாதையர்கள் தேடிய சொத்தெல்லாம் போவதோடு வருகிற ஐந்தாண்டுகளும் அத்தனை பேருக்கும், தான் அடிமையாக இருக்க வேண்டுமே என்று கலங்கினார். 'கருங்கழுகார் தான் தலைவர் பதவிக்கு நிற்காமல் என்னை நிறுத்தி வெற்றி பெற்றுக் கொண்டு என்னைக் கருவியாக்கித் தானும் தன் அடியாட்களும் அதிகாரிகளாய் ஆகப் போகிறானே' என்று ஒரு கணம் நினைத்துப் பார்த்தார். ''நல் அன்னத்தார் நல்லவர்; நல்ல குடும்பத்தவர்; நமக்கெல்லாம் நலம் செய்வார்'' என்ற எண்ணத்தில் மாற்றினத்தாரும் வலிய வந்து செய்த உதவிகளையும் ஒத்தாசைகளையும் எண்ணி எண்ணி ஏங்கினர். இனி இந்தக் கருங்கழுகாரின் இரும்புப் பிடிக்குள் தானும் தன் குடும்பத்தாரும் அகப்பட்டுக் கொண்டு நல்லவர்களை வதைத்து, கொடியோர்களை வளர்த்து செய்யப் போகும் பாவங் களை எல்லாம் எண்ணி எண்ணி அழுதார். சோர்வோடு படுக் கைக்குச் சென்றார். என்ன ஆயிற்றோ! — காலையில் படுத்த படுக்கையில் நல் அன்னத்தார் மாண்டு கிடந்தார்.

'அய்யோ — என் நல்லவரே' என்ற பொன் வண்ணத்தின் அழுகுரல் மாளிகை முழுவதும் கேட்டுக் கொண்டிருந்தது.

# உள் உரு வெளிப்பாடு: சி. ஆர். இரவீந்திரன்

மா. நடராசன்
கோயம்புத்தூர்

முன்னுரை:

தற்காலப் படைப்பிலக்கியத்துறையில் முதன்மையான இரண்டு போக்குகள் இரண்டு திசையில் பயணம் செய்கின்றன. இலக்கியக் கொள்கை வகுப்புக் காலத் தொடக்கத்தில் இதே இரண்டு போக்குகள் இருந்தன. அவை கலை கலைக்காகவே கலை வாழ்க்கைக்காகவே - என்ற வடிவில் இருந்தன. இன்றைய இளைய புதிய படைப்பாளர்களிடம் இந்த இரண்டு வடிவுகளும் பளிச்சிடுகின்றன. சிலரிடம் கலவையாக வெளிப்படுகின்றன இரண்டு வடிவிலும் நாம் படைப்பாளிகளின் இரண்டு முகவரி களைக் காண முற்படவேண்டும். ஒன்று 'சமுதாயத்தில், குடும்பத் தில், அரசியலில் பாதிக்கப்படும் கலைஞனின் முகவரி. இது மேற் போர்வையாக அமைவது. அடுத்தது இதய முகவரி, அந்த இதய முகவரியின் மூலம் கலைஞனின் உள் உரு நமக்கு அடையாள மாக வெளிப்படும். அதைத்தான் இங்கு உள் உரு வெளிப்பாடு என ஆய்கிறோம்.

இரண்டு முகவரி:

கலை கலைக்காகவே என்ற கோட்பாட்டின் சிறு கூறுக் கழி வும் (Substraction) வேறு சிறு கூறுக்கூட்டும் (additions) அமைந்த தன் வடிவம்தான் - மேற்போர்வை முகவரி. படைப்பாளனின் மேற்போர்வை முகவரி மாறக் கூடியது. அனுபவங்களின் தொகுப்பு அதிகம் அடைய அடைய அவனுடைய (Pin code)

மேற்போர்வை முகவரி கூடுதல் பெறும். அதுதான் அவனுடைய பரிணாம வளர்ச்சி ஆகும். ஒரு நல்ல படைப்புக்கலைஞனின் மேற்போர்வை முகவரி படைப்புக்குப் படைப்பு - வித்தியாசமான வளர்ச்சி பெறும்; பெறவேண்டும் ஆனால் அவனுடைய இதய முகவரி அதாவது உள் உரு வெளிப்பாடு என்றும் நிலையானது. அந்த உள் உரு படைப்பு முழுவதும் **வெளிப்படும்** என்று கூற முடியாது. அது எங்காவது ஓரிடத்தில் மட்டுமே கூட வெளிப் படலாம். அதைக் காண வேண்டியது விமர்சகரின் பணி, 'படைப் பாளனின் உள் உரு வெளிப்பாடு கதை மாந்தரின் போக்கையும் இயக்கத்தையும் (Movement) அதிகம் தாக்கிக் (influence)கதையின் இயல்பான போக்கு வேறாகக் கூட அமையும். புரிந்து கொள்வதற் காக அதை நாம் படைப்பாளனின் (ideolgy) கோட்பாடு என்று சொல்ல முற்படலாம். ஆனாலும் கோட்பாடு வேறு உள் உரு வெளிப்பாடு வேறு என்றும் வகைமைப் படுத்துவது அவசியம் ஆகிறது.

கோட்பாடும் உள் உரு வெளிப்பாடும்:

கோட்பாடு என்பது ஒருவரின் அல்லது ஒரு குழுவின் அல்லது ஒரு போராட்டத்தின் அரிய அனுபவத் தொகுப்பு ஆகும். அந்தக் கோட்பாட்டினைத் தன் வாழ்க்கையில் போற்றியும் பாராட்டியும் அப்படியே பிசகாமல் கடைப்பிடித்தும் வரும் ஒரு படைப்பாளி தன் வாழ்க்கையின் நெருக்கடிகளையெல்லாம் தாண்டி அதற்கு மேலும் ஒரு ஆன்ம தாகத்தை வைத்து அலைய வேண்டும். அனுபவங்களைத் தொகுக்க வேண்டும். அனுபவங்களுக்குள் சிக்க வேண்டும். அந்த அலைச்சல்தான் (Creative Literature) ஆக்க இலக்கியமாக அமைய முடியும். அந்த அலைச்சலினால் தான் எதிர்பார்க்கும் வகையில் ஒரு குறைந்த பட்சப் பயன் அமையும். அந்தப் பயன் எதிர்வரும் புதிய சமுதாயத்திற்குப் பாதையாக அமைய முடியும். அந்தப் பாதையைத்தான் கோட்பாடு என்று இங்கு குறியீடு செய்கிறோம். உள் உரு வெளிப்பாடு என்பது — படைப்பாளனின் நனவிலி மனதுக்குள் (Subconsious mind) அமிழ்ந்து கிடக்கும் பலவகையான பண்பு, ஆசை, இளம் வயது அனுபவம் எங்கோ என்றோ புகுத்தப்பட்ட கோபம், தாபம் மற்றும் கவர்ச்சி, மலர்ச்சி போன்றவற்றின் ஒட்டுமொத்தத் தொகுப்பு

(Total and collective) அல்லது தனித்தனி (individual form) அம்சம் படைப்புக்குள் ஒரு வேலையாக அல்லது ஒரு கிரியா ஊக்கியாக இயங்கும். ஒவ்வொரு படைப்பாளியின் படைப்பிலும் எங்காவது ஒரு சில இட, கால கட்டத்தில் இழையோடும், சில குறைகுடப் படைப்பாளிகளிடம் ஒரே தன்மை அல்லது இரண்டே தன்மைகள் போலச் செய்தல் (imitation) ஆக ஒவ்வொரு படைப் பிலக்கியத்திலும் வெளிப்படும். சில தேர்ந்த படைப்பாளியின் படைப்புகளில் கதை மாந்தர்களின் போக்குக்கும் அல்லது இயக் கத்திற்கும் (movement) படைப்பாளியின் உள் உரு வெளிப் பாட்டுக்கும் எந்த (gap) இடைவெளியையும் அதாவது ஒட்டாத தன்மையையும் காண முடியாது. அதைக் கண்டு பிடித்துவிடுதல் மூலம்தான் அந்தப் படைப்பாளனின், அந்தக் கால கட்டத்தின் அந்தப் படைப்பின் தோற்றப் பூர்வாங்கத்தை உணரமுடியும். தோற்றப் பூர்வாங்கத் (origin to creation)தைச் சரியாக உணர்ந்து கொண்டாலதான் அந்த இலக்கியத்தின் பங்குப் பணியைப் புரிந்து கொள்ள முடியும். கலை இலக்கியம் என்பது வாழ்க்கைக்காக என்ற கோட்பாட்டில் படைக்கப்பட்டுள்ள சிறுகதைத் தொகுதி தான் ரிவோல்ட், இதன் ஆசிரியர் வானம்பாடி கவிதை இயக்கத் தினருள் ஒருவரான சி.ஆர். ரவீந்திரன் ஆவார். சி.ஆர். ரவீந் திரனின் உள் உரு வெளிப்பாடும் அவர் படைப்பு மாந்தர்களும் விலகி இருக்கவில்லை. ஒன்றில் ஒன்று கலந்து கதை மாந்தரின் இயக்கத்தில் இணைந்து இயல்பான போக்காகவே அமைகிறது. அதனால் மிக நுண்ணியமாகச் சி.ஆர். ரவீந்திரனின் உள் உரு வெளிப்பாட்டைப் பிரித்து அறிந்து அவருடைய கதை மாந்தரின் போக்குக்கும் வளர்ச்சிக்கும் உரிய அடிப்படைக் காரணத்தைக் கணக்கிட்டுக் கொண்டதாகத் தீர்மானமாகச் சொல்ல முடியா விட்டாலும் இது ஒரு முன் முயற்சி என்ற அளவில் அமைகிறது என நம்பலாம்.

**சி. ஆர் ரவீந்திரன்:**

எழுபது தமிழில் உருவான சிறுகதைப் படைப்பாளர் களில் குறிப்பிடத்தக்கவர். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த இவர் கோயமுத்தூர்காரர், மலையாள மொழியைச் சுயமாகக்

கற்று நிறைய மொழி பெயர்ப்புக்களைச் செய்தவர் 'வானம்பாடி' கவிதை இயக்கத்தினரில் ஒருவர். அங்குத்தாய் என்ற புதினம் இவரால் படைக்கப்பட்டுள்ளது 'ரிவோல்ட்' இவருடைய முதல் சிறுகதை தொகுப்பு, பெங்களூர் காவ்யா வெளியீடாக 1988ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இது வெளிவந்துள்ளது. இதில் பத்துச் சிறுகதைகள் உள்ளன. வித்தியாசமான இலக்கியப் படைப்புக்களை உருவாக்கித் தமிழ்மொழியின் வளத்தை உலகுக்குஉணர்த்தவேண்டு மென்ற தாகத்தை உள்ளடக்கியது. இவரது எழுத்துக்கள் சமுதாயத் தின் பூரண சுபிட்சத்திற்கு ஒரு உந்துதலாக அமைய வேண்டும் என்ற கோட்பாடு இவரது கதைகளில் தெரியும். இவருடைய கதை கள் இவருக்கோ நமக்கோ அந்நியப்பட்ட செய்திகளை உள்ளடக் கியதல்ல ஒவ்வொரு சிறுகதையிலும் இவரை ஏதாவது ஒரு வடிவில் சிறு அம்சமாகவேனும் காண முடிகிறது அதனால்தான் இச்சிறுகதைத் தொகுதியைப் படிக்கும்போது படைப்பாளனின் உள்உரு வெளிப்பாட்டைக் காண முயல்வோம் என ஆய்ந்தேன். படைப்பாளியாகத் திகழும் ஓர் இளைஞனுக்குள் ஒரு சமூக மனிதன் 1980களில் எவ்வெவ்வாறு இயங்குகிறான் என்பதையும் சமூகம், சூழல் போன்ற புறநிலைகளும், தோழமை உணர்வு, மனித நேயம், கல்வி போன்ற அகநிலைகளும் எவ்வெவ்வாறு அவனை இயக்குகின்றன என்பதையும் புரிந்து கொள்ள இவ் வாய்வு பயன்படும். (படைப்பாளிக்குள் ஒரு தனி அங்கமாகச் சமூக மனிதன் ஒருவன் இயங்குகிறான் என்று துணிந்து கூறலாம்,

கலகம்: உள்உரு:

சராசரியான ஓர் இளைஞன் வேலை இல்லாமல் அலைவதை யும் அவனுக்கு வேலை கிடைக்காமல் போனதற்குரிய அனுபவங் களையும் ரிவோல்ட் என்ற சிறுகதையில் படைத்தளிக்கிறார். வேலை கிடைக்கவேண்டும் என்பதற்குரிய முயற்சிகளையோ தீர்வையோ ஆசிரியர் படைத்திருந்தால் வேலையில்லாப் பட்டதாரி யின் வாழ்க்கை சிறுகதையின் கருவாக அமைந்திருக்கிறது எனச் சாதராணமாகக் கூறிவிடலாம். அதில் படைப்பாளிக்குள் உள்ள ஒரு இடதுசாரிச் சிந்தனை மனிதன் இருப்பதை உணர முடியாது. ஆனால் ஒரு நேர்முகத் தேர்வுக்குச் சென்ற இளைஞன் நேர்முகத் தேர்வில் நிதானமான பதில்கூடச் சொல்லாமல் வெளியே வந்து

விடுகிறான், பிறகு உழைப்பையும், உழைப்பாளிகளையும் பார்த்து அவர்களில் ஒருவனாக இருக்காமல் படித்துப் பாழாகிவிட்டோமே என்று உணரும்போது அவனைப் போன்ற இளைஞர் கூட்டத்தைக் காண்பதாகவும், அவர்கள் இரயிலுக்கு வெடிகுண்டு வைத்துத் தகர்ப்பதாகவும் படைக்கிறார். இறுதியில் எதுவுமே நடக்காதது போல அவர்களையெல்லாம் விட்டுத் தண்ணீர் குடிக்க நடக்கிறான்.

இரயிலைத் தகர்த்தல் என்பது வெறும் கதை நிகழ்ச்சி. இரும்புத் தண்டவாளங்களாய் ஏழை இளைஞர்கள் கிடக்க அவர்கள் மீது ஏறி நடக்கின்ற இந்தச் சமுதாய அமைப்பைத் தகர்க்கும் செயல் செய்ய முனைய வேண்டும் என்ற ஆத்மாதான் ரிவோல்ட் சிறுகதையில், இரவீந்திரனின் உள் உரு வெளிப்பாடு எனப் புரிந்து கொள்ள வேண்டும்.

சராசரிகள் திட்டம்:

பாம்பு அடிக்க முனைந்து இளைஞர்கள் அடிக்க முடியாமல் வெறுமனே பிரிந்து செல்லுதல் கதை. சராசரியான அறிவும், திட்டமும், சராசரியான குழு முயற்சியும் உடையவர்களால் எதையும் சாதிக்க முடியாது. சமுதாயத்தில் புரட்சி என்பதும் நம்மை ஏமாற்றி வாழுகின்ற ஆளுகின்ற பாம்புக் கூட்டத்தை அடிக்கப் பயிற்சி எடுத்துக் கொண்டிருக்கின்ற தன்னைப் போன்ற உண்மையான இளைஞர்களும் அவசரப்பட்டு யாரோ சில அரைவேக்காட்டுக்காரர்கள் கூறுகிறரர்கள் என அவர்களோடு சேர்ந்து சமுதாயத் தீமைகளை அழிக்கப் புறப்பட்டால் தோல்வியில்தான் முடியும் என்ற செய்தி பாம்பு அடித்தல் என்ற உருவகமாகச் சராசரிகள் என்ற கதை படைக்கப்பட்டுள்ளது.

சராசரிகள் என்ற கதையில் படைப்பாளியின் வெளிப்பாடு வருமாறு; ஏமாற்றுகின்ற, விஷம் கக்கிக் கடித்து நம்மைச் சாகடிக்கின்ற பாம்பை அழிக்க இளைஞர்கள் நல்ல முயற்சி எடுக்க வேண்டும்; துணிந்து உழைக்க வேண்டும்; பாம்புக் கூட்டத்தை அடையாளம் கண்டு அழிக்க வேண்டும்.

படைப்பாளிக்குள் ஒரு சமூக மனிதனின் உரு வெளிப்பாடு: புரட்சி, அதற்குரிய முயற்சி, பொதுவுக்கு உழைத்தல் அத்தனையும்

தன் தனி வாழ்க்கையை நாசமாக்குகிறது. ஆகவே அந்தப் பக்கம் போகவே கூடாது என்று அவர் ஒதுங்கிக் கொள்ளுகிறார் என்பது 'இனி அந்தப் பக்கம் போற வேலையே வேண்டாம், பேசாமே, ஊட்டிலேயே படிச்சாப் போதும்' தனக்குள் சொல்லிக் கொண்டே நடந்தான்'[1] என்ற வரிகளால் புலனாகிறது.

கலக வெளிப்பாடும் வீழ்ச்சியும்:

எந்த ஒரு பிரச்சினை (activities) யில் படைப்பாளியின் உள் உரு ஈடுபட்டாலும் அதனோடு இணைந்து (Parallel) ஆக இயங்குவதில்லை எதிர்த்து கலகப் பாணியில் இயங்குகிறார். அதில் ஒரு உச்சகட்டத்தையே அடைகிறார். ஆனால் இறுதியில் வீழ்ந்து, விடுகிறார். இது தான் சி.ஆர். இரவீந்திரன் என்ற படைப்பாளிக்குள் இருந்து வெளிப்படும் சமூக மனிதன் ஒருவனின் உருவம் ஆகும்.

A ....... B ; சமூக மனிதனின் பாதை

A.........C : உள் உருவின் தோற்றம்

C.........B : உள் உரு வீழ்ச்சி

இதுதான் இரவீந்திரனின் நிறைவும் வெற்றியும் ஆகும். அந்த வெற்றிக்கு அடிப்படைக் காரணம், அவர் சமூகத்தைச் சரியாகவும், தெளிவாகவும் புரிந்து வைத்திருப்பதே ஆகும். சீரழிந்த இந்தச் சமூகத்தின் மாற்றத்தை, புணரமைப்பை விரும்புகிறார் படைப்பாளி. அதற்குரிய உடனடி வழி இந்தச் சமூகத்தின் போலியான கட்டுத் திட்டங்களும், இந்தச் சமூகம் சிலரது கையில் அடங்கிக் கிடப்பதும் அடியோடு அழிந்து ஒரு புதிய அத்தியாயமாகத் தொடங்க வேண்டும். அதற்கு இளைஞர்கள் ரிவோல்ட் ஆக வேண்டும் என உள் உரு வெளிப்பாடாகப் படைப்பில் புலப்படுகிறார். ஆனால் அது இப்போது இந்த கால கட்டத்தில் உடனடியான சாத்தியப் பாடல்ல என்று உணரும்போது (realise) வீழ்ந்து விடுகிறார்.

---

1. இரவீந்திரன். சி. ஆர். ரிவோல்ட் பக். 48.

முடிவுரை:

சி, ஆர் இரவீந்திரனுடைய சிறுகதைத் தொகுதி புலப்படுத்தும். அவருடைய உள் உரு வெளிப்பாடு மூலம் சமூகத்திற்கு அவர் கொடுக்கும் செய்தி (Message) வருமாறு:

1, புரட்சியும் கலகமும் வேண்டும்.

2. இளைஞர்கள் சரியான திட்டம் மற்றும் உண்மையான உழைப்பு மூலம் புரட்சியைக் கொண்டு வரவேண்டும்.

3, இன்றைய காலகட்டத்தில் உடனடி நிகழ்வாக அது முடியாது.

4. சமுதாயத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு சத்தியத்தைத் தேடவேண்டும்.[2]

5. சமுதாயம் விதித்துள்ள சில ஒழுக்க நியதிகளை யாரும் பின்பற்ற வேண்டும்,[3] சம்பந்தப்பட்டவர் தேவையை உணர்ந்து அதற்கேற்ப மீறவும் செய்யலாம்[4].

---

2. இரவீந்திரன், சி.ஆர். ரிவோல்ட், (நவநீதா விம்முகிறாள்) பக். 77–86

3. இரவீந்திரன், சி.ஆர். ரிவோல்ட், (சிலிர்ப்புகள்) பக். 87–104.

4. இரவீந்திரன், சி.ஆர். ரிவோல்ட், (உறுத்தல்) பக். 105–115

# மலராத மொட்டுக்கள்

இராம. மணிகண்டன்
அழகப்பா பல்கலைக்கழகம் காரைக்குடி

“அடடே—! மூடிவெச்சிருந்த கோழியத் தொறந்து விட்டுட் டானே! எலே! கந்தா! தொறந்து விட்டியில. போ, போயி வெரட்டிப் புடி. மருமகப் புள்ள வத்திருக்கே விருந்துக்கு ஆச்சேன்னு மூடிவெச்சிருந்தா தொறந்து விட்டுட்டியே!’’

அம்மாபட்டிக் கவுண்டரம்மாளின் கட்டளைக்குக் கட்டுப்பட்ட வன்போல் தலையை ஆட்டிவிட்டு கோழியைத் துரத்தினான் பனிரெண்டு வயதுச் சிறுவன்.

செம்பட்டை முடிப் பறக்க, மஞ்சள் பூத்தக் கண்கள் வழியே காமாலைக் கன்னங்களில் வழியும் நீரை ஒல்லியானக் கைகளால் துடைத்துக் கொண்டும், வற்றுவதும் வீங்குவதுமாய் இருந்த வயிற்றைத் தூக்கிக் கொண்டும் அவனது குச்சிக்கால்கள் கோழி யைத் துரத்திப்பிடிக்க முயற்சித்தன.

கோழிக்கு இருக்கும் உயிரோட்டம்கூட அவனுக்கு இல்லை. இரவெல்லாம் பருத்திக்காட்டுக் காவலருக்குத் துணைக்குப் போனால் ஒரு டம்பளர் கட்டாங்காப்பி பகலெல்லாம் வீட்டிலும் பண்ணையிலும் வேலை செய்தால் ஒருவட்டி நிறைய கம்பங்கூழ்- அவனது அன்றாட வேலையும் கூலியும் அவ்வளவுதான், நாற் பதுக்கு உரிய வேலைஇந்த பனிரெண்டிடம் திணிக்கப்பட்டிருந்தது. எதிர்கால இந்தியாவின் ஆரோக்கியம் கந்தன் என்பதால்—?

ஓடியாடி அசந்து கல்லிடுக்கில் நுழைந்தது கோழி. எப்படி யும் பிடித்துவிடலாம் என்ற எண்ணத்தில் ஊர்ந்து ஊர்ந்து சென்றான். அதற்குள் —

"கந்தா! மாப்ள கவுண்ட்ரு சவரம் பண்ணனுமுன்றாரு போயி அம்பட்டையன வரச் சொல்லிட்டுவா. அப்புறமா வந்து கோழியைப் புடி; இப்பச் சீக்கிரமாப் போ"

பிறந்த வீடு வந்திருக்கும் பவானியின் வார்த்தைக்கு அங்கு மறுப்பே இல்லை என்பது அவனுக்கு நன்கு தெரியும். ஓடினான். சவரம் செய்பவனிடம் சொல்லிவிட்டு மூச்சிறைக்க வந்தவன் கோழியைப் பிடிக்கத் துணிந்தான்,

மேற்கூரையில் நின்ற சேவலைப் பிடிக்கப்போய் அங்கிருந்து சரிந்து விழுந்தான். கிணற்றடியில் தாவிப் பிடிக்கப்போய் தட்டுப் பாறையில் தலையை முட்டிக்கொண்டான். சோளப்போரின் வலுக்கலில் விடாமல் ஏறியவன், குத்திட்டு நின்ற சோளத்தட்டின் ஈற்றுக்களால் காயம்பட்டான்.

கந்தனின் செயல் கவுண்டரம்மாளின் பேத்திக்கு வேடிக்கையாக இருந்தது. கைகொட்டி சிரித்தாள் பேத்தி.

கோழியைப் பிடித்துவிட்டால் இந்த விளையாட்டு நின்றுவிடுமே என்று வருந்திய அந்தப் பிஞ்சு ;உள்ளம் கோழி அசந்து நின்றால் உடனே கையில் கிடைக்கும் பொருளை எடுத்து வீசி துரத்திவிட்டுக் கொண்டிருந்தது. கந்தனின் வேதனை பேத்திக்கு ஆனந்தமாக இருந்தது.

மாப்பிள்ளைக்கு விருந்து சமைக்கும் அவசரத்தில் இருந்த கவுண்டரம்மாள் "டேய் இன்னுமாப் புடிக்கல" என்று ஆத்திரப் பட்டாள்,

கவுண்டரம்மாளின் கண்டிப்பைக் கேட்டு அவனது சோர்வெல்லாம் எங்கோ போய்விட்டதை உணர்ந்தான். பஞ்சு நீக்கி குவித்து வைத்திருந்த பருத்திக்காய் ஒட்டின் மீது நின்றிருந்த கோழியை புதுத்தெம்புடன் பாய்ந்து பிடித்தான். பருத்தி ஒட்டின் கூரிய முனைகள் உடலெல்லாம் குத்தியும் பிடியை விடாமல் வெற்றி வீரனாக கோழியைத் தூக்கி வந்தான்.

அவன் உடலில் ஏற்பட்ட காயத்தால் — பசி மயக்கத்தால் — போய்க் கொண்டிருந்த — அவனது உயிரைத் தக்கவைக்க, அன்று அவனுக்குத் தரவேண்டிய கூலியை —ஒருவட்டிக் கூழை — கொடுத்தாலாவது தேவலை என்று எண்ணினான்.

மற்றொரு வேலையாள் கோழியின் தலையை அறுத்தான். இரத்தம் சொட்டச் சொட்ட கந்தனிடம் தூக்கிக் கொடுத்து ரோமத்தைப் பறித்து வரப் பணித்தாள் கவுண்டரம்மாள். அவனால் முடியவும் இல்லை; மறுக்க முடியவும் இல்லை.

குப்பைக்குத் தூக்கிப்போய் ரோமத்தைப் பறித்துக்கொண்டு இருக்கும்போது உயிர்மூச்சு விட்டுக்கொண்டிருந்தான். வழக்கமாய் கிடைக்கும் கம்பங்கூழுடன் மிச்சம் மீதி கோழிக்குழம்பும் தனக்கு இன்று கிடைக்கும் என்று எண்ணும்போது அவனது வரட்டுநாவில் சிறிது எச்சில் ஊறி மறைந்தது. அந்த நப்பாசையுடன் பறித்து முடித்தக் கோழியை கவுண்டரம்மாளிடம் கொடுத்தான்,

கோழியை வாங்கிக்கொண்டக் கையுடன் வாழை இலை நறுக்கிவரச் சொன்னாள். கொல்லைப்பக்கம் பசுமையாய் உயர்ந்திருந்தது வாழைமரம்.

ஏதோ ஒரு தெம்பில் இலையை நறுக்கியவனுக்கு சோர்வு வரவே பளபளக்கும் வாழைத்தண்டு ஒன்றின் மீது சாய்ந்தான். அவனை அறியாமலேயே வாழைத்தண்டின் குளிர்ச்சியை அவனது நாக்கு நக்கியது. அது அவனது உயிர்மூச்சை நீட்டிக்க உதவியது போல் இருந்தது.

விருந்து முடிந்தவுடன் தனக்குக் கூழுடன் கோழிச்சாறும் கிடைக்கும் என்று மகிழ்ந்தவனுக்கு ஒரு பேரதிர்ச்சி காத்துக் கொண்டிருந்தது.

இலையை வாங்கிக் கொண்ட கவுண்டரம்மாள் “ஊருல இருந்து விருந்தாளிங்க வந்ததால உனக்கு கூழு வெக்க மறந்துட்டே; இன்னிக்கு ஒரு நாளக்கு மட்டு பொருத்துக்கோடாப்பா” என்று தனது குற்றத்தை அதிகாரத்தில் மறைத்துவிட்டுப் போனாள்.

யாருமில்லாத அனாதை — கவுண்டரின் பண்ணையே உலகம் என்று இருந்தவன் — உயிர் மூச்சு விட்டுக் கொண்டிருந்தவனுக்கு இப்போது மௌனத்தை மட்டுமே மொழியாக்க முடிந்தது.

தள்ளாடிச் சென்றவன், குப்பை மேட்டின் மீது பறித்து போடப் பட்ட கோழியின் இறகுகள் மீது பரந்தான்.

விருந்து முடிந்து எச்சில் இலைகளை சுருட்டிக் கொண்டு வந்த கவுண்டரம்மாள் அதைக் குப்பையில் போடக் கந்தனை அழைத்தாள். பதில் இல்லாததால் ஆத்திரத்துடன் குப்பை மேட்டிற்கு வந்தாள்.

கோழி இறகுகளின் முனைகளில் உறைந்திருக்கும் இரத் தத்தை மொய்க்கும் ஈக்கள், கந்தனின் மூக்கிலும் வாயிலும் மொய்த்துக் கொண்டிருப்பதை அவளது கண்கள் காணத் தவற வில்லை.

மலர்ந்து மணம் வீச வேண்டிய மொட்டு ஒன்று மலராமலேயே மடிந்துக் கிடக்கிறது. ஒன்றா? இதுபோல் எத்தனை எத்தனை மொட்டுக்கள் இப்பாரதச் சோலையில்——?

# ஜாதகம் பொருந்தியாச்சு

முருகு. வைரம்
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
கொடைக்கானல்.

சோதிடர் கிச்சு வத்சலாவிற்கு ஒன்றுவிட்ட உறவுக்காரர். வத்சலாவிற்கு வரும் வரன்களுக்கு எல்லாம் ஏதோ ஒரு விதத்தில் பொருத்தம் இல்லை என்றார். வத்சலா வீட்டாரும் இவர் சோதிடத்தை நம்பி எத்தனையோ திருமண ஒப்பந்தங்களை ஒதுக்கி விட்டனர்.

வரன் வீட்டாரின் வழக்கம் போல வரதன் வீட்டாரும் வத்சலாவைப் பெண் பார்க்க வந்தனர். சடங்கு சம்பிரதாயங்கள் நிறைவேற்றினர். இறுதிக் கட்டமாக ஜாதகப் பொருத்தம் காண இரு வீட்டாரும் கிச்சுவை நாடினர். வத்சலா, வீட்டில் இவர் பெயர் பொருத்தம் கூட நமக்குப் பொருந்துவதாக இருக்கிறது. இதற்கு இறைவன் என்னவழி விடுகின்றானோ என எண்ணிக் கொண்டிருந்தாள்.

இருவீட்டாரிடமும் இருந்து கிச்சு ஜாதகங்களை வாங்கினார். அடடா! இந்த ஜாதகத்திற்கு வசிகப் பொருத்தமே இல்லை. இராசிப் பொருத்தம் இரச்சுப் பொருத்தம் (மாங்கல்யப்பொருத்தம்) எனப் பத்துப் பொருத்தத்தை வரிசையாக அடுக்கிஉதட்டைப் பிதுக்கினார். வரதனுக்கு வாடியது முகம். வத்சலாவின் வட்டமிடும் கருவிழியும் வண்ண முகமும் அவன் முன் நின்றாடியது. எப்படி பெரியோரை எதிர்ப்பது, என ஏங்கினான். எல்லோரும் எழுந்து அவரவர் பாதையைப் பார்த்தனர்.

வத்சலாவிற்கு எந்தச் செய்தியும் அறிவிக்கப்படவில்லை. வீட்டாரின் அமைதியிலிருந்து அவளே செய்தியை ஒரு வகையில் ஊகம் செய்து கொண்டாள். இல்லை, இனி பொறுப்பது தவறு. மூடர்கள் கூட்டத்தில் மூழ்கிக் கிடந்தால் நானும் என் உணர்வுகளும் முடமாகும் எனப் பொங்கி எழுந்தாள், புறப்பட்டாள் கிச்சுவிடம். கிச்சு மாமா நேற்று வந்த வரன் விஷயம் என்ன ஆயிற்று என்றாள்.

கிச்சுவின் விழிகள் விழப்பார்த்தன. எப்படியோ அவரின் மூக்குக் கண்ணாடியின் முயற்சியில் தடைப்பட்டது. நான் கேட்பது உங்களுக்கு புரிகிறதா? யாரது வத்சலாவா? ஆம் வத்சலாதான். என்ன வத்சலா நீ, நீயா! வரன் சமாச்சாரம் பற்றிப் பேச வந்திருக்கிறாயா?

ஏன் நான் பேசக்கூடாதா? எனக்காக நான் பேசாமல் யார் பேசுவது. கல்யாணம் வேண்டாம் என்றால் அதிக பிரசங்கித்தனமாகப் பேசாதே என்கிறார்கள். வருகின்ற வரனுக்கெல்லாம் உங்களின் சோதிடப்படிப் பொருத்தம் இல்லாமல் போகிறது. எனக்கோ பிறந்த ஜாதகம் இல்லை. ருதுவான ஜாதகம் பொய்யானது. இதில் எந்த ஜாதகத்திற்கு நீங்கள் பொருத்தம் பார்த்துச் சொல்லுகிறீர்கள் என்றாள். திருமணப் பொருத்தத்திற்கு மனப் பொருத்தம் தேவையா? தேவையில்லையா?

மனப்பொருத்தம் மிகமிகத் தேவையானதுதான். பின்னயேன் அது பற்றி யாரும் பேசுவதேயில்லை. ஜாதகம் பார்ப்பதையும், ஜோசியம் பார்ப்பதையும் பெருசா வச்சிக்கிட்டு வருகின்ற கூட்டத்திற்கு முன்னால் கொலுபொம்மையாய் என்னை அலங்காரம் செய்யச் சொல்லி நிக்க வைத்து கேவலப்படுத்துவது பிடிக்கவில்லை.

நேற்று வந்த வரனுக்காக ஜாதகப்பொருத்தத்தை நானே பார்க்கிறேன். என்னடா? ஒரு பொன்னு இப்படி பேசுராளேன்னு நீங்க நினைக்கலாம். நான் எனக்காக இதனை செய்யவில்லை. பொய்யான ஜாதகத்திற்குப் பொருத்தம் பார்க்கும் முட்டாள் தனத்தை வெளிப்படுத்தவே இந்த வேலையில் இறங்குகிறேன்.

எங்கே மாமா ஜோசியப் புத்தகங்கள். இப்படிக் கொடுங்க நான் பார்க்கிறேன். நான் கேட்கும் சந்தேகத்திற்கு மட்டும் நீங்கள் பதில் சொல்லுங்கள் எனக்கூறி குடும்ப ஜோதிடம், ஆர்காட் ஜோதிடம் ஆகிய இரண்டு மூன்று நூல்களுடன் அருகே இருந்த அறைக்குள் நுழைந்தாள். கிச்சு பெண் பிள்ளைகளைப் படிக்க வைத்தாலே இப்படித்தான் அலையுங்க. என்ன தைரியம் இவளே ஜோசியம் பார்த்து கல்யாணம் கட்டப் போராளாம். எம்,எஸ்ஸி. படிச்சவ அப்படித்தான் இருப்பாள் என எண்ணமிட்டார், ஜாதகமே இன்றி பொருத்தம் பார்க்க ஆரம்பித்தாள். இரண்டு மணி நேரமாக ஜோதிட நூல்களைத் தரவாகப் படித்தாள். பெயர்களை மட்டும் வைத்துக் கொண்டு திருமணத்திற்கு மிகத் தேவையான பொருத்தமான வசிகப் பொருத்தம், ராசிப் பொருத்தம், இரச்சுப் பொருத்தம், இவற்றினைப் பார்த்து முடித்து விட்டு கிச்சுவிடம் வந்தாள். கிச்சு அப்போதுதான் வந்திருந்த ஒரு திருமண கோஷ்டிக்கு ஜாதகம் பார்த்து சொல்லிவிட்டு திரும்பினார்.

ஏன் மாமா ஜோசிய புத்தகத்திலே முதல் பக்கத்தில் முதல் வரியில் என்ன போட்டிருக்கு. திருமணத்திற்கு மிக அவசியமானது மனப்பொருத்தமே... இதை விட்டுவிட்டு நீங்க பத்துப் பொருத்தம் இருபது பொருத்தம் என்று ஜாதகம் பார்க்கிறேன் என்று பார்த்து எத்தனை கல்யாணத்திற்கு தடை விடை கொடுத்தீர்களோ எங்களது பெயர் பொருத்தத்தைப் பார்த்தால் எனக்கு மனப்பூர் வமான திருப்திதான். ஏனென்றால் உங்கள் ஜோதிடப் புத்தகங் கள், பஞ்சாங்கம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலனைக் கூறுகிறது. பொருத்தங்களையும் வெவ்வேறு விதமாகப் பிரிக்கின்றன. இப்படி இருக்கையில் எதை நம்புவது. ஆனால் நான் முடிவு கட்டி விட்டேன். எல்லா சோதிடப் புத்தகங்களிலும் ஒற்றுமையாகக் குறிப்பிடப்பட்டு இருப்பது மணவாழ்விற்கு மிகவும் மகிழ்வைத் தருவது மனப் பொருத்தமே. அது இல்லாவிட்டால் வாழ்க்கை மிகவும் துன்பமாகி விடும். பொருத்தம் சரியாக இருந்து முடித்த எத்தனை திருமணங் கள் பின்பு மனம் ஒத்துப் போகாமல் முறிவு ஏற்பட்டு வேதனை தந்து இருக்கிறது. இதை நாம் அன்றாட வாழ்வில் கண்கூடாகப் பார்க்கிறோம். இல்லையா? என்று கிச்சுவிடம் மிகவும் காரமாகவே கேட்டாள். உடன் கிச்சு தன் நிலை உணர்ந்து, உண்மை புரிந்து

தானே நேரில் நின்று இந்த திருமணத்தை நடத்துவதாக உறுதி கூறி வத்சலாவைப் பார்த்து வத்சலா நீ கூறியது எல்லாம் உண்மையே. உனக்கும் நேற்று வந்த வரனுக்கும் "ஜாதகம் பொருந்தியாச்சு" என்று கூறி வத்சலா வீட்டை நோக்கி நடந்தார்.

# தகளம்

வ. முஹம்மது யூனுஸ்
பாரதிதாசன் பல்கலைக்கழகம் திருச்சி

[மாலை நேரம்! ஏதோ ஒரு வீடு! இரண்டே அறைகள். அறைகள் எதிரெதிரே இருக்க வேண்டும்! இடைவெளியில், "சோப-கம்-பெட்" அமரக் கூடிய நிலையில் இருக்க வேண்டும். சுவற்றில் சில மிதுனச் சித்திரங்கள் சட்டமிடப்பட்டு; அறைகளில் வெளிச்சம் கூடாது; இருள் சூழ்ந்திருக்க வேண்டும். சோபா, சித்திரங்களில் ஒளி; இடது பக்க அறையில் ஓர் ஆணின் குரல்- வலது பக்க அறையில் ஓர் பெண் குரல் - குரலுக்கும் வயதுக்கும் வரையறை இல்லை; ஆண் பெண் இருவருக்கும் பெயர் கிடையாது; காட்சி ஒன்று, முடியும் வரை உருவத்திற்கும் அவசியமில்லை. ஆண் குரல் ஒலிக்கும் போது உட்புறம் பச்சை விளக்கும் பெண் குரல் ஒலிக்கும் போது வலது பக்கம் சிகப்பு விளக்கும் ஒளி வீச வேண்டும்!]

காட்சி — ஒன்று

(காட்சியின் ஆரம்பத்தில் 'பச்சை விளக்கு' எரிய வேண்டும்)

ஆண்: ——(குரல் தெளிவில்லாமல், குழப்பமாக ஒலிக்க வேண்டும்; அவையினருக்கு புரியக்கூடாது) சிறிது நேர அமைதிக்குப்பின் தெளிவாக—.

ஆண்: "ஏய் — உன்னைத்தான்!"

பெண்: "என்ன? ...ஏன்? எதற்கு?

ஆண்: "ம்... ம்!"

பெண்: "யாரை .. யாரைக் கொல்லப் போகிறாய்!"

ஆண்: (பதட்டத்துடன்) "என்ன — என்ன செய்கிறாய்!"

பெண்: —......—...—... (பதிலில்லை)

ஆண்: "ம்கூம்... ம்... ம்!"

பெண்: —...—— (பதிலில்லை)

[பதிலில்லாத நிலையில் விளக்கு ஒருமுறை கண்சிமிட்டி அணைந்து விடவேண்டும்; சிறிது நேரம் அமைதி; குரல் எதுவும் ஒலிக்கக் கூடாது! பச்சை, சிகப்பு எரியக் கூடாது; சோபாவில் மட்டும் இலேசாக இருள் படிய வேண்டும்! சித்திரங்களில் வெளிச்சம் அதிகரிக்கிறது! திடீரென்று பெண் குரல் ஒலிக்க வேண்டும்! பெண்குரல் ஒலிக்கும்போது அதிகரித்த ஒளி சாதாரண மாகி, சோபாவில் 'விச' வேண்டும்.)

பெண்: " அதன் விரல்களை வெட்டி..."

ஆண்: "வெட்டி விட்டாயா !"

பெண்: "ஆமாம்! இல்லையில்லை! ஆமாம்!"

ஆண்: (அதிர்ச்சியுடன்) "என்ன..."

பெண்: "விரல்களை வெட்டி வேக வைக்கிறேன்!"

ஆண்: "சரி"

பெண்; "சரி... சரி"!

ஆண்: "கொதிக்கிறதா—"

பெண்: "கொதிக்கலாம்"!

ஆண்: "பார்த்தாயா"?

பெண்: "பார்க்கலாம்!"

ஆண்: "அது... அடங்கியதா—?

பெண்: "அடங்கியது"!

ஆண்: "ம்...ம்!"

பெண்: "அடங்க—வில்லை!

ஆண்; "எதிர்த்ததா—"

பெண்; "ம்—எதிர்த்தது!"

ஆண் : "ம்...ம்!"

பெண்: "எதிர்க்கவில்லை..."

ஆண் : "ஏன்?"

பெண்: "உன்னை வெட்டினால் வெறுக்கவா செய்வாய்!"

ஆண் : "க்கும்... மாட்டடன்"

பெண்: "ம்...ம்ம்!

ஆண் : "மாட்டேன்—மாட்டேன்"

[ இப்போது இரு பக்கமும் பச்சை, சிகப்பு விளக்குகள் ஒருசேர எரிய வேண்டும்; சோபாவும் சித்திரங்களும் இருளில்! நான்கு முறை தொடர்ந்து முனகல் சத்தம், ஆண் குரலுடன் பெண் குரலும் இணைந்து ஒலிக்கவேண்டும்! சிறிது அமைதி. அதன்பின் முதலில் சோபாவில் ஒளி பரவி பெண் குரல் ஒலிக்கத் துவங்கியதும் சித்திரங்களில் ஒளி பரவவேண்டும்!]

ஆண் : "யாரது!"

பெண்: "...(பதிலில்லை)

ஆண் : "யார்! கடவுளா...!"

பெண்: "இல்லை"

ஆண் : "இல்லை"

பெண்: "இருக்க முடியாது!"

ஆண் : ஏன்?"

பெண்: "நான் இங்குதான் இருக்கிறேன்!"

[மீண்டும் நான்கு முறை முனகல் சப்தம்! பின் குரல் ஒலிக்கத் தொடங்கும்போது, சப்தம் இலேசாகித் தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருக்க வேண்டும்; இரண்டு பக்கங்களிலிருந்தும் ஒலிக்கவேண்டும்!]

ஆண் : "அது...இருக்கும்]"

பெண்: "இல்லை—முடியாது!"

ஆண் : "அதுவாகத்தான் இருக்கும்"

பெண்: "இருக்க...முடி... யா...து!"

ஆண் : "ஏன்?"

பெண்: நான் இங்குதானே இருக்கிறேன்!"

(முனகல் சப்தம் நின்றுவிடவேண்டும்)

ஆண்: " 'அது' ... செத்து விட்டது!"
பெண்: ... _ (பதில் இல்லை)

ஆண்: "ஆம் செத்துத்தான் 'விட்டது!"
பெண்: ..... (பதில் இல்லை)
ஆண்: "பார்... பார்!"
பெண்: "எப்போது!"
ஆண்: "இன்று... இதோ... இப்போது... இப்போதே!"

—திரை—

காட்சி — இரண்டு

[இரவு நேரம் — அதே வீடு; காட்சியின் துவக்கத்தில் சித்திரங் களில் இருள்! சோபாவில் மட்டும் வெளிச்சம் இருக்க வேண்டும்! இடது பக்க அறையிலிருந்து தலையைக் குனிந்தபடி ஆண் உருவம் வெளிப்பட வேண்டும். உருவத்தின் மீது அரை ஒளி வீச வேண் டும்! பிரதானமாக முகத்தில் ஒரு பாதி இருண்டிருக்க வேண்டும்; பச்சை விளக்கைப் பயன்படுத்தலாம்!

ஆண் உருவம் சோபாவில் வந்து அமர வேண்டும்; சாயக் கூடாது; பெண் உருவம் தலை நிமிர்ந்து இயல்பாக வெளிவர வேண்டும்! சுவற்றில் உள்ள சித்திரங்களில் ஒளி பரவ... அவள் அச்சித்திரங்களைப் பார்க்க வேண்டும். ஒளி ஒவ்வொரு சித்திர மாகத் தாவ வேண்டும்! அவளது தலை, அதற்கு ஏற்றாற்போல மெல்ல... மிக மெல்ல... திரும்ப வேண்டும்! பெண்ணின் நிழல் அமர்ந்துள்ள ஆண் மீது (அவன் மீது) விழ வேண்டும்! விழுந்த தும் ஆண் நிமிர வேண்டும்! நிமிர்ந்து... சோபாவில் சாய சோபா விரிந்து படுக்கையாக வேண்டும்! கால்கள் தரையைத் தொட, உடல்மட்டும் சோபாவில் கிடக்க வேண்டும்!)

அவன்: "முடியாது—"

அவள்: "அது...அது—தான்!"

அவன்: "அது? ஆம்! அதுதான்!"

அவள்: —......(பதிலில்லை)

(அவனை நோக்கி வருகிறாள்—மெல்ல—)

ஆண்: "ஏய்—நில்?"

அவள்: "எழுந்து—கொல்"!

அவன்: "முடி...யாது! முடியாது!"

அவள்: "சரி"

அவன்: "போ! போய்விடு!"

அவள்: "உயிருட்டு!

[இப்போது ஆண் படுத்த நிலையில் சோபாவில் கையூன்றித் தலை உயர்த்தி பார்க்க, பெண்ணின் தலை சித்திரங்களையே நோக்கியிருக்கவேண்டும்!

பெண் முகத்தில் பச்லச ஒளி; ஆண் முகத்தில் சிகப்பு ஒளி வீச வேண்டும்.]

அவள்; "உயிருட்டிச் செத்துப்போ!"

அவன்: "மாட்டேன்!...மாட்டேன்!"

அவள்: (சற்று உரத்த குரலில்) — "செத்துப் போயேன்..."

அவன்: "செத்து..."

அவள்: "சாகடி—"

அவன்: "அடித்து—"!

அவள்: உயிருட்டு!"

அவன்: செத்தால்—சாகடிப்பேன்!"

அவள்: "அ...அது...அது!"

அவன்: "—(பதிலில்லை)

அவள்: அது—அது...நீ...யா?!"

[சித்திரங்களில் ஒளி அதிகரித்து — சோபா இருளாக வேண்டும்! உருவங்களின் மீது ஒளி நீங்கி, இடமிருந்து பச்சை ஒளியும் — வலமிருந்து சிகப்பு ஒளியும் மெல்ல..., மெல்ல... நகர்ந்து — சோபா அருகில் மறைந்து விட வேண்டும்]

(குரல்கள் மட்டும் ஒலிக்க வேண்டும்)

அவன்: "தொடாதே!"

அவள்: "தொடு!"

அவன்: "தொடதே!"

அவள்: "வா! — வா!"

அவன்: "தொடமாட்டேன்!"

அவள்: 'வா!" (சற்று உரத்தக் குரலில்)!

அவன்: "தொடு! தொட்டுவிடு!"

அவள்: "ஆ... செத்து — சாகடிப்போம்"!

(மௌனம்)

—திரை—

# ஆசை சொன்ன அர்த்தங்கள்

ஆறு. அழகப்பன்

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

கூடத்தில் பெண்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. பீறிட்ட ஆனந்தம் அங்குள்ளவர்களிடம் வெளிப்பட்டது. பட்டிக்காட்டானை விட பட்டணத்துக்காரன் யானையைப் பார்ப்பது போல உள்ளே நுழையும் அக்'கன்னிப் பெண்ணை அனைவரும் கண் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். அதோ – அவள் — அந்தக் கன்னி அந்த வீட்டிற்குள் நுழைகிறாள். மாநிறம்தான். ஆனாலும் களையுள்ளவளாக இருந்தாள். எண்ணை காணாத தலை. ஆனால் விளம்பரத்திற்கு வீசி எறியப்பட்டது போன்ற அடர்த்தியான சுருண்ட கூந்தல். மாவடு பிளந்தது போன்ற கண்கள். வேடன் பிடித்ததும் மயங்கும் மானின் மருட்சி நிறைந்த பார்வை. பெருமூச்சு விடுவதால் ஏறி இறங்கும் விம்மிய மார்பகம். கவிஞர்களுக்குப் பிடித்தமான வில்லைப்போன்ற இதழ்கள். பிடிபட்ட புறா இறகுகளை அடித்துக் கொள்வது போல படபடக்கும் மனத்துடன் அவ்வீட்டிற்குள் நுழைகிறாள்.

வந்த புதியவள் கூடத்தின் நடுவில் நிறுத்தப்பட்டாள். அங்குள்ள மூத்தவள் அவள் அருகில் வந்தாள். வந்த தோரணை அவள்தான் அந்த வீட்டிற்கு உரியவள் என்பதனை நிருபித்தது, புதியவளின் இரு தோள்களையும் பிடித்து தன் முகத்திற்கு நேராகப் பார்த்தாள். அவளது முகத்தை உயரச் சிறிது தன் முரட்டுக் கரங்களால் தூக்கினாள். பூரணச் சந்திரன் போல் அவள் நெற்றியில் குங்குமம் பளிச்சிட்டது. தன் முரட்டுக் கரங்களால் அவள் நெற்றியிலுள்ள குங்குமத்தை அழித்தாள். நெற்றி சந்திரன் அற்ற வானம் போல ஆயிற்று. குங்குமத்தை அழித்தவுடன் சுற்றி

நின்ற பெண்கள் அனைவரும் குபீரெனச் சிரித்தனர். வாய்விட்டு சிலர் கத்தினர். அழிக்கப்பட்ட குங்குமம் இல்லாத நெற்றியைப் பார்க்க அவ்வளவு நெருக்கடி!

முதியவள் மீண்டும் அப்புதியவளைத் தன் அகண்ட விழிகளால் அடிமுதல் முடிவரை பார்த்தாள். வட்டமிடும் கழுகுக் கண்களென அவளது கண்கள் இருந்தன. பாதாதி கேசத்தைப் புலவர்கள் நோக்குவது போல நோக்கினாள். மருதாணி மறைத்து கொண்டிருந்த விரல்கள்! கொலுசுகளையேக் காணாத கால்கள்! பெண்மைக்கு அழகூட்டும் சிற்றிடை! காதுகளில் சமீபத்தில் திருவிழாவில் வாங்கிப் போடப்பட்ட ஐந்து ரூபாயைத் தாண்டாத தோடுகள்! கையில் ஒரு பிளாஸ்டிக் மோதிரம். கழுத்தில் எந்தத் திருடனும் விரும்பாத ஒரு சங்கிலி!

முதியவளின் பார்வை சங்கிலியில் விழுந்தது. ஒரே இழு! அறுத்து விட்டாள். சுற்றியுள்ளவர்களுக்கு சங்கிலியில் தொங்கிய டாலரைக் காட்டினாள். பிறகு சன்னல் வழியே அதனை, தூக்கி எறிந்தாள். முட்டை ஓடுகளும், எலும்புத் துண்டுகளும் கோழி இறக்கைகளும் குவித்து வைக்கப்பட்ட குப்பை மேட்டில் நடுநாயகமாக சங்கிலி விழுந்தது. அந்த இரண்டு ரூபாய் சங்கிலியில் நாலாணாவிற்கு வாங்கி மாட்டப்பட்ட மயில்மீது வேலுடன் நிற்கும் முருகன் டாலர் இருந்தது. வெய்யலில் முருகன் மயில்மீது பயணம் செய்வது பளிச்செனத் தெரிந்தது.

அவளின் முரட்டுக்கரம் அவள்மேல் போட்டிருந்த தாவணியைத் தொட்டது. கையில் வந்த அந்தத் தாவணியை பந்து போல சுருட்டி ஒரு மூலையில் எறிந்தாள். நெற்றியில் குங்குமம் இல்லாமல் கழுத்தில் சங்கிலி இல்லாமல் தாவணி அற்று தவிக்கும் அவளைச் சுற்றியுள்ள பெண்கள் எட்டி எட்டிப் பார்ப்பதில் சுகம் கண்டனர். இவ்வேளையில் கடலைக் கிழித்துச் செல்லும் கத்திக் கப்பலென நடுத்தர வயதுள்ள ஒருவன் உள்ளே வந்தான். புதியவள் தோற்றத்தைப் பார்த்து ஒரு நிமிடம் விக்கிப் போனான். கையில் வைத்திருந்த கண்ணைப் பறிக்கும் வண்ணப் பூக்கள் போட்ட ஒரு சாட்டின் துணியை முதியவளிடம்

கொடுத்து 'இம், இம், சீக்கிரம்' என்று விட்டுப்பிரிய மனமில்லாமல் அவ்விடத்தை விட்டுச் சென்றான். முதியவள் தாவணியை விரித்து அவள் இடுப்பில சொருகி சுற்றியிருந்த பெண்களுக்கு பொறாமை யூட்டிய மார்பகத்தை மூடி அவள தலையில் உள்ள கூந்தலை மறைத்து முக்காடிட்டாள். இதுவரை இல்லாத ஒரு புதிய தோற் றத்திற்கு புதியவள் வந்தாள்! அத்தோற்றத்தைக் கண்டவுடனேயே சுற்றியிருந்தவர்கள் கைதட்டினர். புதியவளை அனைவரும் இப் பொழுது இனவெறிப் பற்றுடன் எட்டி எட்டிப் பார்த்தனர். முதிய வள் அவளை தன் முரட்டுக் கரங்களால் அணைத்து அனைவருக்கு முன் காட்டினாள். அவளை அணைத்தபடியே இன்றிலிருந்து இவள் பெயர் ... கூவினாள்

''சலீமா'' ... தூரத்தில் தாவணி கொடுத்தவன் கூறினான். அனைவரும் 'சலீமா, சலீமா' என்றனர். முதியவள் பக்கத்து அறையில் உள்ள கட்டிலில் சலீமாவை உட்கார வைத்தாள். போகும்பொழுது அவள் தலையில் சரிந்து கொண்டிருக்கும் முக் காட்டை சரிசெய்து ''சரியாகப் போட்டுக் கொள். முக்காடு மிக மிக முக்கியம்'' என்று கூறிச் சென்றாள். கழுத்துக்கருகில் தாவ ணியின் இரு ஓரத்தையும் பிடித்துக் கொண்டாள். புதிய பழக்கம். சுருக்குப் போட்டது போல கெட்டியாய் பிடித்துக் கொண்டாள்.

காலை பதினோறு மணி இருக்கும். சலீமாவாக கட்டிலில் உட் கார்ந்திருக்கும் முன்னாள் வாழ்க்கையின் வறுமைக் கோட்டிலிருந்த கண்ணம்மாவறுமைக் கோட்டிலிருந்து விடுபட ஒரு புதிய வாழ்க் கையை விரும்பினாள். அவள் வசித்த ஆதனூரில் திடீரென்று பலர் மதம் மாறிக் கொண்டிருந்தார்கள். புதிய மதத்திற்குச் சென்றால் பல சௌகரியங்கள் கிடைக்கும் என்று வயலிலும் வரப்பிலும் கட்டட வேலைகள் நடக்கும் பொழுதும் பலர் கூறக் கேட்டாள். புதிய மதத்திற்கு மாறினால் வெளிநாட்டுத் துணிமணிகள் கிடைக் கும், கஞ்சி கேழ்வரகு சாப்பிட வேண்டியதில்லை. உடம்பு கனக்க முழுவதும் நகைகள் போட்டுக் கொள்ளலாம்; ஆத்தங்குடிக்கல் பதித்த மாடி வீட்டில் வாழலாம் என்று கதைகதையாய் சொன் னார்கள். கண்ணம்மாவின் தந்தை நிலத்தகராறு ஒன்றில் ஒரு வரை மண்வெட்டியால் வெட்ட வேலூர் சிறையில் ஆயுட்கைதியாக இருந்து வருகிறான். தாய் மீனாட்சி அன்றாடக் கஞ்சி. அதற்

கும் இடையூறாக அவளுக்கு அடிக்கடி மூச்சுக்குத்து பிடித்துக் கொள்ளும். என்றைக்கு மூச்சுக்குத்து பிடித்துக் கொள்கிறதோ அன்றைக்கு வயிற்றில் மண் விழுந்துவிடும். கண்ணம்மா வயல் வேலைகள் கட்டட வேலைகள் வரும்பொழுது செய்வதுண்டு; வறண்ட பூமியான இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள ஆதனூரில் அப்படி ஒன்றும் பசுமைப்புரட்சி நடக்காததால் சில வேளைகளில் வேலை கிடைக்கும்.

அந்த ஊருக்கு கீற்றுக்கொட்டகை வந்ததும் தமிழ்ப் படங்களைப் பார்த்ததும் சில ஆசைகள் கண்ணம்மாவை கவ்விக் கொண்டன. படங்களில் வரும் கனவு காட்சிகளைப் போல சில காட்சிகளை கனவு கண்டாள். இப்படி எல்லாம் நாம்வாழ முடியாதா? இந்த ஆதங்கம் அவள் அடிமனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. கடைகளில் விற்கப்படும் பவுடர்களை எல்லாம் பார்க்கும்பொழுது அவளுக்கு ஆசை ஆசையாக இருக்கும். ஒருநாள் கட்டட முதலாளியின் உதவியால் திடீரென்று மதம் மாற முடிவு செய்து நேமத்தான்பட்டியில் வாழும் இஸ்லாமியர் சமுதாயத்திற்கு மாறி வந்துவிட்டாள். வந்தவளுக்குததான் நுழைந்த இடத்தில் இவ்வளவு வரவேற்பு நடந்தது. பழைய இடத்தைப் பற்றிய பழைய நினைவுகளும் புதிய இடத்தின் அதிசயங்களும் அவளை மருள வைததன. சலீமா பழைய நினைவுகளில் உருண்டு கொண்டிருக்கும்பொழுது திடீரென்று ஒலிபெருக்கி அலறியது. புரியாத ஒரு மொழியில் அவள் இதுவரைகேட்ட சினிமா இசையைப் போல் அல்லாமல் ஒரு பாட்டு ஒலி வந்தது. அவ்வொலி வந்ததும் அவளை முதியவள் கையைப் பிடித்து அழைத்தாள். ‘நீ வந்த இடத்தில் நடத்திடும் முதல் தொழுகை! வா’ என்று அழைத்துச் சென்றாள். கைகால்களைக் கழுவிக் கொள்ளச் செய்தாள். இதுவரை கிழக்கு நோக்கியே வணங்கிய அவளை மேற்கு நோக்கி நிற்கச் செய்தாள். எங்கேயாவது சாமிகள் படம் தட்டுப்படுகிறதா என்று பார்த்தாள், வீட்டில் விதவிதமான படங்களை வைத்து அலங்கரித்து வணங்கிய அவளுக்கு எதிரே ஒன்றும் இல்லை. அவள் காட்டிய திசையை நோக்கி கையெடுத்துக் கும்பிடப் போனாள். முதியவள் அவள் கைகளைப் பிடித்துக் கொண்டாள்.

“இதோபார். ஒருநாளைக்கு ஐந்துமுறை வணங்கவேண்டும்.

சூரிய உதயத்திற்கு முன்' பிறகு பகலில் மூன்று தரம். இரவு ஏழரை மணிக்குமேல். முதலில் நின்றபடி காதுகளில் கைகளை வைத்துக்கொண்டு 'அல்லாஹு அக்பர்' என்று கூறவேண்டும், பிறகு நின்றபடி கைகளை சேர்த்து வணங்க வேண்டும். பிறகு குனிந்து முட்டிக் கால்களைத் தொடவேண்டும். கடைசியாக கீழே நெற்றியும் மூக்கும் பட தரையில் விழுந்து வணங்க வேண் டும். இது ரொம்ப முக்கியம். இதோ பார் நான் செய்து காட்டு கிறேன்.' என்று கூறி செய்து காட்டினாள்.

செவ்வாயும் வெள்ளியும் அம்மன் கோவிலுக்குச் சென்ற அவ ளுக்கு ஒருநாளைக்கு ஐந்துமுறை என்றதும், வணங்கும் விதமும் மிகக் குளறுபடியாக இருந்தது- கூட நான்கைந்து பெண்களும் செய்ததால் ஏதோ ஒரு வகையில் தப்பித்துக் கொண்டாள்,

அவள் மனதிற்குள் பலவிதமான போராட்டங்கள் நினைவுகள் படம் போல ஓடிக் கொண்டிருந்தன. பக்கத்து அறையில் அக்தாவும் கணவன் சப்ருல்லாகானும் படுத்திருக்கிறார்கள். அவர்களும் இன்னும் தூங்கவில்லை போலும். பேச்சுக் குரல் கேட்கிறதே! சப்ருல்லாகான் அக்தாவுடன் கொஞ்சுவதும் சிரிப்பதும் அவள்காதில் விழுந்தன. கிழங்கள் என்ன வேண்டிக்கிடக்கிறது. மணி ஐந்து ஆகப்போகிறது. இவ்வளவு சேட்டைகளா என்று முணுமுணித்துக் கொண்டாள். தூக்கம் வராத சலீமா கிழங்கள் என்னதான் செய் கின்றன பார்ப்போமே என்று அடுத்த அறைக்கு வந்தாள். கதவு கள் சரியாக சாத்தப்படவில்லை. சே.... தலை குனிந்து கொண் டாள். சப்ருல்லாகான் அக்தாவின் கைகளுக்கு சொடுக்குப் போட் டுக் கொண்டிருந்தான். "என்ன நாளைக்கு சலீமாவைக் கேட்டுச் சொல்லுகிறாயா? உனக்கும் உதவியாய் இருக்கும். நான் தாவணி கொடுக்கும் பொழுதே முடிவு செய்து விட்டேன். அவள் எனக்கு பீவி' ஆக வரவேண்டும் என்று. நான் அவளை எப்பொழுதும் கூப்பிட வேண்டும் என்றுதான் சலீமா என்று பெயர் சூட்டினேன். நான் கேட்பதில் ஆட்சேபனை இல்லை. பொண்ணு புதிசு, வயது வித்தியாசம். நிக்காஹ் என்றால் மருண்டு விடப் போகிறது! என்றாள். "அக்தா வேறு யாராவது வந்து நிக்காஹ் செய்து கொள்கிறேன் என்று நம்மிடமே கேட்டு விடப் போகிறார்கள். அதற்காகத்தான் சொல்லுகிறேன் என்றான் சப்ருல்லாகான்.

"இரண்டு மூன்று நாட்களாக நச்சரித்துக் கொண்டே இருக் கிறீர்களே, பொழுது விடிந்ததும் கேட்டு விடுகிறேன். சரி...சரி...

செடுக்நப் போதும் நையை விடுங்கள். சலீமாவிடம் பிறகு போட்டுக் கொள்ளலாம்''.

பக்குவமாகச் சொல். அவள் சேர்ந்துள்ள மதத்தில் ஆண்டுகள் இரண்டு மூன்று பேரை திருமணம் செய்து கொள்ளலாம் என்று கூறு. காரியம் கை கூட வேண்டும் ஆமாம்'' - சப்ருல்லாகான் குழைந்தான்.

கிழங்களின் பேச்சுகளைக் கேட்டதும் சலீமாவின் உச்சந்தலையில் தேள் கொட்டியது போல இருந்தது. கொதிக்கும் கொப்பரைக்குள் விழுந்த உயிரின் வேதனையை அனுபவித்தாள். மரங்கள் தலைகீழாக நிற்பது போல தலைசுற்றியது. இன்னும் சூரியன் வெளிச்சத்தை உமிழவில்லை. சப்ருல்லாகான் தனக்களித்ததாவணியை சுருட்டி எறிந்தாள் தன் தாவணியைத் தேடினாள், கிடைக்கவில்லை. வெளியில் ஓசைப்படாது மெல்ல வந்து குப்பைக்கருகில் வந்து அக்மா விசி எறிந்த மயில் மீதுள்ள முருகனைத் தேடினாள். அந்த முருகன் டாலர் மூட்டை ஓடுகளுக்கிடையே அழுக்கேறி கிடந்தது. அழுக்குகளைத்துடைத்துப் பார்த்தாள். மயில்மீது முருக அருளொளி விசிக்கொண்டிருந்தான். அவன் கையில் உள்ள வேல் நானிருக்கபயமேன் என்பதுபோல சொல்லிக்காட்டியது. நேமத்தான் பட்டி மக்கள் எழுந்து அவளைப் பிடித்துக் கொள்வதற்கு முன் ஆதனூர் நோக்கி ஓடமுடிவுசெய்து மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க தன் ஊர் நோக்கி ஓடினாள். அதோ அம்மன் கோவில் வந்துவிட்டது. அம்மன் கோவில் கோபுரக் கலசம் தெரிந்ததும் முன்னைவி தைரியமாக ஓடினாள். கோவிலுக்கு அருகில் வந்துவிட்டா ஆமாம், அதோ, அங்கே அவள் மாமன் வடிவேலு வழக்கம்பே பிரகாரம் வந்து கொண்டு இருக்கிறான். ''மச்சான், மச்சான்'' என கதறிக் கொண்டு அம்மன் கோவிலை நோக்கி அல கொண்டு ஓடிவந்தாள். அறிந்த குரலாக இருக்கிறதே எ வடிவேலு திரும்பிப் பார்த்தான். தலைவிரிகோலமாக கண்ண ஓடிவந்து கொண்டிருந்தாள். அவள் ஓடிவரும் திசையை நோக்கி வடிவேலுவும் ஓடி வந்தான்.

அருகில் வந்ததும் மச்சான் என்னை...தொடர்ந்து சொல்ல முடியாமல் அவன் அகலமான மார்பில் சாய்ந்து கேவிக்கேவி குமுறி அழுதாள். சேயை அணைக்கும் தாய் போல அவளை அணைத்துக்கொண்டான். அவள் தலையை வருடிய அவன் அவள் முகத்தைப் பார்த்தான். வடிவேலு அம்மன் கோவிலில் தன் நெற்றியில் இட்ட குங்குமம் அவள் நெற்றியில் அழகாக பூரணசந்திரன் போல விழுந்திருந்தது.